# என்னைத் தவிர...

## 1

கிருஷ்ணகுமார்

மஞ்சள் கரை போட்ட மதுரை சுங்கடியில் மரூன் நிறச் சுரிதார். காதுகளில் ட்ராப்ஸ் ஆடின. இடது கையில் கட்டிய சின்னக் கைக்கடிகாரம். லைட் ஷேடாகப் போட்டிருந்த உதட்டுச் சாயமும், சுரிதாரின் நிறத்தில் பூசியிருந்த நெயில் பாலிஷும் அவள் மேனியின் வண்ணத்துக்கு எழில் கூட்டின. அலையாய்ப் புரண்ட பட்டுக் கூந்தலுக்கு இணையாக, பாதங்களில் மெல்லிய கொலுசு ஓசைப் படாமல் தவழ்ந்தது. கோலாப்பூர் செருப்புக்கள் ஆழ்ந்த பழுப்பு வண்ணத்தில் பளபளத்தன.

''வரேம்ப்பா, வரேம்பா,'' என்று சொல்லிக் கொண்டு, தெருவில் இறங்கினாள் சுபா.

''ஹாண்ட்பாக்கில் பணம் எடுத்து வச்சிட்டிருக்கியா?'' என்றார் சடகோபன்.

''இருக்குப்பா.''

''சீக்கிரமா வந்துடு. நாழியாச்சுன்னா நான் தவிச்சுப் போயிடுவேன்,'' என்றாள் கோமளம்.

''நல்லா தவி! நான் அப்படியே இமயமலைப் பக்கம் போயிடப் போறேன்!'' என்றாள் சுபா. அம்மாவின் முகத்தில் கலவரத்தைக் கண்டு சிரிப்பு வந்தது. ''சுத்தக் கிராக் அம்மா நீ!'' என்று சொல்லி, தாயின் கன்னத்தில் முத்தமிட்டாள்.

''சீ போ! மூஞ்சியெல்லாம் எச்சில்!'' என்று துடைத்துக் கொண்டாள் கோமளம்.

அடுத்த வீடு வரை போய்விட்ட சுபா ஒரு திரும்பு திரும்பி, புன்னகையுடன் கையை வீசி ஆட்டிக் காட்டிவிட்டு, பையை அந்தத் தோளிலிருந்து இந்தத் தோளுக்கு மாற்றிக் கொண்டு நடந்தாள். கூந்தலில் பிற்பகல் வெய்யில் பட்டு, வைரப் பொடிகளாய் மினுமினுத்தது.

அவள் தெருக் கோடியில் திரும்பும் வரை வாசலிலேயே நின்றிருந்தார்கள் இருவரும்.

கோமளம் கண்ணாடியைக் கழற்றி, புடவை நுனியினால் கண் முனைகளை ஒற்றிக் கொண்டாள். அவள் என்ன பேசப் போகிறாள் என்று சடகோபனுக்குத் தெரியும். அதற்கு இடம் கொடுக்கக் கூடாதென்று, ''உள்ளே வா. இங்கே நின்னிட்டிருந்தால் எதிர் வீட்டுக் கோதண்டம் பிடிச்சுப்பான். அவனோட கலர் டி.வி. புராணத்தைக் கேட்டுக் கேட்டு என் காது புளிச்சுப் போயிட்டுது,'' என்றார்.

ஆனால் கோமளம் தன் சிந்தனையிலேயே மூழ்கியிருந்தாள். ''தங்கக் கொடியாட்டம் குழந்தை... தெய்வம் இப்படிச் சோதனை செய்கிறதே!''

அது காதில் விழாத மாதிரி கேட்டின் கொக்கியை மாட்டினார் அவர். இரண்டு ஓரங்களிலும் கனகாம்பரமும் ரோஜாவும் போகன்வில்லாவும் நோஞ்சான்களாய்க் காற்றில் ஆடிக் கொண்டிருந்தன. ''நூத்தைம்பது ரூபாய்

கொடுத்து இதெல்லாம் வாங்கி வந்து வைச்சதுதான் மிச்சம். அத்தனையும் தண்டம். ஒரு பூ பூக்கறதுக்கு நூறு தேங்காய் உடைக்க வேண்டியிருக்கு பிள்ளையாருக்கு!''

அப்போதும் கோமளத்தின் எண்ணம் திரும்பவில்லை.

''என்னவோ பி.ஸி.எல்.லுக்குப் போயிட்டு வரேன்னனே? பி.ஸி.எல்.ன்னு என்ன?'' என்றாள்.

''பிரிட்டிஷ் கவுன்சில் லைப்ரரின்னு அர்த்தம். ஒரு பி.காம். பெண்ணோட அம்மாவா இருந்திட்டு இதுகூடத் தெரிஞ்சுக்காமல் இருக்கிறியே? சரி, உள்ளே வா. வெயில்லே ஏன் நிக்கறே?''



கோமளம் கேட்டைத் திறந்துகொண்டு மறுபடி வாசலுக்குப் போனாள். தெருவில் அவர்கள் வீடுதான் கடைசி. அடுத்து ஒரு பிள்ளையார் கோவில். அதைப் பார்த்துக் கன்னத்தில் போட்டுக் கொண்டாள். ''பிள்ளையாரப்பா, நீதாண்டாப்பா குழந்தையோட குறையைத் தீர்க்கணும்.

இந்தப் பட்டணத்தில் நூறு கோவில்கள் இருக்கு. ஆயிரம் தெய்வங்கள் இருக்கு. ஆனால் உன் ஒருத்தனிடம்தானே சுபா வர்றாள்? நீதான் அவளுக்குத் துணை,'' என்று வாய்விட்டு வேண்டிக் கொள்வது சடகோபனுக்குக் கேட்டது. ''இப்படித் தினம் தினம் பிள்ளையாரைக் குடைஞ்சியானால் சொல்லாமல் கொள்ளாமல் ஒரு நாள் ஓடிடப் போறார், பார்!'' என்று வேடிக்கை பண்ணப் பார்த்தார். கோமளம் சிரிக்கவில்லை.

ஹாலில் மாட்டியிருந்த சிறிய ஊஞ்சலில் போய் உட்கார்ந்தார். ஊஞ்சலின் சங்கிலியைப் பிடித்த போது அதன் சிலீரென்ற குளிர்ச்சி மனத்துக்கு இதமாயிருந்தது. கொஞ்ச நேரம் பிடித்துக் கொண்டிருந்ததும் குளிர்ச்சி மறைந்து உஷ்ணம் ஏற்படவே சங்கிலியில் அந்த இடத்தை விட்டு இன்னோர் இடத்தைப் பிடித்து மறுபடியும் குளிர்ச்சியை ரசித்தார்.

கோமளம் சுவரில் மாட்டியிருந்த சுபாவின் புகைப்படத்தைப் பார்த்தபடி நின்றாள். பட்டதாரி உடை மகளின் அழகுக்கு அழகு செய்வதாக இருந்தது.

''நீங்க பாட்டுக்கு அவளைத் தனியா போயிட்டு வரச் சொல்கிறீர்களே, பரவாயில்லையா?''

''ஒண்ணும் ஆகாது. கவலைப் படாதே. எதுவும் தெரிந்தது மாதிரி காட்டிக்கக் கூடாதுன்னு எத்தனை தடவை நான் சொல்லிட்டேன்?'' என்றார் அவர். ''ஏற்கெனவே ஏன் எம்.காமுக்கு என்னைப் படிக்க வைக்கலைன்னு அவள் கேட்டேயிருக்காள். இப்படி லைப்ரரி, சினேகிதிகள் வீடுன்னு போயிட்டு வந்திட்டு இருக்கட்டும். ஏதாவது கோளாறுன்னா கூட ராத்திரி வேளையிலே தானே ஏற்படறது? அப்ப ஜாக்கிரதையாயிருந்தால் போதும்.''

கணவனின் அழுத்தமான பேச்சு கோமளத்தின் மனச் சுமையைக் கொஞ்சம் குறைத்தது. உங்க பெரியப்பா ஊரிலிருந்து வந்திருக்கார்னு சொன்னீர்களே? அவரைப் பார்த்துவிட்டு வாருங்களேன். பெரியவர் ஏதாவது யோசனை சொன்னாலும் சொல்வார்... சுபாவைப் பத்தி அவருக்கு எல்லாம் தான் தெரியுமே... கல்யாணம் கில்யாணம் ஏதாவது யோசனை பண்ணலாமான்னு....''

''ஹூம்! உனக்கு ரொம்பத்தான் பேராசை!'' விரக்தியாகச் சிரித்தார் அவர். ''ஏன் கோமளம், இப்ப ரெண்டு மூணு மாசமிருக்கும் இல்லியா?''

''எதுக்கு?''

''சுபாவுக்கு அந்த இது.... வந்து?''

''நாளை ஏழாம் தேதியோடு இரண்டு மாசம் ஆகிறது. அன்னிக்கு நீங்க கூடச் சபாவிலே ஏதோ டிராமான்னு போயிட்டு மழையிலே நனைஞ்சிட்டு வந்தீங்களே.... அன்னிக்கு ராத்திரி.....''

''இரண்டு மாசமாய் ஒண்ணும் இல்லேயில்லே? இனிமே சரியாயிடும். வாரா வாரம் அது வந்தது போல், அப்புறம் பதினைந்து இருபது நாளைக்கொரு தரம்னு குறைஞ்சு இப்ப இரண்டு மாசமாகிறது..... இப்படித்தான் கொஞ்சம் கொஞ்சமாய்ச் சரியாயிடும்னு டாக்டர் கூடச் சொல்லியிருக்கார்.'' அவர் சட்டையை மாட்டிக் கொண்டார். ''சரி, நான் பெரியப்பாவைப் பார்த்துட்டு வரேன்.''

கோமளம் பீரோவைத் திறந்து சாக்லேட் டப்பாவிலிருந்து மூன்று பத்து ரூபாய் நோட்டை எடுத்து வந்து கொடுத்தாள். ''பணத்தைப் பார்க்காமல் ஆட்டோவிலேயே போய்விட்டு ஆட்டோவிலேயே வந்துடுங்க. நீங்க வந்து சொல்ற வரைக்கும் எனக்கு இருப்புக் கொள்ளாது.''

''இதோ பார், மனசிலே அனுவசிய நம்பிக்கையெல்லாம் வளர்த்துக்காதே. தெய்வம் என்ன நினைச்சிருக்கோ அப்படித்தான் நடக்கும்.''

''ஆமாம்! புறப்படற போதே அஸ்து பாடிக் கொண்டு புறப்படுங்க! நம்பிக்கையோடு போனால்தானே நல்ல சேதியா கிடைக்கும்?''

மனைவியைப் பரிதாபத்துடன் பார்த்தபடியே அவர் கிளம்பினார்.

நடையில் செருப்புக் கழற்றிப் போடப்படும் ஓசை கேட்டது. கோமளம் கைவேலையை அப்படியே போட்டுவிட்டு வாசல் பக்கம் வந்தாள்.

''என்ன சொன்னார்?''

''கல்யாணம் கில்யாணம் எதுவும் இப்போதைக்கு வேண்டாம் என்கிறார்.'' மனைவியின் முகத்தைப் பார்க்கத் தெம்பில்லாமல் பேசினார் சடகோபன். ''அத்தோட.....''


"ஒத்தை மாத்திரை...
'மடக்,'
ஒடுச்சு தலைவலி...
சடக்!"
EXTRA STRENGTH ASPRO 600
Strong Sure Speedy
புதிது
எக்ஸ்ட்ரா ஸ்ட்ரெங்த்
ஆஸ்ப்ரோ
600
கண்டதில்லை இதுபோல் வலியாற்றும் சக்தி–
ஒரே மாத்திரையில் நிவர்த்தி.
அதி வீரிய சக்தி : எக்ஸ்ட்ரா ஸ்ட்ரெங்த் ஆஸ்ப்ரோ 600-- தலைவலி விரட்ட,
உலகிலேயே வல்லாதி வல்ல மருந்து. 600 மில்லி கிராம் அடங்கியது.
சம்பூரண குணம் 'சடக்'கெனக் கிடைக்கும்.
எக்ஸ்ட்ரா ஸ்ட்ரெங்த்
ஆஸ்ப்ரோ 600
அதிவேக சக்தி, ஆற்றிட உறுதி.
daCunha/AS/10/83/TM

"அத்தோட?"

கோமளம் கண்ணைத் துடைத்துக் கொண்டிருக்கையில் அவர் ஊஞ்சல் சங்கிலியைப் பிடித்தபடி சற்று நேரம் மௌனமாயிருந்த பின், "சுபாவுக்குக் கல்யாண ஆசை அது இதுன்னு மனசில் சலனம் ஏற்படாதபடியும் பார்த்துக்கொள் என்றார். 'நம்ம சுபா அப்படியெல்லாம் தப்பான வழிக்குப் போயிட மாட்டாள். இருந்தாலும் இந்தக் காலத்துப் பெண்களைப் பத்தி ஒண்ணும் சொல்ல முடியாது. காதல் கீதல்னு ஏற்பட்டுடப் போறது, ஜாக்கிரதையாய் இரு,' அப்படின்னு சொன்னார்."

"மொத்தத்தில் வயது வந்த பொண்ணுக்கு எதெல்லாம் இயற்கையோ அதெல்லாம் கூடாதுங்கறார்! ஏதோ லைப்ரரி, சிநேகிதிகள் வீடு, சினிமா, டிராமான்னு போயிட்டிருக்காள் இல்லையா, அதுவும் கூடாதுங்கறார். வீட்டிலேயே பூட்டி வைச்சுக்குங்கன்னு சொல்றார்? அவ்வளவுதானே?" அழுகை முட்டிக் கொண்டு வர, தொண்டை கட்டிக் கொண்டது அவளுக்கு.

அவர் அவளுடைய புலம்பலைத் தடுத்த நிறுத்தத் தெரியாமல் நின்றிருந்தார்.

என்னவோ நடக்கக் கூடாதது நடந்து கொண்டிருக்கிறது என்ற உள்ளுணர்வு எழுப்பி விட்டதோ என்னவோ—

திடீரென்று கோமளத்துக்குத் தூக்கம் விழித்தது.

தன் கையோ காலோ அருகில் படுத்திருக்கும் சுபாவின் மீது படவில்லை என்பதை உணர்ந்ததும் குபீரென்று எழுந்து உட்கார்ந்தாள். தலைமாட்டில் வைத்திருந்த மூக்குக் கண்ணாடியை மாட்டிக் கொண்டு பார்த்தாள்.

சுபாவைக் காணவில்லை.

மாடியில் அவளுடைய அறையில் விளக்கு எரிகிறது. மாடிப்படியில் அதன் வெளிச்சம் தவழ்ந்து கொண்டிருக்கிறது.

"உங்களைத்தானே?" அவசர அவசரமாக, ஆனால் தாழ்ந்த குரலில், ஊஞ்சலில் தூங்கிக் கொண்டிருந்த கணவனை எழுப்பினாள்.

"என்ன? என்ன?" என்று கண்ணைக் கசக்கிக் கொள்ளும்போதே சடகோபனுக்குப் புரிந்து விட்டது மனைவி

## சிந்தனைக் கிண்ணம்

பொய்யைக் காட்டிலும் உண்மையைச் சொல்வது மேல் என்று நம்புகிறேன். அடிமையாக இருப்பதைக் காட்டிலும் சுதந்திரமாக இருப்பது மேல் என்று நம்புகிறேன். அறியாமல் இருப்பதைவிட அறிவதுமேல் என்று நம்புகிறேன்.

—ஹெச்.எல். மெஸ்கென்.

நீங்கள் பிரார்த்தனை செய்யும்போது கடவுள் அதைக் கேட்க வேண்டும் என்றால், அவர் பேசும் போது நீங்கள் கேட்க வேண்டும்.

—டி. புரூக்ஸ்.

கடவுளால் எல்லா இடத்திலும் இருக்க முடியவில்லை. ஆகவேதான் தாயை உண்டு பண்ணினார்.

—யூதப் பழமொழி.

பளிங்கில் செதுக்கினோமானால், அது அழிந்து போகும். பித்தளையில் பொறித்தால்; காலம் அதை அழித்துவிடும். கோவில்களை எழுப்பினால் அவை இடிந்து தூளாகும். மனங்களில் நீதியையும் நேர்மையையும் ஏற்றினால், அவற்றைக் காலம் அழிக்க முடியாது. மேலும் மேலும் பொலிவு பெறும்.

—டானியல் ருஸ்டர்.

பொருள்களை அவற்றின் சரியான பெயர்களைக் கொண்டு அழைக்க வேண்டும். "பிராந்தியும் தண்ணீரும் ஒரு கிளாஸ்!" அதுதான் இன்று பயன்படுத்தப்படும் பொருத்தமில்லாத பெயர். "ஒரு கிளாஸ் அக்கினித் திராவகமும், வடிகட்டின ஓரகமும்!" என்று கேளுங்கள்.

—ராபர்ட் ஹொால்.

மேலோனின் வாழ்க்கை முறை மூன்று தன்மையுடையது. ஒழுக்கமானவன், ஆகவே அவனுக்குக் கவலைகள் இல்லை. அறிவாளி, ஆகவே அவனுக்குக் குழப்பங்கள் இல்லை. துணிவுள்ளவன், ஆகவே அவனுக்கு அச்சம் இல்லை.

—கன்பூஷியஸ்.

மற்ற மனிதர்கள், கட்டாயத்தின் காரணமாகவோ பயத்தின் விளைவாகவோ செய்வதை நான் விரும்பிச் செய்யக் கற்றுக்கொள்வதே கல்வி.

—அரிஸ்டாட்டில்.



'முதலிரவு' முடிந்த மறு நாள் காலை:

அம்மா: ''கலா, சீக்கிரம் எழுந்து குளிச்சிட்டுக் கோயிலுக்குப் போயிட்டு வாங்க!''

மகள்: ''இரும்மா. இப்பத்தான் இவர் இங்கே வெச்சிருக்கிற பழத்தையெல்லாம் சாப்பிட ஆரம்பிச்சிருக்கார்!''

—லதா வசந்தமூர்த்தி

---

எதற்கு எழுப்பியிருப்பாளென்று. ''ஐயய்யோ! மறுபடியுமா?'' என்றார்.

''ஆமாம். இப்பத்தான் எழுந்து போயிருப்பாள்னு தோணறது. வாங்க.'' மாடிப்படியில் ஓசைப் படாமல் ஏறினாள் கோமளம்.

''ஜாக்கிரதை. அவளை ஒண்ணும் டிஸ்டர்ப் பண்ணக் கூடாது...'' அவள் காதருகே எச்சரித்தார்.''

மாடி அறையில் ஜன்னல் பக்கமாகத் தெருவைப் பார்த்தபடி நின்றிருந்தாள் சுபா. அவளுடைய வாளிப்பான முதுகுப் புறம்தான் அவர்களுக்குத் தெரிந்தது.

அவள் நிலைக் கண்ணாடியின் முன் திரும்பினாள். அருவி போல் பரந்து விரிந்திருந்த கூந்தலை அடக்கி முடிந்து கொண்டாள். அலமாரியிலிருந்த சம்புடத்திலிருந்து திருநீறு எடுத்து நெற்றியில் ஒரு கீற்று இட்டுக் கொண்டாள். கீழே குங்குமப் பொட்டு வைத்துக் கொண்டாள். அடக்கமாகப் புடவைத் தலைப்பை மார்பின் மீது இழுத்துப் போர்த்திக் கொண்டாள்.

சட்டென்று இருவரும் இருட்டுக்கு நகர்ந்து கொண்டார்கள். ஆனால் எதிரிலேயே போய் நின்றிருந்தால்கூடச் சுபா லட்சியம் பண்ணியிருக்க மாட்டாள் என்று தோன்றியது. நேரே கீழே இறங்கி, சமையல் கட்டுக்கு நடந்தாள். சுவாமி படங்கள் வைத்திருந்த அலமாரியிலிருந்து சிறிய அகல் விளக்கை எடுத்தாள். எண்ணெய் ஊற்றி, திரியைத் தூண்டி, நெருப்புக் குச்சியைக் கிழித்து விளக்கேற்றினாள். காற்றில் அது அணைந்து விடாதபடி புடவைத் தலைப்பால் போர்த்திக் கொண்டு வெளியே வந்தாள்.

வாசல் கதவைத் திறந்து கொண்டு தெருவுக்குச் சென்றாள்.

கோமளமும் சடகோபனும் பெருமூச்சு விட்டார்கள். ''கோளாறு போய்விடும்னு நினைத்திருந்தோமே? போகலியே?'' என்றார் சடகோபன். மகளைத் தொடர்ந்து வாசலுக்குப் போனார்கள் இருவரும். ஏதும் பேசவில்லை.

பிள்ளையார் கோயிலின் முன்னே விளக்கை வைத்துவிட்டு, விழுந்து விழுந்து நமஸ்காரம் செய்ய ஆரம்பித்தாள் சுபா.

ஒன்று, இரண்டு, மூன்று—

அவள் விழுந்து விழுந்து எழுந்து கொண்டிருந்தாள், முடிவில்லாமல். உடம்பு களைத்து, கைகள் தள்ளாடி, வியர்வை பெருகும் வரை நமஸ்காரம் செய்து கொண்டேயிருந்தாள்.

கைகால் சோர்ந்து எந்த நிமிஷமும் மயங்கி விழுந்து விடுவது போல் அவள் உடம்பு தள்ளாடுவதைக் கண்டு கோமளத்துக்குத் தாளவில்லை. தாவி அணைத்துக் கொள்ள ஓரடி எடுத்து வைத்தவளை, வேண்டாம் என்று தடுத்து விட்டார் சடகோபன்.

எண்ணெயில்லாத விளக்கு மங்குகிற மாதிரி நமஸ்காரங்களின் வேகம் சிறிது சிறிதாக அடங்கியது. சுபா ஓய்ந்தாள். குனிந்தது குனிந்தபடி, உடம்பு மடங்கியது மடங்கியபடி சில நிமிடங்கள் அசைவற்று இருந்தபின் எழுந்தாள்.

குளித்து எழுந்த மாதிரி தேகம் வியர்வையில் நனைந்திருந்தது. விளக்கை எடுத்துக் கொண்டாள். வீட்டுக்குள் திரும்பினாள். பழைய இடத்தில் அதை வைத்து விட்டுப் படுக்கைக்கு வந்தாள்.

அவளுக்கு முன்பேயே ஏதும் அறியாதவள் போல் கோமளம் படுத்திருந்தாள். கண்ணை மெல்லத் திறந்து பார்த்த போது, மகளின் உடம்பில் அதுவரை இருந்த அமானுஷ்யமான விறைப்புக் கொஞ்சம் கொஞ்சமாய் தளர்வதும், மூச்சு செயற்கையாய் படபடக்காமல் இயற்கையாக் இழைவதும் தெரிந்தது.

'தெய்வமே! இன்னும் எத்தனை நாளைக்கப்பா இந்தச் சோதனை!' என்று சொல்லிக் கொண்டு மகளை அணைத்துக் கொண்டாள்.

சடகோபன் மட்டும் இரு கை


சிறுவரே, வாருங்கள்!
சேருங்கள்!
பூஸ்ட்
ரயில் புதையலைத் தேடுங்கள்!
இலவசம்
கண்கவரும் ரயில் படங்கள்
மேலும்
இலவசம்
ரயில் பட ஆல்பம்
நீங்கள் 2 படங்கள் சேர்த்தவுடன்
The Boost Train Album
ஒவ்வொரு 500 கிராம் பேக்குடன் ஒன்று
ஒவ்வொரு முறையும் பூஸ்ட் வாங்கும் பொழுது உங்களுக்கு ஓர் அரிய பரிசு! விவரங்கள் 500 கிராம் ஜாடி லேபிளின் பின்புறமும், 500 கிராம் ரீஃபில்லின் மறுபுறமும் தரப்பட்டுள்ளன. ரயில் புதையலை விரைந்து தேடுங்கள்!
நெஞ்சையள்ளும் ரயில் படங்கள் சொல்லும் கதைகளுடன் 12 பக்க ஆல்பம்
Boost
MALT CHOCOLATE MILK DRINK
FREE!
SUPER TRAIN CARD INSIDE
SAVE Rs.1.50
துடிதுடிப்புடனும், ஊக்கத்துடனும் விளங்க சக்தியளிக்கும் எரிபொருள்.
8341 T R

களையும் மோவாயில் தாங்கியபடி கவிழ்ந்து உட்கார்ந்திருந்தார் வெகு நேரத்துக்கு.

விடிந்தது. இரவு முழுவதும் தூங்காததால் சிவந்து கனத்திருந்தன சடகோபனின் கண்கள். வாசலுக்கு வந்தார்.

'பொறுப்பில்லாத தடி ராஸ்கல்! அப்படியே ஈரத்தில் போட்டுவிட்டுப் போயிருக்கான்!' என்று திட்டிக் கொண்டே நடையில் கிடந்த பேப்பரை எடுத்து வேட்டியில் மெல்ல ஒற்றிக் கொண்டார்.

பால் பைகளுடன் மூன்று வேலைக்காரிகள் வீட்டெதிரே தெருவில் நின்று பேசிக் கொண்டிருந்தார்கள்.

'ஏய்! அவனவன் காப்பிக்காகத் தவிச்சிட்டிருப்பான்கள். உங்களுக்கு இங்கே வம்பளப்பா!' என்று சத்தம் போட்டார். வேலைக்காரிகள் சிரித்துக் கொண்டே கலைந்தார்கள்.

ஆட்டோவொன்று படபடக்கும் சத்தம் தொலைவிலிருந்து நெருங்கி நெருங்கி வந்தது. யார் வீட்டுக்கு யார் வருகிறார்கள்? நின்று கவனித்தார்.

ஆட்டோ அவர் வீட்டு வாசலிலேயே நின்றது.

இடது கையில் சூட்கேஸும் வலது தோளில் பெரிய பிளாஸ்டிக் பையுமாக ஓர் இளைஞன் இறங்கினான்.

''ஹலோ மாமா!'' உற்சாகமாய் அவன் உள்ளே வந்தான்.

இவன்? இவன்?

''என்ன மாமா அப்படிப் பார்க்கறீங்க? என்னைத் தெரியலே? மனோஜ். ஸ்ரீரங்கம். உங்க சினேகிதர் ராமானுஜத்தின் பிள்ளை...''

அவருக்கு நினைவு வந்தது.

''அட, மனோஜா? பார்த்து நாலு வருஷமாகிறது. அடையாளமே தெரியலே!'' உள்ளே திரும்பிப் பார்த்து, ''கோமளம், இங்கே வந்து பார் யார் வந்திருக்காங்கன்னு,'' என்று அழைத்தார்.

மனோஜை அடையாளம் தெரிந்து கொள்ளக் கோமளம் சிரமப்படவில்லை. ''வாப்பா, ஊரிலேயிருந்துதான் வர்றயா?''

''நேரே ஸ்ரீரங்கத்திலிருந்து வந்து, நேரே எழும்பூரில் இறங்கி, நேரே இங்கே வர்றேன். சுபா எங்கே? இன்னுமா தூங்குகிறாள் சோம்பேறி?''

''அம்மா அப்பாவெல்லாம் சௌக்கியமா?'' என்றார் சடகோபன்.

''சௌக்கியம்னா சௌக்கியம் படா சௌக்கியம். ஒவ்வொருத்தரையும் அழிச்சா எட்டு ஆள் பண்ணலாம்,'' என்றான் அவன். ''அப்பா இதைக் கொடுக்கச் சொன்னார் உங்ககிட்டே.'' ஒரு கடிதத்தை நீட்டினான்.

அவர் பிரித்தார். உரக்கவே படித்தார்.

''அன்புள்ள சடகோபனுக்கு, அனேக நமஸ்காரம். உங்களுக்குத் தொல்லை கொடுப்பதற்கு மன்னிக்கவும். மனோஜுக்குத் திடீரென்று மெட்ராசுக்கு மாற்றலாகிவிட்டது. ஓட்டல் ஜாகை, ஓட்டல் சாப்பாடெல்லாம் அவனுக்கு ஒத்துக்கொள்ளாது. ஆகையால் உங்கள் வீட்டில் தங்கியிருக்கும்படி சொல்லியிருக்கிறேன். மாடி அறையை ஒழித்துக் கொடுத்தால் அவன் இருந்து கொள்வான். அனாவசியமான கூச்ச நாச்சங்கள் காட்டாமல் அவன் தருகிற பணத்தையும் பெற்றுக்கொள்ள வேண்டும். நம்முடைய பழைய சினேகிதத்தை ஞாபகம் வைத்துக் கொண்டு இந்த உதவியைச் செய்யும்படி கேட்டுக் கொள்கிறேன். தங்கள் மனைவியையும் சௌ. சுபாவையும் நான் மிகவும் விசாரித்ததாகச் சொல்லவும்.

அன்புடன்
ராமானுஜம்.''

''மாடிக்கு வழி எது மாமா? இல்லே, இங்கிருந்தே ஜம்ப் பண்ணட்டுமா?'' என்றான் மனோஜ்.

மனைவியைப் பார்த்தார் சடகோபன்.

(தொடரும்)

---

''என்னத்துக்குப் பட்டாசுக் கட்டு, தீப்பெட்டியோட ரெடியா வாசலிலே நிக்கறீங்க?''

''உள்ளே என் மனைவிக்கும் எங்கம்மாவுக்கும் பயங்கரச் சண்டை நடக்குது. என் மனைவி சண்டையிலே வெற்றியடைஞ்சாப் பட்டாசு வெடிச்சுக் கொண்டாடணும்னு அவள் உத்தரவு!''



—எம்.பி.




ரஜினியைச் சுற்றியுள்ள இந்த இருபத்திரண்டு நட்சத்திரங்களில் ஐந்து பேர் மட்டும் அவருடன் ஜோடியாக நடித்ததில்லை.

எந்த ஐந்து பேர் அவர்கள்?

விடை: 60'ம் பக்கம்

கூண்டின் மூங்கிலைப் பிடித்துத் தொங்கி ஒரே எக்கில் கூண்டிற்குள் ஏறி உட்கார்ந்துவிடவே அந்த அதிர்ச்சியில் வழுக்கு மரம் சற்றுக் குலுங்கியது.

ஒரே கைதட்டல் காதைப் பிளந்தது. கண்ணம்மா கைதட்டிக் கொண்டு குதித்தாள்.

'குதிக்கிறயாடி! இப்பப் பாரு வீரையா செத்து விழப் போறுன்!' என்று ஆத்திரத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான் தங்கதுரை.

வீரையா ஜெயித்து விட்டோம் என்ற இறுமாப்பில் கூண்டில் உட்கார்ந்தவாறு ஆடினுன். சுற்றியிருந்த பூச்சரங்களைப் பிய்த்துக் கூட்டத்தில் எறிந்தான்.

'செய்டா செய்! பானையைத் தொட்டாலல்லவா உனக்கு எமன் இருக்கிறது தெரியும்!'

வீரையா உறியில் தொங்கிய முதல் பானையை எடுத்துப் பாலைப் பருகி விட்டுத் தூக்கி எறிந்தான். இரண்டாவது பானையில் மோரைச் சிறிது குடித்துவிட்டு தன் சகாக்கள் பக்கம் போட்டான். பிறகு தங்கதுரையைப் பார்த்தவாறு எக்காளமாகக் குதித்தான்.

'சீக்கிரம் நாலாவது பானைக்கு வாடா! அங்கேதான் உன் ஜாதகமே இருக்கு! சீக்கிரம் எடுடா!' தங்கதுரை பதற்றத்துடன் கவனித்துக் கொண்டிருந்தான்.

வீரையா மூன்ருவது பானையில் இருந்த வெண்ணெயைச் சிறிது எடுத்து வாயில் வைத்துக் கொண்டு, பிறகு அந்தப் பானையையும் கீழே போட்டுவிட்டு விரலை மடித்து வாயில் வைத்துக் கொண்டு விசிலடித்தவாறு ஆடினுன். வழுக்கு மரம் குலுங்கத் தொடங்கியது.

ஆடியவாறே நாலாவது பானையை எடுத்.....

அவ்வளவு நேரம் வீரையாவின் ஆட்டத்தைத் தாங்கிய அந்த மரம் உளுத்துப் போன இடத்தில் படீரென்று முறிந்தது.

வீரையா, கூண்டு, உறியில் இருந்த பானை சகிதமாக அவ்வளவு உயரத்திலிருந்து விழுந்தான்.

கூட்டமே அலறத் தொடங்கியது.

கண்ணம்மா 'குய்யோ முறையோ' என்று கத்திக் கொண்டு வீரையா விழுந்த இடத்தை நோக்கி ஓடினுள்.

வீரையா தங்கதுரையின் மேலோ, நாற்காலியின் மேலோ விழாமல் சற்று மணற்பாங்கான இடத்தில் விழுந்ததால் நல்ல வேளையாக அடி ஒன்றும் பலமில்லை. நாலைந்து இடங்களில் சிராய்ப்பு—ரத்தம் ஒழுகியது.

கண்ணம்மா வீரையாவைக் கட்டிக் கொண்டு அழுதாள். ''கண்ணம்மா! எனக்கு ஒண்ணும் இல்லை. அழாதே!'' என்று அவளைச் சமாதானப் படுத்தினுன்.

அதே நேரத்தில் தங்கதுரை உட்கார்ந்திருந்த இடத்தைச் சுற்றிக் கூட்டம் கூடி இருப்பதைப் பார்த்து, கண்ணம்மாவை விலக்கிவிட்டுக் கூட்டத்திற்குள் புகுந்து பார்த்தான். அங்கே அவன் பார்த்த காட்சி அவனை அதிர்ச்சிக்குள்ளாக்கியது.

தங்கதுரையின் உடல் நீலம் பாரித்து, கண்கள் நிலை குத்தியிருந்தன. வாயில் நுரை தள்ளியிருந்தது.

''தங்கதுரையைப் பாம்பு கடிச்சிருக்கு சாமி! இவ்வளவு பெரிய கூட்டத்தில் பாம்பு எங்கே இருந்து வந்ததுன்னு தெரியலையே!''

யாருக்குத் தெரியும்—வீரையாவைக் கடிப்பதற்காக தங்கதுரையால் ஏற்பாடு செய்யப்பட்டு நாலாவது பானையில் பட்டுத் துணி, பண முடிப்போடு வைக்கப்பட்டிருந்த அந்த நாகம், கீழே விழுந்த அதிர்ச்சியில் தங்கதுரையைக் கொத்தியது என்று?

## பக்திக்கு நடுவே...

சென்னை வானெலி நிலையத்தில் விவித பாரதியின் வர்த்தக ஒலிபரப்பில், காலையில் அனைத்து மதத்திலிருந்தும் பக்திப் பரவச மூட்டும் பாடல்களை ஒலிபரப்புகிருர்கள். பாராட்ட வேண்டிய விஷயம்தான். ஆனுல் பாடல்களுக்கு இடையே 'வாசக்டமி' விளம்பரம் செய்கிருர்களே. அது சரியா?

—மூர்த்தி

### சென்ற வாரக் கதை:

பி. காம். படித்து முடித்திருக்கும் சுபா எல்லா விஷயங்களிலும் உற்சாகமான, மாடர்னை யுவதியாக இருக்கிருள். ஆனுல் அவள் அம்மா கோமளத்துக்கும் அப்பா சடகோபனுக்கும் அவளைப் பற்றிப் பெரும் கவலை. திடீரென்று இரவில் எழுந்து, வீட்டுக்குப் பக்கத்தில் உள்ள பிள்ளையார் கோவிலுக்குச் சென்று விழுந்து விழுந்து நூற்றுக்கணக்கான நமஸ்காரங்கள் செய்துவிட்டுத் திரும்பி வந்து படுப்பது சுபாவின் வழக்கமாக இருப்பதே காரணம். இப்படிப்பட்ட நிலையில் அவளுக்குக் கல்யாணம் செய்து வைக்கக் கூடாதென்றும் காதல் கீதல் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளும் படியும் சடகோபனை அவர் பெரியப்பா எச்சரித் திருக்கிருர்.

இந்தச் சமயத்தில் ஸ்ரீரங்கத்திலிருந்து மனேஜ் என்ற வாலிபன் வந்து சேரு கிருன். சென்னைக்கு வேலை மாற்றலாகியிருப்ப தால் அவனை வீட்டோடு வைத்துக் கொள்ளும் படி சடகோபனின் நண்பர் ராமானுஜம்—மனேஜின் அப்பா—கடிதம் எழுதியிருக்கிருர்.

## 2

வந்து ஏறத்தாழ ஒரு மாதமாகி விட்டது. மனேஜுக்கு ஏனே இருப்புக் கொள்ளவில்லை. இத்தனைக்கும் அவனுக்கு எல்லா வசதியும் கிடைத்திருந்தன. மாடி அறை, மின்சார விசிறி போடப்பட்டு, நல்ல வெளிச்சமும் காற்றோட்டமுமாக இருந்தது. அறைக்கு வெளியே விஸ்தார மான மொட்டை மாடியும் அதன் ஒரு மூலை யில் ஒரு குழாயும் இருந்தது. துணிமணி களை அங்கே துவைத்து, பக்கத்திலேயே

கொள்ளலாம். தினம் காலையில் வேலைக் காரி வந்து அறையைக் கூட்டிச் சுத்தம் செய்துவிட்டுப் போனுள். பாத்ரூமுக்காக வும் சாப்பாட்டுக்காகவும் மட்டுமே கீழே போனுல் போதும் என்றிருந்தது.

இருந்தாலும் ஏதோ ஒன்று அவன் நெஞ்சை நெருடியது.

யோசித்துப் பார்த்தபோது சட கோபனும் கோமளமும் தன்னிடம் பழகு கிற விதம்தான் என்னவோ போலிருக் கிறது என்று தோன்றியது. ''இந்தா மனேஜ் காப்பி,'' என்று கோமளம் கொண்டு வந்து தரும்போது அதில் அன்பு வெளிப்படவில்லை என்று எண்ணினுன். ''டோபி வந்திருக்கான் மனேஜ். ஏதாவது துணி போடணுமா?'' என்று கீழேயிருந்து சடகோபன் குரல் கொடுக்கும்போது அதில் கடமையுணர்வு தென்பட்டதே தவிர, பிரியம் தெரியவில்லை. ஒரு நாள் வேலைக்காரியிடம், ''என் ரூமைச் சுத்த மாகவே கூட்டவில்லை. கட்டிலுக்குக் கீழே குப்பை அப்படியே இருக்கிறது,'' என்று அவன் கடிந்து கொண்டபோது, வேலைக் காரி அந்தண்டை சென்றதும் கோமளம், ''மனேஜ், இந்தக் காலத்தில் வேலைக்காரி கிடைப்பதே பெரும் கஷ்டமாயிருக்கிறது. கோபித்துக் கொண்டால் வேலையை விட்டே நின்று விடுவார்கள்,'' என்று எச்சரித்தாள். சுருக்கென்றது அவனுக்கு. வேலைக்காரியை நியாயமாகக் கண்டிக்கக் கூடவா தனக்கு உரிமை இல்லை என்று நினைத்துக் கொண்டான்.

ஸ்ரீரங்கத்திலிருந்து கிளம்பும் போதே அப்பாவிடம் சொன்னுன், ''நான் பாட்டுக்கு லாட்ஜில் தங்கிக் கொள்கிறேன்

''இந்த இருபத்தேழு வயதில் நீ ஒரு நாள் கூட எங்களை விட்டுப் பிரிந்து வெளியே சாப்பிட்டது கிடையாது. ஓட்டல் சாப் பாடெல்லாம் உனக்கு ஒத்துக் கொள் ளாது. அதுவும் மெட்ருஸ் ஓட்டல்கள் ரொம்ப மோசம். பேசாமல் நம்ம சடகோபன் வீட்டில் தங்கிவிடு. அவர், அவர் மனைவி, பெண் மூன்றே பேர்தான். வீடு ஹோவென்று இருக்கு. நமக்கு உதவி செய்யக் கடமைப்பட்டவர்,'' என்று வற் புறுத்தினுர். அம்மாவும் அதையே சொன்ன தால் மனேஜுக்கு வேறு வழி இல்லாமல் போய்விட்டது.

சடகோபனின் குடும்பத்தாரும் மனேஜின் குடும்பத்தாரும் பக்கத்துப் பக்கத்து வீட்டில் ஏழு வருட காலம் சேர்ந்து வசித்து வந்தார்கள். சடகோபன் ரயில்வேயில் வேலை பார்த்தார். வேறே யாரோ செய்த குற்றம் அவர் மேல் விழ, இரண்டு வருட காலம் சம்பளமில்லாமல் சஸ்பென்ஷனில் இருந்துவந்தபோது, முழுக்க முழுக்க அவர் குடும்பத்துக்கு ஆதரவு கொடுத்தவர் ராமானுஜம்தான். பணமாகவும் பண்டமாகவும் எவ்வளவோ கொடுத்து உதவினுர். பிறகு சடகோபனின் மீது குற்றமில்லை என்று நிரூபணமாகி, வேலையும் திரும்பக் கிடைத்தது. ஆனுல் சடகோபன் அந்த வேலையில் தொடர்ந்து இருக்கவில்லை. 'ஒரு பிரின்ஸிபிளுக்காகத் தான் போராடினேன். இனி எதற்கு இந்த வேலை?' என்று சொல்லி, அதை உதறி விட்டு, சென்னைக்கு வந்தார். ஒரு சிநேகி தரின் பிளாஸ்டிக் தொழிற்சாலையில் பங்குதாரராகச் சேர்ந்தார். வீடும் வாசலு மாய்ச் சௌக்கியமாய் இருக்க ஆரம்பித் தார்.

## பா.பா.பா.

(போட்டி முடிவு)

| | |
|---|---|
| எஸ். ஜெயசங்கரன் | ரூ. 200 |
| டி.எம். நரசிம்மாச்சாரி | ரூ. 100 |
| ஆர்.பி. ஐயர் | ரூ. 75 |
| ராஜாமணி அம்மாள் | ரூ. 50 |
| மு.வீ. சண்முகம் | ரூ. 25 |
| பார்வதம்மாள் | ரூ. 25 |

இதெல்லாம் பத்து வருடத்துக்கு ந்திய சமாசாரங்கள். நடுவே எப்போ ாவது ஸ்ரீரங்கம் வருவார் சடகோபன். டவே கோமளமும், பாவாடை தாவணி ல் சுபாவும் வருவார்கள். அரை மணி, ரு மணி நேரம் தங்கி, காப்பி சாப்பிட்டு ட்டுப் போய்விடுவார்கள்.

அப்படிப்பட்டவர்கள் தன்னிடம் ப்படி நடந்து கொள்வார்களோ ன்னவோ என்ற தயக்கத்துடன்தான் வன் சென்னைக்கு வந்தான். அப்பாவின் டிதத்தைக் காட்டித் தங்கினன். ஜாகைக் ம் சாப்பாட்டுக்குமாக, நியாயமாகக் காடுக்க வேண்டியதைக் காட்டிலும் ம்பது ரூபாய் அதிகமாகவே கொடுத் ான்.

அப்படியும்.... அப்படியும்.....

அப்பா என்ன வேண்டுமானாலும் சால்லிக் கொள்ளட்டும், ஓட்டலில் அறை ார்த்துக்கொள்ள வேண்டியதுதான் ன்று அவனுக்கு அடிக்கடி ஏற்படும் னைப்பைத் தடுத்தது—

சுபாவின் கலகலப்பான சுபாவ ம் சுறுசுறுப்பான இளமையும்தான்.

ஊரிலிருந்து வந்த தினத்தன்றே, ளியலறையில் அவன் பல் விளக்கிக் காண்டிருந்தபோது, ''ஹாய் மனோஜ்!'' ன்று உற்சாகமாய்க் கூப்பிட்டு, இங்கேயே தங்கப் போறியாமே! தினம் னம் உன் அறுவைதான் இனிமேல்!'' ன்று சொன்னபோது—

மாடியிலிருந்த தன் அறையை வனுக்காக ஒழித்துத் தந்தபோது—

அவனிடமிருந்த பழைய கேஸட்டுகளைப் பார்த்து, ''மகா கர்நாடக மாயிருக்கியே!'' என்று பரிகாசம் பண்ணி, தன்னுடைய போனி எம், ரூனு லைலா கேஸட்டுகளை அவனுடைய டூ இன் ஒன்னில் பாட வைத்தபோது—

''எப்போது பார்த்தாலும் பாரதி ராஜாவின் ஏஞ்சல்ஸ் மாதிரி ஒயிட் அண்ட் ஒயிட்டிலேயே இருக்கியே! வேறே டிரெஸ்ஸே கிடையாதா?'' என்று பரி காசம் செய்தபோது—

அலுவலகத்திலிருந்து அவன் திரும்புகையில் லெண்டிங் லைப்ரரியிலிருந்து தனக்கு என்னென்ன புத்தகங்கள் எடுத்து வர வேண்டுமென்று பட்டியல் கொடுத்துக் கட்டளையிட்டபோது—

மனோஜ் அவளை மெல்ல மெல்லத் தன் உள்ளத்துக்குள் குடியேற்றிக் கொண்டிருந்தான். என்னவோ போலிருக்கிறது இங்கே இருக்க என்று அவன் சங்கடப்பட்ட ஒவ்வொரு சமயத் திலும், வழியை மறிக்கும் வனப்புள்ள முட்டுக்கட்டையாக அவள் திகழ்ந்தாள்.

அன்றுகூட அவன் குளித்துக் கொண்டிருக்கையில் அப்படித்தான் எண்ணிக் கொண்டான். 'எதற்காக இந்த இடத்தைவிட்டுப் போக வேண்டும்? மாமாவோ மாமியோ வள்ளென்று எரிந்து விழுந்தார்களா? சுள்ளென்று ஒரு வார்த்தை சூடாகச் சொன்னார்களா? இல்லையே? நானாகத்தான் என்னென் னவோ கற்பனை செய்து கொள்கிறேன்,' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே பாட்டுப் பாடியபடி ஷவரில் குளித்துக் கொண்டிருக்கையில் வெளியே சுபா கதவைத் தட்டினாள்.

''மனோஜ்! அந்தக் குழாயைக் கொஞ்சம் பெரிசாகத் திறந்து விடேன்!'' என்றாள்.

''ஏன்?''

''அப்பத்தான் உன்னோட சகிக்க முடியாத பாட்டுச் சத்தம் கேட்காது!''

''அப்படியா? ஸாரி, சுபா. இப்பத்தான் தமிழ்ப் பாட்டு முடிஞ்சது. அடுத்து நாலு இந்திப் பாட்டு!''

''நீ மட்டும் பாடினயோ டைனிங் டேபிளில் உனக்கு வெறும் தட்டு தான் இருக்கும்!'' என்று பயமுறுத்தினாள் அவள். ''தமிழ்ப் பாட்டோ, இந்திப் பாட்டோ சீக்கிரம் பாடி முடித்துவிட்டு வந்து தொலை. அப்பாவும் நானும் உனக்

பண்டைக்காலம் முதல் பிரசித்தமான கிராம்புத்
தைலத்தின் குணாதிசயங்களின் பயனைப்பெற ஆயிரக்
கணக்கான குடும்பங்கள் இப்பொழுது

# கிராம்புத் தைலம்

கொண்ட

# ப்ராமிஸ்

உபயோகிக்கிறார்கள்
நீங்களும் உபயோகியுங்கள்




**ப்ராமிஸ்**

- பற்சிதைவிலிருந்து பாதுகாக்கிறது.
- வாய்க்குப் புத்துணர்ச்சி தருகிறது.
- துர்நாற்றத்தை அகற்றுகிறது.

சர்வதேச கோல்ட் மெடல் பெற்ற தயாரிப்புகள்

ஆரோக்கியமான பற்கள்,
ஈறுகள் மற்றும் புத்துணர்ச்சி மிக்க மூச்சு

பல்ஸாரா தயாரிப்பு

CHAITRA-BLS-668 TAM

காகக் காத்திட்டிருக்கிறோம். சாப்பிடாமல்!''

''நீ காத்திருந்தால் பரவாயில்லே. மாமா காத்திட்டிருக்கக் கூடாது. இதோ வர்றேன்,'' என்றவன் சீக்கிரம் குளித்து முடித்து, தலையைத் துவட்டிக் கொண்டு வந்தான்.

''ஹா! வாசனை பிய்க்கிறதே!'' என்றான் மேஜை மீது வைத்திருந்த வகைகளைப் பார்த்ததும்.

எப்போதும் சீரியஸாய் இருக்கும் கோமளத்துக்குக்கூட அவன் பாராட்டைக் கேட்டு முகம் மலர்ந்தது. ''மோர் சாதத்துக்குத் தொட்டுக்கறதுக்காகப் புளிக்காய்ச்சல் பண்ணினேன். அதிலே கொஞ்சம் புளியோதரை பிசைஞ்சிருக்கேன். எப்படியிருக்கோ என்னவோ,'' என்றாள்.

''என்ன மாமி, நீங்க பண்ணி நல்லா இல்லாமல்கூடப் போகுமா? ஒரே ஒரு பயம்தான்!''

''என்ன?'' என்றார் சடகோபன்.

''இந்த சுபா புளியோதரைப் பாத்திரத்தைத் தொடலியே? தொட்டிருந்தால் குட்டிச்சுவர்.''

''யூ..... யூ.....!'' என்று கரண்டியை ஓங்கினாள் சுபா.

கலகலவென்ற சிரிப்பு அந்த அறையை நிரப்பியது.

துண்டை மடியில் விரித்துக் கொண்டு சாப்பிட உட்கார்ந்தான் மனோஜ். இரண்டு வாய் சாப்பிட்டவன், ''மாமி, நான் ஒரு ஐடியா சொல்லட்டுமா?'' என்றான்.

''வேண்டாம். ஏதாவது ராட்டன் ஐடியாதான் சொல்வே,'' என்றாள் சுபா.

''நீ சும்மா இரு, சுபா,'' என்ற சடகோபன், ''என்ன?'' என்றார்.

''வெறும் புளியோதரை மட்டும் போறுது. கொஞ்சம் தேங்காய் சாதம், தயிர் சாதம் பண்ணுங்கள். கொஞ்சம் சிப்ஸ். மொட்டை மாடியில் இன்னிக்கு ராத்திரி நாமெல்லாம் சாப்பிடலாம். பௌர்ணமி. பிரமாதமாயிருக்கும்.''



குமாரி பாக்யலட்சுமி

வண்ணப்படம்:
சரஸ்வதி சத்தியமூர்த்தி

அவன் சொல்லி முடிக்கு முன்மே கோமளம் பதற்றமான குரலில் குறு[illegible] கிட்டாள். ''இன்னிக்குப் பௌர்ண[illegible]மியா?''

சடகோபனின் முகமும் கோமளத்தின் முகமும் ஒரே சமயத்தில் கறுப்பதை மனோஜ் கவனிக்கவில்லை. ''ஆமாம், இன்னிக்குப் பௌர்ணமிதான். அதனால்தான் சொல்கிறேன்,'' என்றான் மறுபடியும்.

''ஆகட்டும். நீ சாப்பிடு,'' என்றார் சடகோபன்.

''ஏன் மாமா, பௌர்ண[illegible]மின்னு.....''

''நீ சாப்பிடு என்றேன்,'' என்[illegible] சடகோபனின் குரலில் கடுமை தெ[illegible]பட்டது.

குழப்பத்துடன் சுபாவைப் பார்[illegible]தான். அவள் சிரித்துக் கொண்டிருந்தாள். ''உனக்குத் தெரியாதா மனோஜ்? அம்மா[illegible]வுக்கு இப்படித்தான் திடீர் திடீர்னு மூ[illegible] அவுட்டாயிடும். எப்ப அப்படி ஆகும், ஏன் அப்படி ஆகுதுன்னு சொல்ல முடியாது

## புத்தகம்

**காந்தியும் லெனினும்** (இரண்டாம் அச்சு—பி.ஸ்ரீ.—பக். 76 —ரூ. 5.) லெனின் வகுத்த கம்யூனிசப் பாதை வேறு, காந்தியின் இந்தியப் பண்பாட்டிற்கிசைந்த பாதை வேறு ஆனாலும், வேற்றுமைகளைக் காட்டிலும் ஒற்றுமை அதிகம் என்பது இந்த ஒப்பியல் நூலின் அடிப்படைக் கருத்து.

**குழந்தை வேண்டும்** (இரண்டாம் அச்சு—டி.எஸ். ஜனககுமாரி—பக். 68 —ரூ. 5.) குழந்தை பிறக்காமல் இருப்பதற்குக் காரணம் என்ன? சிகிச்சை என்ன? மேலும், பேறு காலத்துக்கான யோசனைகள்.

**குடும்ப மருந்துகள்** (ஏழாம் அச்சு—டி.எஸ். ஜனககுமாரி—பக். 48 —ரூ. 2.50.) பல வகை சூரணங்கள், தைலங்கள், கஷாயங்களின் தயாரிப்பு முறைகளும் பயனும்.

**உடல் நலம் கெடாமல் வாழ்வது எப்படி?** (மூன்றாம் அச்சு—முல்லை பி.எல். முத்தையா—பக். 56 —ரூ. 3.) மூச்சு இழுத்தல்—விடுதல்; உணவு; உடற்பயிற்சி; ஓய்வு; மன ஆரோக்கியம்—இவற்றுக்கான பொதுவான யோசனைகள்.

**அற்ப வியாதியும் அனுபவ சிகிச்சையும்** (நான்காம் அச்சு—எஸ்.ஏ. சூசைராஜா—பக். 110 —ரூ. 6.) ஐம்பத்தேழு நோய்களும் அவற்றுக்கான நாட்டு வைத்திய முறைகளும்.

**வீட்டு சுகாதாரம்** (இரண்டாம் அச்சு—எஸ்.ஏ. சூசைராஜா —பக். 88 —ரூ. 5.) ஈ, கொசு, மூட்டைப் பூச்சி ஆகிய மூன்று எதிரிகளிடமிருந்து பாதுகாத்துக் கொள்ளச் சில வழிகள்.

**வீட்டுப் பொருள்களைப் பாதுகாப்பது எப்படி?** (மூன்றாம் அச்சு—எஸ்.ஏ. சூசைராஜா—பக். 128 —ரூ. 7.) கண்ணாடி, கடிகாரம், கத்திரி, ஸ்டவ் இப்படி 21 வகை வீட்டுப் பொருள்கள் கேடுறாமல் காக்கும் முறைகள் தரப்பட்டுள்ளன.

**நூதன சமையற்கலை** (ஐந்தாம் அச்சு—கே. செல்லம்மாள்—பக். 148 —ரூ. 8.50—எட்டுப் புத்தகங்களும்: ஸ்டார் பிரசுரம், 72, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை—600 005.) விதம் விதமாகச் சமைத்துப் போடுவது எப்படி? விவரங்கள்.

**வரலாற்றுப் பொருள் முதல் வாதம்** (வி. கெல்லி; எம். கவல்ஸோன்—தமிழாக்கம்: தா. பாண்டியன்—பக். 468 —ரூ. 17.) சமுதாயத்தைப் பற்றிய மார்க்சிய தத்துவத்தின் சுருக்கம். மிக விரிவான சுருக்கம்.

**வெற்றி முரசு கொட்டி வரும் லெனின் சிந்தனைகள்** (தமிழாக்கம்: சி. இராமகிருஷ்ணன்—பக். 272 —ரூ. 8—இரண்டு புத்தகங்களும்: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், 41—பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை—600 098.) அக்டோபர் புரட்சியின் மணிவிழா மாநாட்டில் பல நாட்டுக் கம்யூனிஸ்டு பிரதிநிதிகள் ஆற்றிய உரைகளின் தொகுப்பு.

இப்ப பௌர்ணமின்னு சொன்னியே! இல்லேயோ. அதான்!''

''சுபா, கம்முனு சாப்பிடேன்,'' என்று அதட்டினாள் கோமளம்.

அவளைப் பொருட்படுத்தாமல் சுபா சிரித்துக் கொண்டே, குழந்தைக்குக் கதை சொல்கிற மாதிரி முகத்தில் மிகை யான பாவங்களை வரவழைத்துக் கொண்டு தொடர்ந்தாள். ''எனக்கு முன்னாடி அம்மாவுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அது பிறந்தது யாருக்குமே தெரியாது. ஆஸ்பத்திரி நர்ஸ், டாக்டருக்குக் கூடத் தெரியாதுன்னு பார்த்துக் கொள்ளேன். ரெண்டு வயசு வரை வளர்ந்தது. ஒரு நாள் திடீர்னு மண்டையைப் போட்டிட்டுது. அது இறந்து போனது ஒரு பௌர்ணமி தினம். அதிலிருந்து அம்மாவுக்குப் பௌர்ணமின்னாலே.....''

''சுபா! எதிலே விளையாடறது எதிலே விளையாடக் கூடாதுன்னு கிடையாது உனக்கு?'' என்று கோபமாகக் கோமளம் கத்த, சடகோபன் அரைகுறையாகச் சாப்பிட்டுவிட்டு, தட்டில் கை கழுவிவிட்டு எழுந்துவிட்டார்.

''சே! இந்த வீட்டில் யாருக்கும் ஹாஸ்ய உணர்ச்சி கிடையாது! ஏதடா, ஒரு பெண் இவ்வளவு தூரம் கற்பனை செய்கிறாளே என்று..... மனோஜ், நீ ஏன் எழுந்துக்கறே?''

''சாப்பிட்டாச்சு,'' என்று சுருக்கமாகப் பதிலளித்துவிட்டு மாடிக்குப் போய்விட்டான் அவன்.

என்ன குற்றம் என்று புரியாவிட்டாலும் ஏதோ ஒரு குற்றம் இழைத்து விட்டோம் என்று அவனுக்குத் தெரிந்தது. சாப்பிட்டதெல்லாம் நெஞ்சில் நிற்கிற மாதிரி ஒரு சங்கடம் வந்தது.

ஊகூம்.

இந்த வாரமே வேறு இடம் பார்த்துக் கொண்டு கிளம்பிவிட வேண்டியதுதான்.

சுபா?

எங்கே போய்விடப் போகிறாள்? வாரத்துக்கு ஒரு முறை இங்கே வந்து சந்தித்தால் தீர்ந்தது...

ஏன் திடீரென்று தூக்கம் விழித்தது என்று ஒரு நிமிடம் அவனுக்குப் புரியவில்லை. மனம் குதிரைப் பாய்ச்சலாக நாலு பக்கம் தாவிவிட்டு நின்றபோது, தன்

அறையில், தன் கட்டிலில்தான் படுத்திருக்கிறோம் என்ற பிரக்ஞை உண்டாயிற்று. பிளக்கில் செருகியிருந்த விடிவிளக்கு நின்றிருந்தது. மின்சார விசிறி சற்று முன்தான் நின்றிருக்க வேண்டும். தலைக்கு மேலே அதன் சுழற்சி மெல்ல மெல்ல ஓய்வது அந்த அரையிருட்டில், வெள்ளை உடை அணிந்த மூன்று நாலு குழந்தைகள் ஒருவரையொருவர் துரத்திப் பிடித்து விளையாடுகிற மாதிரி தோன்றியது. கசகசவென்று வியர்த்திருந்தது உடம்பு. கட்டிலின் சட்டத்தில் மாட்டியிருந்த துண்டை எடுத்து மார்பையும் முதுகையும் துடைத்தபடி எழுந்து உட்கார்ந்தான்.

மின்சாரம் நின்றிருக்க வேண்டும் என்பது தெரிந்தது. ஜன்னல் வழியே சிறிது வெளிச்சம் வந்தது. வெளியே மொட்டை மாடியில் கொட்டிக் கிடந்த நிலாப் பால் சிறிது வழிந்து உள்ளே வருவதால்தான் அந்த வெளிச்சம் என்று புரிந்து கொண்டான். ஜன்னலுக்கு மேலும் கீழுமாக நாலு கதவுகள் இருந்தன. கீழிரண்டு கதவுகளைக் கொக்கி போட்டு மேலிரண்டு கதவுகளை மட்டுமே திறந்து வைத்திருந்தான். கீழ்க் கதவுகளையும் திறந்து வைத்தால் இன்னும் சிறிது காற்றும் வெளிச்சமும் வரக் கூடும். எழுந்து அவற்றைத் திறந்து விட்டுக் கட்டிலுக்குத் திரும்ப வந்து உட்கார்ந்தான். மொட்டை மாடியின் மறு கோடியில் உயரமான மேடை அமைத்து அதன் மீது துளசிச் செடி ஒரு பூந் தொட்டியில் வைக்கப்பட்டிருந்தது. கொஞ்சம் கூடக் காற்று இல்லாததால் அதன் சின்னஞ் சிறு இலைகள் அசைவில்லாமல் நின்றிருந்தன. அடுத்து அவன் என்ன செய்யப் போகிறான் என்பதைப் பயத்துடனும் ஆர்வத்துடனும் கண் கொட்டாமல் அவை பார்க்கிற மாதிரி இருந்தது. அவனுள் இனம் தெரியாத அச்சமொன்று எழுந்தது. அதை விரட்டுவதற்காக, வேண்டுமென்றே துளசிச் செடியைப் பார்த்து, 'ஹலோ!' என்று வாய்விட்டுக் கூறிச் சிரித்தான்.

எவ்வளவு துடைத்தும் மேலும் மேலும் வியர்வை பெருகுகிற மாதிரியே இருந்தது. வாசல் கதவையும் திறந்து வைத்தால் ஓரளவு காற்று வரக் கூடும். பிறகு தூக்கம் கண்களைச் சுழற்றுகிறபோது சாத்தித் தாளிட்டுவிட்டுப் படுக்கலாம்.

எழுந்து உள் தாழ்ப்பாளை நீக்கிக் கதவைத் திறந்தான். இல்லை, திறக்க முயன்றான்.

## தீப தரிசனம்

மூன்றாம் அச்சு—நஜன்—பக். 80 —ரூ. 6.
பிரதிபா பிரசுரம், 39, ஆடம் தெரு, மயிலாப்பூர், சென்னை—600 004.

தீபாராதனை தத்துவம்; தீபலட்சுமி பூஜை மற்றும் பல.

## இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள்

இரண்டாம் பதிப்பு—ஜி. ஜான் சாமுவேல்—பக். 136 —ரூ. 12.
ஐந்திணைப் பதிப்பகம், 15, சைடோஜி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை—600 005.

ஒப்பாய்வுத் துறையில் ஈடுபடுவோருக்கு வழிகாட்டி. ஒன்பது கட்டுரைகள் அடங்கியது. 'பாரதியும் வால்ட் விட்மனும்' புதிய சேர்க்கை.

## கைக்குள் பிரபஞ்சம்

க. சந்திரசேகர்—பக். 52 —ரூ. 5.
ரவி ஜனனி, 25, கிருஷ்ணப்ப செட்டி தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை—600 002.

புதுக் கவிதை. உதாரணத்துக்கு: 'கட்சிக்கார அண்ணைச்சியிடம், அந்தரங்கக் காரியதரிசி, காதோ காதானார்'—'நீங்க பாத யாத்திரை போக, எந்தக் கார் வேணும்!'



வைரமுத்து

## மௌனத்தின் சப்தங்கள்

வைரமுத்து—பக். 124 —ரூ. 7.50.
கலைஞன் பதிப்பகம், 10, ஹென்ஸ்மென் ரோடு, தி.நகர், சென்னை—600 017.

இன்றைய சினிமாவுக்கும் இன்றைய கவிஞனுக்கும் (தனக்கும்) உள்ள உறவு பற்றிய உரத்த நினைவு. கூண்டில் தன்னை நிறுத்திக் கொண்டவராய், சில சமயம் தாக்குகிறார், சில சமயம் சமாதானம் சொல்கிறார், சில சமயம் குழம்புகிறார். மொத்தத்தில் வரிக்கு வரி நயம் உண்டு.

## தெய்வம் தந்த பரிசு

பொன் பரமகுரு—பக். 152 —ரூ. 10.

காவல் துறையில் 35 ஆண்டு பணியாற்றி ஓய்வு பெற்ற அதிகாரி எழுதிய பத்தொன்பது அழுத்தமான கட்டுரைகளின் தொகுப்பு. பெரும்பாலும் ஆன்மிகம்.

## தேனும் அதன் பயனும்

இரண்டாம் அச்சு—சம்பந்தம்—பக். 116 —ரூ. 6.
இரண்டு புத்தகங்களும்: வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை—600 017.

தேனின் உபயோகம்; தேனீ வளர்ப்பு முறைகள்.

எதுவோ சிக்கிக் கொண்டிருப்பது போல் தோன்றியது. கதவை மேலும் இழுத்துப் பார்த்தான். திறக்கவில்லை.

இழுத்தபோது ஏற்பட்ட ஓசையிலிருந்து, கையின் உணர்விலிருந்து, வெளிப்புறம் தாழ்ப்பாள் போடப்பட்டிருப்பதை அறிந்தான். காற்றினுல் தற்செயலாக மாட்டியிருக்குமோ? இருக்காது. மேலும் கீழுமாகச் செருகிக் கொள்ளும் தாழ்ப்பாளாக இருந்தால் அப்படி நேரக் கூடும். இது பக்கவாட்டில் இழுத்துச் செருகுகிற தாழ்ப்பாள். ஆகவே தானுக மாட்டிக் கொண்டிராது.

அவனுக்கு ஏற்பட்ட முதல் எண்ணம், இது எவனே திருடனுடைய வேலையாக இருக்கும் என்பதுதான். ஒரு குறிப்பிட்ட இடத்தில் புகுந்து திருடும் போது, அக்கம்பக்கத்தில் யாரும் சத்தம் கேட்டோ, அல்லது தற்செயலாகவோ வந்துவிடக் கூடாது என்பதற்காகத் திருடர்கள் முன் ஜாக்கிரதையாகப் பக்கத்து வீட்டுத் தாழ்ப்பாள்களை வெளிப் பக்கம் பூட்டி விடுவதுண்டு என்று அவன் கேள்விப்பட்டிருக்கிறான்.

கதவைப் படபடவென்று உலுக்கி, 'மாமா! மாமா!' என்று கூச்சலெழுப்ப வேண்டும் என்று தீர்மானித்தவன், அடுத்த கணம் அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டான். திருடன் ஓடிவிட்டால்? திரும்பப் படுக்கையில் வந்து உட்கார்ந்தான். கூச்சலிடாமலே இருந்தால், அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டு திருடன் நழுவிவிடுவானே? ஒரு வேளை மாடி வழியாகத்தான் ஓடுவானே? அப்படி ஓடினுல் பிடிக்க முடியாதபடி வெளியே தாள் போட்டிருக்கிறதே?

குழம்பியபடி அவன் உட்கார்ந்திருக்கையில், அந்த நிசப்தமான இரவில் என்னென்னவோ சின்னஞ்சிறு ஓசைகள் கீழேயிருந்து கேட்பது போலிருந்தது. ஒரு கால் மனம் கற்பனை செய்து கொள்ளும் பிரமைகளோ?

மறுபடி அவன் எழுந்தபோது—

துல்லியமாக இன்னொரு சத்தம் கேட்டது.

மாடிப் படியில் யாரோ ஓசைப் படாமல் ஏறி வருகிற ஓசை.

படபடக்கும் மார்பை அழுத்திக் கொண்டு, மூச்சையும் பலமாகக் கேட்டு விடாதபடி அடக்கிக் கொண்டு, ஜன்னலின் ஓரமாக, சுவரோடு சுவராக நின்று கொண்டு பார்த்தான். பிறகுதான்

ஞாபகம் வந்தது. மாடிப் படி அவன் அறையை ஒட்டினாற் போல் மறுபுறம் இருந்தது. ஆகவே, வருகிறவர் யாராயிருந்தாலும், ஜன்னலுக்கு நேர் எதிரே வந்து நின்றாலொழிய, அவர் யாரென்று காண முடியாது.

மாடிப் படியில் ஏறி வரும் ஓசை நெருங்கி நெருங்கிக் கேட்டது.

ஜன்னல் பக்கத்திலிருந்து நகர்ந்து, கதவின் பக்கமாய்ப் போய் நின்று கொண்டான்.

படிக்கட்டுகள் முடிந்து இப்போது அந்த நபர் மாடிக்கே வந்தாயிற்று என்பது ஓசையின் வித்தியாசத்திலிருந்து தெரிந்தது.

கதவின் மீது மெல்லக் கையை வைத்தபடி அவன் காத்து நின்றான். அடுத்து என்ன நிகழப் போகிறது என்று அவனால் கடுகத்தனையும் ஊகிக்க முடியவில்லை.

ஒரு சில வினாடிகள்தான்.

கதவின் மறுபக்கம் ஒரு கை வைக்கப்படுவதை உணர்ந்தான். தாழ்ப்பாளைத் தொடும் சத்தம் கேட்டது. இம்மி இம்மியாகத் தாழ்ப்பாள் நகர்த்தப்படும் சத்தம். ஆம். போடட தா...
...றார்கள்.

முழுதும் தாள் நீக்கப்பட்டு விட்டது. கதவு அதன் விறைப்பு நீங்கி தளர்ந்து கொள்வதிலிருந்து அவன் கண்டு கொண்டான்.

வந்த நபர் திரும்புகிற மாதிரி தோன்றியது.

மனோஜ் தாமதிக்கவில்லை.

சரேலெனக் கதவைத் திறந்து ஒரே எட்டில் அந்த நபரைத் தோளில் இரு கையாலும் பிடித்துத் தன் பக்கம் திருப்பினான்.

முழு நிலாவின் பிரகாசத்தில்—

''மாமா! நீங்களா!''

சடகோபன் அதை எதிர்பார்க்கவில்லை. ''சத்தம் போடாதே!'' என்று அவசரமாகச் சொல்லிவிட்டு அவன் முகத்தைப் பார்த்தார்.

அடுத்த நிமிஷம் அவனைக் கட்டிக் கொண்டு அவன் மார்பில் தலையைச் சாய்த்து விம்மினார். விம்மி விம்மி அழத் தொடங்கினார்.

(தொடரும்)


கம்பெனி, மில் இதையெல்லாம் யார் கவனிச்சுப்பாங்க? நீங்க பாட்டுக்குத் தடால்னு 'கார்சேவா'வுக்குப் போயே தீருவேன் என்கிறீங்களே, கொஞ்சம் யோசியுங்க.
சு கிசுக்காரங்க அப்படித்தான் தாவது புரளி கிளப்பிகிட்டிருப்பாங்க. ன் வயிற்று மேலே சத்தியமாச் சால்றேன். பூர்ணிமாவும் நானும் னமொத்த தம்பதிகளாக திருந்துட்டு வர்றோம்.
ஒண்ணு கேட்கிறேன், தப்பா நினைக்கமாட்டீங்களே? கொசு உங்களைக் கடிக்கவே கடிக்காதா?

## [illegible] முழு[illegible]ற்குமான ஒரு போட்டி

அனைவரும் பங்குக்கொள்ளக் கூடிய ஒரு எளிய போட்டியில் 1000-க்கும் அதிகமான கவர்ச்சிகரமான பரிசுகளை ஹார்லிக்ஸ் வழங்குகிறது. கீழே 4 படங்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன—ஒரு டாக்டர், ஒரு குடும்பத்தலைவி, ஒரு பாட்டனார், ஒரு குழந்தை. பக்கத்தில், அவர்கள் ஹார்லிக்ஸை ஏன் விரும்புகிறார்கள் என்று 4 கருத்துகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

நீங்கள் செய்யவேண்டியது இவ்வளவே—இந்த கருத்துக்களை யார் யார் சொல்லியிருப்பார்கள் என்று இணைக்கவேண்டும். உதாரணமாக, டாக்டர் (A) கூறியது (2) கருத்து. இப்பொழுது, நீங்கள் எந்த படத்திற்கு எந்தக் கருத்து சிறப்பாக பொருந்துகிறது என்பதைப் படங்களுடன் பொருத்திக் காட்டுங்கள்.

நுழைவுத்தாளில் உள்ள கோடிட்ட இடத்தில் நாங்கள் உதாரணத்தில் காட்டியுள்ளது போல பதில்களை எழுதி நிரப்புங்கள்.

## பிறகு...

பின்வரும் வர்க்கியத்தை பூர்த்தி செய்யுங்கள்—'ஹார்லிக்ஸ் குடும்பத்தின் மிகவிருப்பமான ஆரோக்கிய பானம், ஏனெனில்....'

## நீங்கள் எத்தனை நுழைவுத்தாள்களை வேண்டுமானாலும் அனுப்பலாம்

கீழே கொடுக்கப்பட்டிருக்கும் நுழைவுத்தாளை நீங்கள் பயன்படுத்தலாம். அல்லது உங்கள் அருகிலுள்ள ஹார்லிக்ஸ் கடையிலிருந்து உங்கள் நுழைவுத்தாளை வாங்கிக் கொள்ளலாம். ஒவ்வொரு நுழைவுத்தாளுடனும் 450 g, அல்லது 800 g, அல்லது 1000 g, ஜாடியின் உட்புற அலுமினிய தகடு 'ஸீல்' ஒன்றை இணைத்து அனுப்பவேண்டும். நினைவிருக்கட்டும்: ஒவ்வொரு மாதம் முதல் தேதியும் மற்றும் 16-ம் தேதியும் வந்து சேரும் பூர்த்தியான முதல் 200 நுழைவுத் தாள்களுக்கு பிரத்யேகப் பரிசுகள் கிடைக்கும். ஆகையால், நீங்கள் முந்தினால், இப்பரிசைப் பெறுவதுடன் மற்ற பரிசுகளுக்கும் தகுதியுடையவர்களாக இருப்பீர்கள்.

நுழைவுத்தாளை முகவரிக்கு தபாலில் அனுப்புங்கள்:
ஹார்லிக்ஸ் ஃபாமிலி கான்டெஸ்ட் எச் எம் எம் லிட்.,
போஸ்ட் பேக் நம்பர்: 5637 சென்னை-600 006.

## விதிகள் மற்றும் வரைமுறைகள

1. நுழைவுத்தாள்களை தமிழிலோ, அல்லது ஆங்கிலத்திலோ எழுதி அனுப்பலாம்.
2. எச்எம்எம் லிட், எச்டிஏ மற்றும் பாரி அண்ட் கோ லிட். ஊழியரோ, மற்றும் அவர்களது குடும்பத்தினரோ இதில் கலந்துகொள்ள முடியாது.
3. நுழைவுத்தாள்கள் சாதாரணத் தபாலில்தான் அனுப்பவேண்டும். பதிவுத்தபாலிலோ, நேரிலோ, அல்லது குறைவான தபால்தலை ஒட்டி அனுப்பினாலோ ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.
4. நுழைவுத்தாள்களை சுதந்திரமான ஒரு நடுவர் குழு மதிப்பிடும். முற்றிலும் திருத்தமான நுழைவுத்தாள்களும், அவைகளில் எழுதிய வாக்கியங்களில் எல்லாவற்றையும்விட சிறந்ததாக கருதப்படுவதே தேர்ந்தெடுக்கப் படும்.

விதிகள் மற்றும் வரைமுறைகளின் விவரங்களிற்கு நுழைவுத்தாளுடன் உங்கள் விற்பனையாளர்களிடம் விசாரிக்கவும்.

| | | | |
|---|---|---|---|
|  A. டாக்டர் |  B. குடும்பத்தலைவி | 1. குழந்தைப் பருவத்திலிருந்து 60 வருடங்களுக்கும் மேலாக நான் நம்பிக்கை வைத்துள்ள பழக்கம் இது. இந்த நாட்களில் நீங்கள் எவ்வளவு விஷயங்களைத்தான் நம்பமுடிகிறது. | 2. ஆம், நான் அதை அருந்துகிறேன்! எனது நோயாளிகளையும் ஒரு நாளைக்கு இருமுறை ஹார்லிக்ஸ் குடிக்கும்படி சிபாரிசு செய்கிறேன். |
|  C. பாட்டனார் |  D. குழந்தை. | 3. ஹார்லிக்ஸ் எவ்வளவோ சுவையாக இருக்கிறது! அம்மா எனக்கு அதைப் பாலுடன் கலந்துத் தருகிறாள். ஆனால் நான் அதை அப்படியே சாப்பிடுவேன்! | 4. என் குடும்பத்தின் ஆரோக்கியத்துடன் நான் விளையாட முடியாது. இப்பொழுது பால் இருக்கிற நிலையைப் பார்க்கும் போது, ஹார்லிக்ஸில் எனக்கு முழுப்பலனும் கிடைக்கிறது. |




சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

இங்கே கத்தரித்து அனுப்பவும்

| A | B | C | D |
|---|---|---|---|
| 2 | | | |

'ஹார்லிக்ஸ் குடும்பத்தின் மிகவிருப்பமான ஆரோக்கிய பானம், ஏனெனில்

______________________________

பெயர்: ______________________________

முகவரி: ______________________________

______________________________

முந்துங்கள்!
போட்டி முடிவடையும் தேதி 15 செப்டம்பர், 1984.

# என்னைத் தவிர

## 3

பாங்க்கில் வேலை கழுத்தை முறித்த போதிலும் சடகோபனின் தலை தன் தோளில் சாய்ந்திருப்பது போன்ற பிரமை இருந்து கொண்டேயிருந்தது மனோஜுக்கு.

இத்தனைக்கும், மாற்றலாகி வரும் எந்த ஃபீல்டு ஆபீசருக்கும் ஏற்படக் கூடிய தலைவலிகள் அவனுக்கும் இருந்தன.

செக்குகளை அங்கீகரித்துக் கொண்டிருந்த போதிலும், ரெஜிஸ்டர்களில் ஒழுங்காக எல்லாம் பதிவாகியிருக்கிறதா என்று பார்த்துக் கொண்டிருக்கும் போதும் சடகோபனின் கண்ணீர் நிறைந்த முகம் அவன் கண் முன்னேயே நின்றது.

சென்ற ஆண்டு கடன் வழங்கப் பட்டிருந்த பூக்காரர்கள், கறிகாய்க் காரர்கள், செருப்புத் தொழிலாளிகள், ரிக்ஷாக்காரர்கள் எல்லோரும் உண்மையான கேஸ்கள்தானா என்று சுற்றிப் பார்த்துவிட்டு, இரண்டு பேர் பினாமிகள் என்பதைக் கண்டுபிடித்து அதைப் பற்றிக் குறிப்பு எழுதிக் கொண்டிருந்த போதும், தன் மார்பில் சடகோபனின் தலை புதைந்து இன்னும் விம்மி விம்மி அழுது கொண்டிருப்பது போலவே பிரமை இருந்தது.

அவருடைய தளர்ந்த கைகள் தன் கைகளைப் பிடித்துக் கொண்டு நடுங்குவது போலவே பிரமை ஏற்பட்டது.

சுபாவின் நோயைப் பற்றி, அவள் பிள்ளையார் கோயிலுக்குச் சென்று விழுந்து விழுந்து நமஸ்காரம் செய்வதைப் பற்றி அவர் விம்மலுக்கிடையே சொல்லி முடித்தபோது அவனால் அதை நம்பவே முடியவில்லை. கடைசியில் ''இது அவளுக்குத் தெரியுமா மாமா?'' என்று கேட்டான்.

''தன்னாலே சரியாகி விடும், அவளிடம் சொல்லிக் குழப்ப வேண்டாம்னு பார்க்கிறோம். அனேகமாய்ப் பௌர்ணமியின் போது தான் அவள் இப்படிச் செய்கிறாள். ஆகவே அன்னிக்கு நாங்க ஜாக்கிரதையாயிருக்கிறோம்,'' என்றார் அவர்.

அவன் வானத்தைப் பார்த்தான். முழு நிலா கீழே இறங்கிக் கொண்டிருந்தது. ''இன்றைக்குப் பௌர்ணமின்னுதான்...''

''ஆமாம். நீ நிலாச் சாப்பாடு சாப்பிடலாம்னு சொன்னப்புறம்தான் ஞாபகம் வந்தது. அவள் தூக்கத்தில் எழுந்து போவது வருவது உனக்குத் தெரிய வேண்டாம் என்று வெளிப் பக்கம் தாழ்ப்பாள் போட்டிருந்தேன்..... அந்தக் கண்ணராவியெல்லாம் முடிஞ்சு அவள் திரும்பி வந்து படுத்துக் கொண்டு விட்டாள். தாழ்ப்பாளைத் திறந்துடலாம்னு வந்தேன்.... மனோஜ், எனக்கு இந்த வயசிலே இப்படியொரு கஷ்டம் வரணுமா? தங்கக் கிளியாட்டம் இருக்கிற என் குழந்தை.....''

குலுங்கிக் குலுங்கி அழுதவரை எப்படிச் சமாதானம் செய்வதென்றே அவனுக்குத் தெரியவில்லை.

''இன்னொரு விஷயம், மனோஜ்,'' என்றார் சடகோபன்.

''என்ன மாமா?''

''இவளுக்கு உடம்பு இந்த மாதிரி இருப்பதால் கல்யாணம் கார்த்தின்னு எதுவும் இப்போதைக்குப் பண்ண வேண்டாம்னு தீர்மானம் பண்ணியிருக்

கிருஷ்ணகுமார்

கோம். நீ என் சொந்தப் பிள்ளை மாதிரி.... உன்னிடம் சொல்வதற்கென்ன? இருந்தாலும்.....'' அவர் தயங்கினர்.

''எதுவானலும் சொல்லுங்க மாமா!''

''நீயும் வயசுப் பையன். சுபாவும் வயசுப் பெண். ரொம்ப நெருங்கிப் பழகி மனசிலே தப்பான ஆசைகளை வளர்த்துக் கொண்டு விடக் கூடாதே என்றுதான் நானும் மாமியும் பயப்படுகிறோம்.....''

மனோஜுக்கு இப்போதுதான் புரிந்தது—ஏன் சடகோபனும் கோமளமும் ஒட்டாமல் விட்டேற்றியாகவே பழகுகிறார்கள் என்று.

''மாமா, எந்தத் தப்பும் ஏற்படுகிறபடி நான் நடந்து கொள்ள மாட்டேன். நிச்சயம். இன்னும் பத்துப் பதினைந்து நாளில் வேறு இடம் பார்த்துக் கொண்டு விடுகிறேன். சரிதானு?''

''சே, சே. அதற்குச் சொல்ல லேப்பா,'' என்றார் சடகோபன் அவசரமாக. ''நீதான் சொல்லிட்டாயே, ஜாக்கிரதையாக இருப்பேன் என்று. அதுவே போதும்.'' கண்ணைத் துடைத்துக் கொண்டு அவர் புறப்பட்டார். ''தூங்கு. ரொம்ப நேரமாகிவிட்டது. நாளைக்கு ஆபீசுக்குப் போய் வேலை பார்க்க வேண்டிய பிள்ளை.''

அவர் போய் வெகு நேரமாகியும் அவனால் தூங்க முடியவில்லை. இளமையும் உல்லாசமும் அழகும் நிறைந்த சுபாவுக்குள்ளே ஒரு விசித்திர நோய் இருப்பது தான் அதிர்ச்சி என்றால், அவளோடு நெருங்கிப் பழகாதே என்ற சடகோபனின் எச்சரிக்கை இன்னும் பெரிய அதிர்ச்சியாக இருந்தது.

இரண்டும் கெட்டான் வயசில் ஸ்ரீரங்கம் காவேரியில் அட்டகாசம் செய்த நாட்கள்—கேரம் விளையாட்டின் போது அவன் தலையில் அவள் இறக்கிய குட்டுக்கள்—இவன் அவளுக்குக் கணக்குச் சொல்லித் தரும்போது அவள் தொடையில் இழைத்த கிள்ளல்கள்—

எல்லாம் ஞாபகம் வந்தன. அத்தனைக்கும் மேலே சென்னைக்குப் புறப்படும்போது அவன் அம்மா, ''சங்கோஜப் படாமல் கோமளத்தைக் கேட்டு வாங்கிச் சாப்பிடு. நாளைக்கு உனக்கு மாமியாராக வரப் போகிறவள்தான் அவள்,'' என்று சொன்ன வார்த்தை—

எல்லாவற்றையும் மறந்துவிட வேண்டியதுதானு?

மனோஜின் இதயம் இரும்புக் குண்டுக்கு மேல் இரும்புக் குண்[illegible] வைத்து அழுத்திய மாதிரி கனத்தது.

ஆனல் அதன் பிறகு அவன் சுபாவுடன் சேர்ந்து சாப்பிட உட்காருவதில்லை. துணி உலர்த்த அவள் மாடிக்கு வந்தால் அவன் கீழே போய்விடுவான். அவள், ''டி.வி. பார்க்க உட்காரேன்,'' என்று அழைத்தால், ''நான் பாங்க் பரீட்சைக்குப் படிக்கணும்,'' என்று மாடிக்குச் சென்று அறைக் கதவைத் தாளிட்டுக் கொண்டு விடுவான்.

ஏன், போன வாரத்தில் ஒரு நாள் சாயந்தரம் அவன் வெளியே போய்விட்டு வந்த போது, அவனுடைய அறையில் கட்டில் முனையில் சுபா உட்கார்ந்திருந்தாள்.

''உனக்காகத்தான் காத்திட்டிருக்கேன்,'' என்றாள்.

''என்ன விஷயம்?'' என்று வேண்டுமென்றே குரலில் கடுமையை வரவழைத்துக் கொண்டு கேட்டான்.

''ஐய, ஏன் சிடுசிடுன்னு பேசறே? கார்ட்ஸ் ஆடி ரொம்ப நாளாச்சு. அப்பாவும் அம்மாவும் நானும் ஆடப் போறோம். ஒரு கை குறைகிறது. வா.''

''எனக்கு ஒரே தலைவலி. படுக்கப் போறேன்,'' என்றான் கண்டிப்பாக.

அவள் அவனை ஒரு நிமிடம் முறைத்துப் பார்த்துவிட்டு, ''சே! வர வர நீ கடுவன் பூனையாய் ஆகிவிட்டாய்! என்ன வந்தது?'' என்றாள். அவன் பதில் சொல்லாமல் இருக்கவே, ''நீ சுத்த மோசம்,'' என்று கூறிவிட்டு வேகமாய்ப் படியிறங்கி சென்று விட்டாள்.

'நில்லு சுபா! நில்லு! நான் பேசியதெல்லாம் உண்மையில்லை,' என்று கூவ வேண்டும் போல அவன் உள்ளம் துடித்தது.

ஆனல் பல்லைக் கடித்துக் கொண்டு மௌனமாயிருந்தான்.

''ஹாய் மனோஜ்,'' என்ற உற்சாகமான குரல் அவனை எழுப்பியது.

சுபாவின் குரலாக இருக்கிறதே தவிர அவளாக இருக்க முடியாது என்ற எண்ணத்துடன் நிமிர்ந்தவன் அவளையே கண்டான். கூட அவள் வயதில் ஒரு சிநேகிதி.

பரவசம் ஒருபக்கம், திகைப்பு மறு பக்கம். ''என்ன சுபா இத்தனை தூரம்?''

''உன்னைப் பார்க்கத் தான்.'' இரண்டு நாற்காலிகளைத் தானே இழுத்துப் போட்டுக்கொண்டு, ''உட்கார் லீலா,'' என்று தோழியையும் உபசரித்தாள். ''இவள் என் சினேகிதி. பி.காம் சேர்ந்து படித்தோம். இவள் அப்பா பம்பாயில் ஏர் இந்தியாவில் இருக்கிறார்.''

''வணக்கம்,'' என்று கை குவித்தான்.



சுபா தொடர்ந்து, ''மாசா மாசம் இவள் அப்பா பம்பாயிலிருந்து பணம் அனுப்புகிறார். செக்கைப் போட, எடுக்க உன் பாங்கில் இவளுக்கு ஸேவிங்ஸ் அக்கவுண்ட் இருந்தால் நல்லதுன்னு தோன்றிற்று. அதான் அழைச்சிட்டு வந்தேன்.''

''குட் ஐடியா. ஆனால் நம்ம வீட்டுக்குப் பக்கத்திலேயே ஒரு பிராஞ்ச் இருக்கே? இத்தனை தூரம் அழைச்சிட்டு வந்திருக்க வேண்டாமே?''

''தெரிஞ்சவங்க யாரும் அங்கே இல்லியே? இங்கேயென்றால் நீயே செக்கைக் கட்டுவே. வேணுங்கிறப்போ பணம் வித்ட்ரா பண்ணி எடுத்திட்டு வருவே. இல்லியா?''

''ஷ்யூர்,'' என்றான் மனோஜ். இருந்தாலும் சுபாவின் செயலில் ஏதோ ஒரு புரியாத தன்மை இருப்பது போலவே பட்டது. சேவிங்ஸ் கணக்கு நடைபெறும் இடத்துக்கு லீலாவை அழைத்துச் சென்று, அட்டைகளை வாங்கிக் கொடுத்தான். அவள், அவன் சொல்லாமலே மளமளவென்று பூர்த்தி செய்ய வேண்டிய இடங்களில் பூர்த்தி செய்து, மாதிரிக் கையெழுத்துப் போட வேண்டிய இடங்களில் கையெழுத்திட்டாள்.

''உங்களுக்கு இதெல்லாம் ஒன்றும் புதிதுபோல் தோன்றவில்லையே?'' என்று கேட்டு விட்டான் அவன்.

அவள் தூரத்தில் உட்கார்ந்திருக்கும் சுபாவை ஒரு முறை பார்த்துவிட்டு, ''உங்களிடம் ஒன்று சொல்லட்டுமா?'' என்றாள்.

''என்ன?''

''எனக்கு ஏற்கெனவே எங்கள் நதியில் பாங்க் அக்கவுண்ட் இருக்கு. சுபாதான் இங்கே ஒண்ணு ஆரம்பிக்கலாம்வான்னு சொல்லிக் கட்டாயமாக அழைச்சிட்டு வந்தாள்.''

அவன் திகைப்பு அதிகரித்தது. ''எதுக்கு?''

''அது எதுக்கோ, எனக்கென்ன தெரியும்?'' என்ற போது அந்தப் பெண்ணின் முகத்தில் ரகசியமான புன்சிரிப்புப் பரவியிருந்தது.

பணம் கட்டி, பாஸ் புத்தகம் செக் புத்தகம் முதலியன பெற்றுக் கொண்டதும் அவளுடன் சுபா புறப்படவில்லை. ''நீ போயிட்டு வா, லீலா. எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது,'' என்று கூறி அவளை அனுப்பினாள்.

பாங்கில் பல கண்கள் தன்னை மொய்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது மனோஜுக்கு. அதற்காகச் சுபாவைப் போகச் சொல்லவும் மனம் வரவில்லை.

அந்த லைட் ஆரஞ்சுக் கலரில் பூப் போட்ட ஸாரியில் வன தேவதையாகக் காட்சி தரும் அவளைக் கண் கொட்டாமல் பார்த்தான். அதே நிறத்தில் கூந்தலில் மாட்டியிருந்த கிளிப்பும் சூடியிருந்த கனகாம்பரமும் தோளில் மாட்டிய பாய் டிசைன் கைப்பையும் அவனைக் கிறுகிறுக்க வைத்தன.

''என்ன மனோஜ் பார்க்கிறே?''

''சுபா, உண்மையை ஒப்புக் கொண்டு விடு. என்னைப் பார்க்கத்தானே வந்தே?''

அவளொன்றும் தயங்கவில்லை. ''பின்னே என்ன? வீட்டில நீ இருக்கிற நேரமே கம்மி. அதிலும் புர்புர்னு என்னவோ உன் சொத்தையெல்லாம் யாரோ கொள்ளையடிச்சிட்டுப் போயிட்ட மாதிரி மூஞ்சியைத் தூக்கி வைத்துக் கொண்டு போகிறே, வருகிறே!'' என்றாள்.

# புதுத்



- உழைக்கும் வர்க்கமும் அதன் கூட்டாளிகளும் (எல். மாஸ்க்வின்—தமிழாக்கம்: தா. செல்லப்பா—பக். 382—ரூ. 12.) பாட்டாளிகளுடைய போராட்டங்களின் வரலாற்றை ஆராய்ந்து, முதலாளித்துவத்துக்கு எதிராக நடக்கும் போட்டியில் எப்படி நகரங்களிலுள்ள நடுத்தரப் பிரிவினரையும், கிராமவாசிகளில் பெரும்பான்மையினரையும் கூட்டுச் சேர்த்துக் கொள்வது புத்திசாலித்தனம் என்று எடுத்துரைப்பது.
- 'உண்மை'யைத் தேடும் புதிய பிராய்டியர்கள் (வி.ஐ. தெப்ரென்கோவ்—தமிழாக்கம்: அ. நடராஜன்—பக். 178—ரூ. 8.) முன்னேற்றக் கருத்துள்ள எரிக் பிராமின் தத்துவங்களை அனுதாபத்துடன் அணுகினாலும், 'பூர்ஷுவா அறிவாளிகளைக் கவரும் மாயத் தோற்றம்' என்று விமர்சிக்கிறது.
- தையற்கலை வழிகாட்டி (ஆண்கள் உடை) பாகம்—2 (ஆர்.எஸ். பாலகுமார்—பக். 96—ரூ. 7.) கல்லி—ஜிப்பா, பைஜாமா—சூட், சிலாக்—இப்படிப் பல வகைகளைத் தைக்கும் முறைகள்—படங்களுடன்.
- காலமும் மக்களும் (ஈகோர் யாகொவ்லெவ்—தமிழாக்கம்: நெல்லை எஸ். வேலாயுதம்—பக். 458—ரூ. 12) வித்தியாசமான புத்தகம். முதலில் லெனினைச் சந்திக்கிறோம். பிறகு, புரட்சி வீரன் ஒருவனது தியாகத்தைப் பற்றிய கதை. 'யாருக்காக மணி அடித்தது' என்ற ஹெமிங்வேயின் நாவல் பற்றிய விவாதம். இந்தத் தலைமுறையினரின் தந்தையர், பிள்ளைகள்—பரஸ்பர விமரிசனம். கம்யூனிஸ்டுப் பிரசார நூல் படிக்கவும் சுவையாக இருப்பது ஆச்சரியம்தான்.
- 14,000 போர்களுக்குப் பின்னர் (யூ. காஸ்லெவ்—தமிழாக்கம்: நெல்லை எஸ். வேலாயுதம்—பக். 336—ரூ. 9.) மனித குலம் தோன்றி இது வரை 14,000 பெரிய, சிறிய போர்கள் நடந்துள்ளதாக ஆசிரியர் கூறுகிறார். அண்மைக் காலத்தில் உலக சமாதானத்துக்கும், சமாதான சகவாழ்வுக்கும் ரஷ்யா செய்துவரும் தொண்டு விவரிக்கப்படுகிறது—ரஷ்யக் கண்ணோட்டத்தில்.
- பாரதி ஒரு யுகசந்தி (குன்றக்குடி அடிகளார்—பக். 110—ரூ. 6. ஆறு புத்தகங்களும்: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், 41—பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை—600 098.) பழைமையின் சாரத்தையும் புதுமையின் பொலிவையும் இணைத்த பாரதியுடைய கருத்துக்களின் விளக்கம்.

அவன் அவளை ஏற இறங்கப் பார்த்தான். ''சுபா, எனக்கு இருக்கிறது ஒரே ஒரு சொத்துதான். அதுவும் என் எதிரிலேயே இப்போது நிற்கிறது. அதை யாரும் கொள்ளையடிச்சிட்டுப் போக நான் விடவும் மாட்டேன்.'' அவனையறியாமலே அவன் கை அவள் கையைப் பற்றியது. ஒருவர் கண்ணை மற்றவர் கண் சந்தித்த போது ஒருவர் உள்ளத்துக்குள் மற்றவர் புகுந்து விட்டது யாரும் சொல்லாமலே அவர்களுக்குத் தெரிந்துவிட்டது.

சுபா மெதுவே தன் கைகளை விடுவித்துக் கொண்டு, ''இது பாங்க். மெரினு இல்லை,'' என்றாள். அவள் குரலின் கிசுகிசுப்பு அவனுக்குப் போதையூட்டியது.

அவள் தயங்கித் தயங்கி விடை பெற்றுச் சென்றாள். அவன் வாசலில் வெகு நேரம் நின்று பார்த்துவிட்டுத் தன் இடத்துக்குத் திரும்பினான்.

ஆனால் துளியும் அலுவலில் மனம் ஈடுபடவில்லை.

எதை வேண்டாமென்று, சடகோபன் தடுத்திருந்தாரோ—அது நடந்து விட்டதே!

சுபா தன்னைக் காதலிக்கிறாள். அதை வளர விடலாமா?

விட்டால் என்ன? இது ஒரு சாதாரண நோய். நரம்பு பலவீனமுள்ள எவருக்கும் ஏற்படக் கூடிய குறை. சடகோபன் அனாவசியமாய்ப் பயந்து தேவையில்லாமல் கலவரப்படுகிறார்....

''என்ன யோசனை?'' என்று கேட்டார் அருகிலிருந்த அக்கவுண்டெண்ட்.

இவரைக் கேட்டாலென்ன?

''ஒன்றுமில்லை.... ஊரிலே என் மாமா ஒருத்தர் தூக்கத்திலே எழுந்து நடக்கிறாராம். அவருக்கு என்ன வைத்தியம் செய்யறதுன்னு கேட்டு லெட்டர் போட்டிருக்காங்க,'' என்றான்.

''அது ரொம்ப சாதாரணம். என் தம்பிக்குக்கூட அப்படித்தான் இருந்தது. எழுந்துக்கிறபோது தோளில் லேசாய்த் தொட்டால் போதும். முழித்துக் கொண்டு விடுவான். பிறகு கொஞ்ச நாளில் சரியாயிட்டுது,'' என்றார் அக்கவுண்டெண்ட்.

''அப்படியா?''

''சந்தேகமாயிருந்தால் என் வீட்டுக்கு வந்து என் தம்பியைக் கேட்டுப் பாரேன்.''

மனோஜுக்குத் தெம்பாயிருந்தது.

அன்று மாலை வீட்டுக்குத் திரும்பிய போது நல்ல வேளையாய் வாசலிலேயே நின்றிருந்தார் சடகோபன். தாழ்ந்த குரலில் அவரிடம், ''மாமா, அடுத்த பௌர்ணமியன்னிக்கு சுபா எழுந்து கொண்டால் என்னை எழுப்புங்கள்,'' என்றான்.

அவர் திகிலுடன், ''என்ன பண்ணப் போறே?'' என்றார்.

''எதுவானாலும் நான் பார்த்துக்கறேன். என்னை நம்புங்கள்,'' என்று அவருடைய தளர்ந்த கைகளைக் கெட்டியாகப் பிடித்துத் தைரியம் கூறினான்.

அடுத்த பௌர்ணமி. தூங்கிவிடக் கூடாதென்று வெகு ஜாக்கிரதையாக மாடியின் மேல்படியில் முடங்கிக் கொண்டு காத்திருந்தான் மனோஜ்.

சுபா மெதுவே பாடிக் கொண்டே அம்மாவுக்கு ஒத்தாசையாகச் சமையலறையில் வேலை செய்வது கேட்டது. கோமளம் பாத்திரங்களை மூடிக் கவிழ்க்கும் ஓசைகள் கேட்டன. இரவு படுக்கப் போகும் சமயம் ஒரு டம்ளர் மோர் சாப்பிடும் வழக்கமுள்ள சடகோபனிடம், ''உங்களுக்குத் தொண்டை கட்டின மாதிரி இருந்ததே? மோருக்கு ஐஸ் போட்டுமா வேண்டாமா?'' என்று கோமளம் கேட்பதும், ''போடு,'' என்று அவர் பதிலளிப்பதும் கேட்டது.

இரவு பூரா இவர்கள் பேசிக் கொண்டும் வேலை செய்துகொண்டும் இருக்கிறார்களே தவிரத் தூங்கவே போக மாட்டார்களோ என்று மனோஜ் எண்ணினான். மாடிப் படியின் குறுகலான அகலத்துக்குள் கையைக் காலைக் கட்டிக் கொண்டு எத்தனை நேரம் உட்கார்ந்திருப்பது? உடம்பை வலித்தது.

மேலும் பல நிமிடங்கள்—பல யுகங்களைப் போல நீண்டு கொண்டே போய், நிசப்தம் கோலோச்சத் தொடங்கியது. தெருவிலும் நடமாட்ட அரவங்கள் நின்றுவிட்டன. மார்பிலும் முதுகிலும் வழிந்திருந்த வியர்வையைத் துண்டினால் சப்தம் போடாமல் துடைத்துக் கொண்டான் அவன். ஒரே மாதிரி உட்கார்ந்திருந்ததாலும் நள்ளிரவுக்கு மேல் தாண்டி விட்டதாலும் தூக்கம் இமைகளைக் கதவு சாத்துகிற மாதிரி அழுத்தியது.

ஒரு கால் இன்று ஒன்றுமே நேராதோ?

# தகம்

■ சந்தோஷி மாதா விரத மகிமை (நாக சண்முகம்—பக். 104—ரூ. 6.) சந்தோஷி மாதா என்ற அம்பாளின் கதை. பெண்கள் மேற்கொள்ளும் விரதத்தின் முறை. தோத்திரப் பாடல்கள். வண்ணப் படம் வேறு.



வலம்புரிஜான்

■ அந்தக இரவில் சந்தன மின்னல் (வலம்புரி ஜான்—பக். 70—ரூ. 5.50. இரண்டு புத்தகங்களும்: தமிழ்நாடு பதிப்பகம், 1, சுந்தரம் ஐயர் தெரு, தியாகராய நகர், சென்னை—600 017.) கொல்லூர் மூகாம்பிகையின் பெருமையை அவரது பக்தர்களில் ஒருவரான வலம்புரி ஜான் தமக்கே உரிய நடையில் விவரிக்கிறார்.

■ சுற்றுப்புறமும் சுகாதாரமும் (டி.எம். சௌந்தரராஜன்—பக். 96—ரூ. 6—தமிழரசி பதிப்பகம், 10, சல்லிவன்ஸ் கார்டன் லேன், மயிலாப்பூர், சென்னை—600 004.) நீரினால் உண்டாகும் நோய்கள்; பூச்சிகளினாலும் தொழிற்சாலைக் கழிவுகளாலும், உயரமான கட்டிடங்களாலும், ஒலி அதிர்வுகளாலும் ஏற்படும் கேடுகள். இன்னும் பல விவரிக்கப்பட்டுள்ளன.

■ 30 நாட்களில் ஆண்களுக்கு டெய்லரிங் (எம். நடராஜன்—பக். 104—ரூ. 5.75—சங்கீத வாணி, 91, வி.எம். தெரு, மயிலாப்பூர், சென்னை—600 004.) ஆண்களுக்கான பல வகை உடைகளைத் தைக்கும் முறைகள். படங்களுடன்.

■ இருவர் உள்ளம் (அரு. நாகப்பன், சோலை நாகப்பன்—பக். 72—ரூ. 6. கண்ணு பதிப்பகம், மே/பா. அருணா ஸ்போர்ட்ஸ், 20, கல்லுக்கட்டி மேற்கு, காரைக்குடி 623 001) கணவனும் மனைவியும் தனித்தனியே செய்த ஆறு வானொலிச் சொற்பொழிவுகளின் தொகுப்பு.

## ஜூலை 1984 வெளியீடுகள்

### ஷண்முக விஜயம்

நஜன்—பக். 156—ரூ. 12—பிரதிபா பிரசுரம், 39, ஆடம் தெரு, மயிலாப்பூர், சென்னை—600 004.

ஆறுமுக பிரபாவம்; ஆறுதாரங்களில் முருகன்; சண்முக கவசம்; சஷ்டி கவசம்; ஆறு சகஸ்ரநாமங்கள்.

### நற்றமிழ் நாடகக் கலை

டீயெம் பீர் முகம்மது—பக். 40—ரூ. 4—டி.எம். பீர் முகம்மது, சத்திரம் தெரு, கல்லிடைக்குறிச்சி அஞ்சல், நெல்லை மாவட்டம்.

நாடகக் கலையின் சுருக்கமான சரித்திரம். (1960 வரையில்.) சுவையானது.

எல்லாப் பௌர்ணமிகளிலும் சுபா எழுந்திருப்பதில்லை, ஏதாவது சில பௌர்ணமிகளில்தான் என்று சடகோபன் சொன்னது ஞாபகம் வந்தது....

இல்லை, இதோ ஏதோ ஓசை கேட்கிறது.

மாடிப் படியின் கைப்பிடிச் சுவருக்கு மேலே உடம்பு தெரிந்துவிடாமல் தாழ்ந்து தாழ்ந்து அவன் இரண்டு மூன்று படிகள் இறங்கினான். தலையைக் கொஞ்சமாக, மிக மிகக் கொஞ்சமாகத் தூக்கிக் கீழே பார்த்தான்.

என்னதான் சடகோபன் முன்பே சொல்லியிருந்த போதிலும் இப்போது அந்தக் காட்சியைப் பார்க்கையில் அவன் நரம்புகள் சில்லிட்டன. கண்கள் குத்திட்டன.

ஓர் அகல் விளக்கை ஏற்றிக் கொண்டு, அது காற்றில் அணைந்து விடாதபடி புடவைத் தலைப்பால் மறைத்துக் கொண்டு வெளிவரும் சுபாவைப் பார்த்த போது அவனுக்குள் ரத்தம் உறைந்த மாதிரி இருந்தது. விளக்கின் சுடர் மெல்ல ஆடி, அவள் முகத்தில் பலவீனமான வெளிச்சத்தையும் நிழலையும் மாற்றி மாற்றி வீசியதைக் காண, அந்த அமானுஷ்யமான வேளையும் அமானுஷ்யமான தோற்றமும் மனோஜை நிலைகுலையச் செய்தன.

அவள் கதவைத் திறந்து கொண்டு வெளியே சென்றதுமே இந்தப் பக்கம் சடகோபனும் கோமளமும் உள்ளேயிருந்து வந்தார்கள். 'நாங்கள் வரட்டுமா?' என்று கேட்கிற மாதிரி அவர்கள் பார்க்க, 'வேண்டாம். நான் பார்த்துக் கொள்கிறேன்,' என்று சாடையிலேயே பதிலளித்துவிட்டு அவன் வெளியேறினான்.



அட்டை வண்ணப்படம் எடுத்தவர் :

திலீப் பானர்ஜி

பிள்ளையார் கோவிலை அவன் அடைந்த போது சுபா விளக்கைக் கோவில் படியில் வைத்துவிட்டு வேகமாக நமஸ்காரம் செய்ய ஆரம்பித்திருந்தாள்.

கால்களில் ஆணி அடித்து நிறுத்திவிட்ட மாதிரி அவன் அசையாமலேயே பார்த்துக் கொண்டு நின்றான்.

பிசாசு பிடித்தவளைப் போல் அவள் புயல் வேகத்தில் விழுந்து விழுந்து எழுந்த போது, அவளைச் சமீபிக்கவே அவனுக்கு அச்சமாயிருந்தது.

இருந்தாலும், அக்கவுண்டெண்டின் வார்த்தைகளை ஞாபகப் படுத்திக் கொண்டான். 'ஒரு பயமுமில்லை. ஒரு பயமுமில்லை. ஒரு பயமுமில்லை.....'

தைரியத்தை வரவழைத்துக் கொண்டு அவளை நெருங்கினான்.

இப்போது அவளுடைய நமஸ்காரத்தின் வேகம் அதிகரித்திருந்தது.

''சுபா.....'' என்று மெதுவே கூப்பிட்டான்.

அவளிடம் மாறுதலைக் காணோம். அவள் நமஸ்காரமும் நிற்கவில்லை.

''சுபா.....'' என்று இம் முறை உரக்கவே கூப்பிட்டான்—இல்லை, அதட்டினான்.

இப்போதும் அவள் நிறுத்தவில்லை. அவனைத் திரும்பிப் பார்க்கவும் இல்லை.

அவனுக்குத் தைரியம் வந்தது.

''சுபா.... என்ன இது பைத்தியக்காரத்தனம்? சுபா, நிறுத்து! நிறுத்து!''

அவள் தோள்களைப் பிடித்து உலுக்கியதுதான் அவனுக்குத் தெரியும்.

படீரென்று பேயறையாக ஓர் அறை அவன் தலைமீது விழுந்தது. அடித்தது ஒரு மானிடக் கைதானா என்பதைக் கூட அவனால் காண இயலவில்லை. அப்படியொரு மூர்க்கமாக அவள் அவனுடைய நடு மண்டையில் அடித்தாள்.

கண்ணிமைக்கும் நேரத்துக்குள் அவன் சுருண்டு விழுந்தான்.

(தொடரும்)

மோப்பெட் சொந்தக்காரர் யாரை வேண்டுமானாலும் கேட்டுப்பாருங்களேன்—அவரது தேர்வு எது என்று. லூனா என்பதே அவர்கள் பதிலாக இருக்கும். நாளாவட்டத்தில், சிறந்த மோப்பெட் எதுவாயிருந்தாலும் அதை லூனா என்றே குறிப்பிட ஆரம்பித்து விட்டார்கள்.

ஆம், லூனா ஓர் அளவுகோலாகிவிட்டது. காரணம், பெரிதும் தொல்லையற்ற தலைசிறந்த மோப்பெட் என்று நிரூபித்துவிட்டது. எப்போதும் உன்னத தரத்தையும் புரட்சிகரமான மாறுதல்களையுமே கருத்தில் கொண்டிருக்கும்.

அதன் சேஸியைத்தான் பாருங்களேன். உலோகத் தகட்டினாலான இதன் சேஸிஸ், மிகப் பெரிய கிராஸ் செக்ஷன் (குறுக்குவெட்டுப் பகுதி) கொண்டபடியால் லூனா, இதர மோப்பெட்டுகளைவிட அதிக உறுதியாக இருக்கிறது.

அதோடு ஓசை மிகுந்த, துருவேறக்கூடிய உலோகச் செயின்களை உபயோகிக்கும் பெரும்பான்மையான மோப்பெட்டுகளைப் போலன்றி, இறக்குமதி செய்யப்பட்ட 'வி'-பெல்ட்டுகளை உபயோகிக்கிறது லூனா. அதனால் 1500 கி. மீட்டர் வரை ஓசையற்ற டிரான்ஸ்மிஷன் கிடைக்கிறது. அதோடு, இதன் என்ஜின், டிரான்மிஷன் அனைத்தும் தூசு படியா வண்ணம் பாதுகாப்பும் பெற்றிருக்கின்றன.

அதுமட்டுமா? லூனா ஒன்றில்தான் 4 ஃப்யூயல் ஃபில்டர்கள் உள்ளன. எனவே, எரிபொருள் பாதையில் தூசடைந்து, வண்டி நின்றுபோகும் வாய்ப்பு மிகக் குறைவு.

முன்புற, பின்புற ஷாக் அப்சார்பர்கள், ஸ்விங்-ஆர்ம் அனைத்தும் சைலன்ட் பிளாக்குகள்மீது பொருத்தப்பட்டிருப்பதால், உங்கள் லூனா, எந்தப் பாதையிலும் தொல்லையின்றி மழமழப்பாக ஓடும்.

உங்கள் லூனாவில் தப்பித்தவறி ஏதேனும் பழுது ஏற்படின் நாடெங்கும் உள்ள 359 லூனா விற்பனையாளர் எவரையும் அணுகலாம்.

நம்பிக்கைக்குப் புகழ்வாய்ந்த சரித்திரம் படைத்துவிட்டது லூனா. 400,000க்கும் மேற்பட்ட மகிழ்ச்சிகரமான லூனா சவாரியாளரைக் கேட்டுப்பாருங்கள். அவர்கள் வாய் ஓயாமல் லூனாவின் புகழ் பாடுவார்கள்.

எனவே பி.வி.கே. ஐயரைப்போல, நீங்களும் மோப்பெட்டைப்பற்றி யாரையேனும் கேட்டு, அவர்கள் லூனா என்று சொன்னால் ஆச்சரியப்பட வேண்டாம்.

லூனாவின் மகிமை அத்தகையது.

## லூனா TFR ப்ளஸ் இந்தியாவிலேயே முதல்தரமான மோப்பெட்



லூனா
TFR ப்ளஸ்

# என்னைத் தவிர

**4**

''நீ என்னவோ மரணப் படுக்கையில் கிடக்கிறுயாக்கும்னு பயந்து போய் ஓடி வந்தேன். கல்லுக் குண்டாட்டம் நல்லாத்தானே இருக்கிறே?'' என்முள் சுபா.

''உஷ்! இது நர்ஸிங் ஹோம், சுபா. கன்னுபின்னுன்னு பேசாதே,'' என்று கோமளம் அதட்டினுள்.

மாடிப் படியிலே உருண்டு விழுந்து விட்டான் என்றும் நர்ஸிங் ஹோமிலே சேர்த்திருப்பதாகவும் அவனிடம் சொல்லிவைத்திருந்தார்கள்.

சடகோபன் கேட்டார். ''எந்த நர்ஸிங் ஹோம்னுகூட உன்னிடம் சொல்லலியே? எப்படிக் கண்டுபிடித்தாய்?''

''நீங்க சொல்லாவிட்டால் எனக்குத் தெரியாதா அப்பா? நமக்குத் தெரிஞ்ச ஒரே டாக்டர்—நர்ஸிங் ஹோம் வைத்திருக்கறவர்—இந்தத் தேவராஜ்

**கிருஷ்ணகுமார்**

தான். அதனுலே டாண்ணு வந்துவிட்டேன்,'' என்ற சுபா மனேஜின் பக்கம் நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டாள். ''கையில் காலில் ஒரு இடத்திலும் கட்டு கிட்டு எதையும் காணேமே, மனேஜ்? அப்புறம் என்ன பிரமாத அடி?''

''அடியுமில்லே, கிடியுமில்லே. மாமாவும் மாமியும் பயந்து போய்ப் பெரிசு பண்ணிட்டாங்க,'' என்முன் மனேஜ்.

ஒரு மணி நேரத்துக்கு முன்னுல் அவனுக்கு நினைவு திரும்பிய போது பின் தலையில் சம்மட்டியால் அடிக்கிற மாதிரி விண்விண்ணென்று தெறித்துக் கொண்டிருந்தது. மேலே விழுந்திருக்கும் பெரிய இரும்புப் பாளத்தைத் தள்ள முடியாமல் திணறுகிற மாதிரி கண்கள் கனத்தன.

தான் ஒரு கட்டிலில் படுத்திருப்பதை உணர்ந்தான். சூழ்நிலையும் நெடியும் அது ஒரு ஆஸ்பத்திரி என்று தெரிவித்தன. அருகே இரண்டு நாற்காலிகள்—அதில்...... யார்? கோமளமும் சடகோபனும்......

''மாமா...... மாமி......'' என்று அவன் உதடுகள் முணுமுணுத்தன.

மறு விநாடியே இருவரும் குனிந்து அவன் கைகளைப் பிடித்துக் கொண்டார்கள். ''மனேஜ், உனக்கு ஒண்ணுமில்லையே? நல்லா தேவலையாப்பா.....'' என்று கோமளம் புலம்புவது அவனுக்குத் தூக்கத்தில் கேட்கிற மாதிரி இருந்தது.

''இந்தா மனேஜ். நீ முழிச்சிட்டதும் ஹார்லிக்ஸ் கொடுக்கச் சொன்னுர் டாக்டர். சூடாய் இருக்கு. குடி,'' என்று சடகோபன் உதட்டினருகே டம்ளரை வைத்தார்.

பானத்தின் சூடு அவனுக்கு உணர்வுகளை முற்றுமாக அழைத்து வந்தது. உறிஞ்சிக் குடித்தபடி, ''மாமா..... என்ன ஆச்சு எனக்கு? இது ஆஸ்பத்திரி மாதிரி இருக்கே? எப்படி நான் இங்கே வந்தேன்?'' என்று கேட்டான்.

''இது ஒரு பிரைவேட் நர்ஸிங் ஹோம். எனக்கு ரொம்ப வேண்டிய டாக்டருடையது,'' என்முர் அவர்.

ஜன்னலுக்கு வெளியே மாலை வெய்யில் சாய்ந்து கொண்டிருப்பதைக் கவனித்தான் அவன். முதல் நாள் ராத்திரி..... பிள்ளையார் கோவில்..... சுபா கொடுத்த ராட்சச அடி......

''மாமா, சுபாவுக்கு..... நேத்து......''

''வீட்டுக்கு வந்த பிறகு விவரமாய்ச் சொல்கிறேன். நேத்து உன் பின்னுலேயே நாங்களும் வந்தோம். சுபாவை நீ தொட்டதும் படீரென்று உன் மண்டையில் அடித்தாள். நீ மயக்கம் போட்டு விழுந்து விட்டாய்..... அவள் எந்தப் பிரக்ஞையு

மில்லாமல் தன் நமஸ்காரங்களை முடித்துக் கொண்டு வீட்டுக்குள் வந்து படுத்து விட்டாள். நாங்கள் பதறிப் போய் ராத்திரி யோடு ராத்திரியாய் ஓர் ஆட்டோ பிடித்து இங்கே கொண்டு வந்து சேர்த்தோம். டாக்டர் இஞ்செக்ஷன் போட்டார். நல்ல காலம், ரத்தக் காயம் எதுவுமில்லை.....''

''நான் இப்படி அடிபட்டுக் கிடக் கிறது அவளுக்குத் தெரியுமா மாமா?''

''காலையில் எழுந்ததுமே நீ எங்கேன்னு கேட்டாள். மாடிப் படியிலே கால் இடறி விழுந்து, நர்ஸிங் ஹோமுக்குப் போயிருக்கிறாய் என்று சொல்லி வைத் தோம்...... தானும் வர்றேன்னு சொன் னாள். வேண்டாம் என்று தடுத்து விட் டோம்.....'' என்று அவர் சொல்லிக் கொண்டிருந்த போது—

சுபாவே வந்து சேர்ந்து விட்டாள்.

சடகோபனும் மனோஜும் கோம ளமும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டதை அவள் கவனிக்கவில்லை. கவனித்திருந்தாலும் அந்தப் பார்வை களின் அர்த்தம் அவளுக்குப் புரிந்து இருக் காது.

கட்டிலின் விளிம்பில் உட் கார்ந்து ஒரு சாத்துக்குடியை உரித்தாள் சுபா.

''ஏன் மனோஜ், மாடிப் படியிலே உருண்டு விழுந்தேன்னு சொல்லிக்க உனக்கு வெட்கமாயில்லே? கண்ணு தெரியலே? தொண்ணூறு வயசுக் கிழவனு நீ?'' என்றாள். ''ஆனால் எனக்கு ஒரு விதத் திலே சந்தோஷம். என்ன சொல்லு?''

''என்ன?''

''மாடிப் படியில் உருண்டு விழுந்த மனோஜ்னு என் டைரியில் எழுதிப் பேன். எதுகை மோனையுடன் வாக்கியம் அழகாயிருக்கு. நீ கொல்லைப்புறத்தில் சறுக்கி விழுந்திருந்தேன்னு வைச்சுக்க, உன் பேர் குமாரசாமின்னு இருந்தால் தான் 'கொல்லையில் விழுந்த குமார சாமி'ன்னு எழுதிக்கலாம்....''

''போதும் சுபா. அசடு வழி யறது!'' என்று கோமளம் மகளைக் கண்டிக்க, சடகோபன், ''டாக்டர் வந் தால் ஏன் இத்தனை கூட்டம்னு கோபிப் பார். புறப்படலாம். மனோஜ், உடம்பைப் பார்த்துக்க, நாளைக்கு வீட்டுக்கு வந்துட லாம்னு டாக்டர் சொல்லியிருக்கார்,'' என்றார்.

மூவரும் எழுந்து கொண்டார் கள்.

சுபா மட்டும் சற்று மெல்ல நடந் தாள். அப்பாவும் அம்மாவும் தூரத்தில் போகும் வரை பார்த்துவிட்டு, மனோஜிடம் திரும்பி வந்தாள். ''மனோஜ், என்ன இதெல்லாம்? ஏன் மாடிப் படியில் விழுந்தே? எங்கே அடிபட்டது? ரொம்பப் பலமா?'' என்றாள் பதட்டத்துடன்.

மனோஜ் ஒன்றும் பேசவில்லை.

''அப்பாவுக்கும் அம்மாவுக்கும் எதிரில் ரொம்பக் கவலைப்படற மாதிரி காட்டிக்கக் கூடாதென்று விளையாட் டாய்ப் பேசினேன். ஆனால் உனக்கு அடி பட்டதுன்னு கேட்டதும் நான் எப்படித் துடித்துப் போயிட்டேன் தெரியுமா? உன் கண்ணில் சின்னத் துரும்பு பட்டால் கூட எனக்குத் தாங்காது, மனோஜ்,'' என்று அவள் தொடர்ந்தாள்.

## தங்கத்தைக் காட்டிலும் செப்பே உயர்ந்தது

வீரமாமுனிவர் வாழ்ந்த காலத்தில், தூத்துக்குடியில் அண்ணாவியார் என்னும் புலவர் ஒருவர் வாழ்ந்தார். வீரமாமுனிவரும் அண்ணாவியாரும் நண்பர்கள். ஒரு முறை வீரமாமுனிவர், ''அண்ணாவி யாரே! எம் பாடல் தங்கக் காசு. உம் பாடல் செப்புக் காசு,'' என்று வேடிக்கையாகக் கூறினார்.



''ஆம் முனிவரே! நீர் சொல்வது உண்மை. தங்கக் காசைப் பெரியவர்கள் மட்டும்தான் பயன்படுத்துவார்கள். செப்புக் காசை பெரியவர், சிறுவர், ஏழை, பணக்காரர் ஆகிய அனைவரும் பயன் படுத்துவார்கள். அதுபோல உங்கள் பாடலைப் பெரியவர், உயர்ந்தவர் படித்து மகிழலாம். என் பாடலைச் சிறுவர் முதல் அனைவரும் படித்து மகிழ வாம்,'' என்றார் அண்ணாவியார்.

ஒரு நர்ஸ் உள்ளே வந்து தர்மாமீட்டர் வைத்து மனோஜின் டெம்பரேச்சரைக் குறித்துக் கொண்டு சென்றாள். அந்தச் சில விநாடிகளுக்குப் பேசாதிருந்த சுபா மறுபடியும் படபடவென்று தொடர்ந்தாள்.

''மனோஜ், இன்னும் ஒரு தடவை இந்த மாதிரி எங்கேயாவது விழுந்து கிழுந்து காயம் கீயம் பட்டுக் கொண்டாயோ, நானே உன்னை அறைஞ்சிடுவேன்! தெரியறதா? நான் பார்க்கிறதுக்குத்தான் இப்படி ஒல்லியாய் இருக்கிறேன். அறைஞ்சால் எப்படி இருக்கும் தெரியுமா?''

'எனக்கா தெரியாது!' என்று எண்ணிக் கொண்டான் அவன்.

''நான் வரேன்.....'' என்று புறப்பட்டாள் அவள். ''மாடிப் படியில் உருண்ட மனோஜ்! போய் டைரியில் எழுதிக்கணும்.''

மனோஜ் கண்ணை மூடிக் கொண்டு மௌனமாய்ப் படுக்கையில் கிடந்தான். சுபா பேசிய பேச்சு ஒன்றொன்றாய் நினைவு வந்ததும்—

குபுக்கென்று எழுந்து உட்கார்ந்தான். கட்டிலுக்குப் பக்கத்திலிருந்த அழைப்பு மணியை அழுத்தினான்.

நர்ஸ் விரைந்து வந்ததும், ''இப்போது வந்துவிட்டுப் போனார் பார், ஒரு பெரியவர்? சடகோபன் என்று பெயர். வாசல் வரைதான் போயிருப்பார். அவரை மட்டும் நான் கூப்பிட்டதாகச் சொல்லி அழைச்சிட்டு வா. க்விக்!'' என்றான்.

சில நிமிடங்களில் சடகோபன் திரும்பி வந்தார். ''என்ன மனோஜ்?''

''மாமா, உங்களை ஒண்ணு கேட்கணும். சுபாவுக்கு டைரி எழுதுகிற பழக்கம் உண்டா?''

''உண்டே? தினம் எழுதுவாள். ஏன்?''

''அப்ப அவளுடைய பழைய டைரிகளை நான் பார்த்தாகணும். உடனே அதையெல்லாம் கண்டு பிடிச்சு வையுங்கள். சுபாவுக்குத் தெரியாமல் திருடினாலும் சரி!''

''என்னது!''

''ஆமாம் மாமா. அவளோட நோய் எப்படி ஆரம்பித்தது, எங்கே ஆரம்பித்தது, எப்போது ஆரம்பித்தது என்கிற விவரங்களை அவள் டைரியிலிருந்து கண்டு பிடிக்கலாம்,'' என்றான் மனோஜ் படபடப்பாக.

''சரிப்பா,'' என்றார் அவர்.

அடுத்த இரண்டு மூன்று நாட்களும் அவன் ஆவலுடன் காத்திருந்தான்—டைரி எப்போது வருமென்று.

சுபா அவனுடைய வேதனையை அறியாத விளையாட்டுப் பெண்ணாகவே இருந்தாள்.

அவன் எதிரே வந்து வந்து அவனை வம்புக்கு இழுத்துக் கொண்டிருந்தாள். கிண்டல் செய்து கொண்டிருந்தாள்.

அவன் காலையில் காப்பி சாப்பிடக் கீழே இறங்கி வரும்போது, ''என்ன பயில்வான் சார், இன்னிக்கு எத்தனை படி உருண்டு விழுந்தீங்க?'' என்று கேட்பாள்.

''நீ ஒரு நாளைக்கு விழுந்து பார். அப்பத் தெரியும்,'' என்று அவன் பதிலளித்துவிட்டுச் செல்வான்.

''நான் ஏன் விழுகிறேன்? கடவுள் கொடுத்த இரண்டு கண்ணும் நல்லாவே இருக்கு,'' என்பாள் அவள்.

சாயந்தரம் பாங்க்கிலிருந்து அவன் திரும்பி வரும் போது, வழியை மறித்து, ''எங்கே, கையைக் காலையெல்லாம் காட்டு. எங்கேயும் மோதிக்கிட்டு காயம் பட்டிருக்கிறயா பார்க்கணும்,'' என்பாள்.

கோமளம், ''உஷ்! சும்மா இருடி,'' என்று அதட்டினால், ''நீ சும்மா இரும்மா. இவன் பாட்டுக்கு அடி பட்டுக்கிட்டு தேவராஜ் நர்ஸிங் ஹோமில் அட்மிட்டாகி விடுவான். டாக்டர் பீஸ்,

# நினைக்கும் போதுதான்



ஒருவன் எந்த வேலையும் செய்யாமல் இருக்கும் போதுதான், எல்லா வேலைகளும் நடைபெற 'நானே காரணம்' என்று நினைக்கிறான்.

—ஜீன் பால் சாட்டோ.



சலூன் கடைக்காரர்: ''வெட்டின் வரைக்கும் முடி அழகாத் தான் இருக்கு. ஆனா இந்த வலது காதுதான் இடது காதைவிடச் சின்னதாக இருக்கு!''

வந்தவர்: !

—சாரதி டேச்சு.

**



மனைவி: அத்தான், தயவு செய்து நீங்கள் இரண்டாவது கல்யாணம் செய்து கொள்ளுங்கள்.

கணவன்: ஏண்டி, எதுக்காக?

மனைவி: நான் ஒருத்தியாகச் சண்டை போட்டு உங்க அம்மா கிட்ட ஜெயிக்க முடியாது.

—சுந்தர் சுந்தரி

---

நர்ஸிங் ஹோம் சார்ஜ் எல்லாம் நாம் அழுகிற மாதிரி ஆகிவிடும்,'' என்பாள்.

மனோஜ் சிரித்துக் கொண்டே போய் விடுவான். அவனுக்குச் சடகோபனிடம் நம்பிக்கை இருந்தது. சொன்னபடி அவளுடைய டைரிகளை எடுத்து வந்து கோடுப்பார் என்று ஆவலுடன் காத்திருந்தான். சுபாவின் கோளாறுக்குக் காரணத்தை அதிலே நிச்சயமாகக் கண்டு பிடிக்க முடியும் என்ற உறுதியான நம்பிக்கை இருந்தது.

ஆனால் அதைப் பற்றி அவரை விசாரிப்பதற்குச் சந்தர்ப்பம் கிடைக்காமல் பெரும்பாலும் சுபா அவருடன் கூடவே இருந்து கொண்டிருந்தாள். சடகோபனைக் கண்ணால் கேள்வி கேட்பான். 'பொறுமையாயிரு' என்று கண்ணாலேயே அவர் பதில் கொடுத்துக் கொண்டிருந்தார்.

'சரி, டைரி வருகிற போது வரட்டும்,' என்று தீர்மானித்து, தன் அலுவலகக் கவலைகளில் மூழ்க முயன்றான்.

குறிப்பாக, கறவை மாட்டுக்காகக் கடன் வாங்கிச் சென்ற ஒருவரிடமிருந்து பைசா கூடத் திரும்பி வராததைப் பற்றி அவன் தலையைப் பிய்த்துக் கொள்ள வேண்டியிருந்தது.

அட்ரஸ் அட்ரஸாய் மாறிப் போயிருந்த அவரைத் தேடிப் பிடித்தான்.

''எப்படிங்க பணம் கட்ட முடியும்? மாடு கறவை நின்னு போச்சே! அதோ பாருங்க,'' என்று கூறி வற்றலும் தொற்றலுமாய் இருந்த மாட்டைக் காட்டினர் அந்த நபர்.

''ஏன் கறவை நின்னு போச்சு? நல்ல மாடுன்னு பார்த்துத்தானே வாங்கினீங்க?'' என்றான் மனோஜ்.

''உங்களுக்கு முன்னே இருந்த ஆபீசர் ஒரு வெடரினரி டாக்டரை அழைச்சிட்டு வந்திருந்தார். இது அருமையான மாடுன்னு அந்த டாக்டர்தான் சர்டிபிகேட் கொடுத்தார். அது இந்த லட்சணத்திலே இருக்குது. ஏன் சர்டிபிகேட் கொடுத்தீங்கன்னு உங்க டாக்டரையே கேளுங்க,'' என்று கூறி மாட்டுக்காரர் தன் கையைக் கழுவிக் கொண்டு விட்டார்.

கால்நடை வைத்தியர் நற்சாட்சி கொடுத்த மாடு இதுதானா என்று கேட்கலாமென்றால் அவர் மாற்றலாகி வேறு ஊருக்குப் போய்விட்டதாகத் தெரிந்தது.

இப்படிச் சில்லறை சில்லறையான பிரசினைகளில் அவன் மூழ்கியிருந்த சமயம்—

ஒரு நாள் மாலை அவன் பஸ்ஸிலிருந்து இறங்கிய போது சடகோபன் அவனை நோக்கி வந்தார்.

''என்ன, கிடைச்சிட்டுதா?'' என்றான் ஆவலுடன்.

''இல்லை. அதைப் பற்றிச் சொல்லத்தான் வந்தேன். டைரிகளையெல்லாம் தன் ஸ்டீல் அலமாரிக்குள்ளே வைத்திருக்கிறாள் சுபா. சாவி எப்பவும் அவள் இடுப்பிலேயே இருக்கு. என்ன செய்யறதுன்னு தெரியவில்லை,'' என்றார் அவர்.

''ஏதாவது வழி பண்ணலாம்,'' என்றானே தவிர, என்ன வழியென்று அவனுக்கே தெரியவில்லை.

ஆனால் வீட்டை அடைந்து சுபாவின் அறையைக் கடந்த போது ஒரு வழி புலப்பட்டது.

ஸ்டீல் அலமாரியில் தன் துணிமணிகளை எடுத்து அடுக்கிக் கொண்டிருந்தாள் அவள். மனோஜின் காலடி


ஏவிஎம்ராஜனின்
ராஜ்மகல்
அளிக்கும்
இப்பொழுது
நடைபெறுகிறது!
நன்றி
இராம நாராயணன்
என்.கே.விஸ்வநாதன் வாலி சங்கர்கணேஷ்
சுஜாதா பிலிம்ஸ் பிரைவேட் லிமிடெட் வெளியீடு

யோசை கேட்டதும், ''இங்கே உள்ளே வந்து எனக்குக் கொஞ்சம் ஒத்தாசை பண்ணேன்? பெரிய மகாராஜா மாதிரி நீ பாட்டுக்குப் போகிறயே?'' என்றாள்.

''வேண்டாம். காயம் பட்டுக் கொள்வேன்,'' என்றான் அவன்.

''புடவையை மடிச்சு வைச்சால் காயம் படாது.''

அவன் உள்ளே நுழைந்து, ''அதில்லை, பொம்பளைகள் என்னென்னவோ அசிங்கம் அசிங்கமாய், கோரம் கோரமாய் டிரெஸ் வைச்சிருப் பாங்க. அதைப் பார்க்கக் கூடாதுன்னு கண்ணை மூடிப்பேன். எதிலாவது இடிச்சுப் பேன்,'' என்றான்.

''ஐய! எங்க அப்பாவுக்குத் தாத்தா ஒருவர் இருந்தார்—'வியாக்கியான சக்கரவர்த்தி'ன்னு பெயர். அவரோட மறு அவதாரம் நீ,'' என்றவள், ''மனோஜ்....'' என்று ஆசை நிரம்பிய குரலில் அழைத்து அவன் தோள் மீது கை வைத்தாள்.

''உஷ்! அம்மா வரப் போகிறாள்,'' என்று விலகிக் கொண்ட அதே வினாடியில் அவள் இடுப்பிலிருந்த சாவிக் கொத்தில் அவன் கை பட்டது. அந்த வினாடியிலேயே அவனுக்கு அந்த யோசனையும் உதித்தது.

''சுபா....'' என்று அவளுடைய வழவழத்த இடுப்பை இரு கைகளாலும் அணைத்துக் கொண்டான். கூடவே, 'சே, இது பேடித்தனம். கோழைத்தனம். அப்பாவியான பெண்ணை ஏமாற்றுகிற அயோக்கியத்தனம்!' என்றெல்லாம் அவன் மனம் அவனை இடித்தது. 'இது சுபாவுக்

இவளிடமிருந்தே காப்பாற்றுவதற்காக,' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

''மனோஜ்.... மனோஜ்....'' அவளுடைய வெப்பமான மூச்சுக் காற்று அவனுடைய கழுத்தை வருடிக் கொண்டிருந்தது.

அவன் கை திருட்டுத்தன்மாக அந்தச் சாவி வளையத்தை அவள் இடுப்பிலிருந்து உருவி எடுத்துப் பாண்ட் பைக்குள் போட்டுக் கொண்டது. அவனுக்கு அவன் மீதே வெறுப்பு ஏற்பட்டது. 'என்ன ஈனத்தனமான காரியம்!' என்று மறுபடி மறுபடி அவன் உள்ளம் வெட்கியது.

மாடிப் படியில் எதிர்ப்பட்ட சடகோபனிடம் சாவியைத் தந்து விட்டுத் தன் அறைக்குப் போய்க் கட்டிலில் தொப்பென்று விழுந்தான்.

சற்றைக்கெல்லாம் கீழே சுபா, ''என் சாவி எங்கே? கொஞ்சம் முன்னடி இருந்ததே? இங்கேதானே வைத்தேன்?'' என்று சொல்வதும், ''எங்கேயாவது உன் புடவைகளுக்குள் செருகிக் கொண்டிருக்கும். காலையில் பார்த்துக் கொள்ளலாம்,'' என்று சடகோபன் கூறுவதும் அவன் காதில் விழுந்தன.

இரவு பன்னிரண்டு மணி அடித்த போது சடகோபன் அவனை எழுப்பி, இரண்டு டைரிகளைத் தந்தார்.

(தொடரும்)

## முடியும் – முடியாது



பணம் எதையும் செய்யும் என்கிறார்கள். அதனால் தர முடியாதவை பல உள்ளன. பணத்தால் உணவை வாங்கலாம்; ஆனால் பசியை வாங்க முடியாது. மருந்து வாங்கலாம்; ஆனால் ஆரோக்கியத்தை வாங்க முடியாது. அறிந்தவர்கள் தெரிந்தவர்கள் பலரைப் பெறலாம்; ஆனால் நல்ல நண்பர்களைப் பெற முடியாது. வேலைக்காரர்களைப் பெறலாம்; ஆனால் விசுவாசமுள்ளவர்களைப் பெற முடியாது. வசதிகளைப் பெறலாம்; ஆனால் அமைதியை—ஆனந்தத்தைப் பெற முடியாது.

—வோர்ல்ட் எக்சிகியூடிவ் டைஜஸ்ட்டிலிருந்து.




குமுதம்
மதி:37 மலர்:48
6-9-84

# புதிய படையெடுப்பு

பாகிஸ்தான் ஜனாதிபதி ஜியாவிடம், ''தயவு செய்து பாகிஸ்தானைவிட்டுக் கடத்தல் விமானம் கிளம்ப அனுமதிக்காதீர்கள்,'' என்று இந்திரா காந்தி கேட்டுக் கொண்டிருந்தும்; ''கடத்தல்காரர்களைக் கைது செய்யுங்கள்,'' என்று கோரிக்கை விடுத்திருந்தும்;

அதைப் பொருட்படுத்தாமல் விமானத்தின் டாங்கிகளை நிரப்பி, பாகிஸ்தானை விட்டுப் புறப்பட அனுமதித்திருக்கிறார்கள்.

அது மட்டுமா?

சண்டிகரிலிருந்து கிளம்பிய அந்த விமானம் சீக்கியத் தீவிரவாதிகளால் கடத்தப்பட்டு லாகூருக்குக் கொண்டு செல்லப்பட்ட பிறகு, ஒரு பாகிஸ்தானிய அதிகாரி கடத்தல்காரர்களிடம் ஒரு பொட்டலம் கொடுத்ததாக விமானத்திலிருந்த இரண்டு பிரிட்டிஷ் பயணிகள் கூறுகிறார்கள்.

கிருஷ்ணகுமார்

5

''தம்பி ஊருக்குப் புதிசு. உத்தியோகத்துக்கும் புதிசு. வயசும் பத்தாது. அதான் இப்படிப் பிடிவாதம் பிடிக்கிறீங்க,'' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார் எதிரே உட்கார்ந்திருந்த ஆள். பிடிப்பான மல் ஜிப்பாவில் அவருடைய இரட்டை நாடி உடம்பு வேர்வையைக் கொட்டிக் கொண்டிருந்தது. கழுத்தை சுற்றி மாலை போல் போட்டிருந்த நீண்ட துண்டினுல் முகத்தைத் துடைத்துவிட்டுக் கொண்டு மனோஜை நோக்கி ஒரு விகாரமான சிரிப்பை வீசினுர்.

அவருடைய பெயர் பழனிமுத்து என்பதும் இந்தப் பேட்டையில் ஒரு பெரிய புள்ளி என்பதும் மனோஜுக்குத் தெரியும். ஏராளமான அனுமத்து ஆட்களுக்கு ஏராளமாகக் கடன் வழங்கும்படி அவர் சிபாரிசு பண்ணியிருந்தார். மனோஜ் இடம் கொடுக்கவில்லை. பாங்க் பணத்தை அப்படியெல்லாம் வாரியிறைக்க முடியாதென்று போன வாரமே மறுத்துவிட்டான். பழனிமுத்து விடாக்கண்டராக இருந்தார். இது அவருக்குக் கௌரவப் பிரசினையாக இருந்தது. அல்லது கடன் வழங்கச் சொன்ன ஆட்களுக்கும் அவருக்கும் ஏதேனும் கமிஷன் தொடர்பு இருந்ததோ என்னவோ?

திரும்பத் திரும்பப் பாங்க்கை முற்றுகையிட்டார். திரும்பத் திரும்ப மானேஜரிடம் மனுப் போட்டார்.

மானேஜர்கூட, பழனிமுத்து பொல்லாதவராயிற்றே என்று பயந்தார். ஆனாலும் மனோஜ் தடுக்கிற போது, அவனை மீறிக் கொண்டு பழனிமுத்துவை ஆதரிக்க அவர் தயாராயில்லை.

''நான் என்ன சொல்கிறேன்னு, தம்பி ஊருக்கும் புதிசு. உத்தியோகத்துக்கும் புதிசு.....'' என்று பழனிமுத்து மறுபடியும் பல்லவி எடுத்ததும் மனோஜுக்குக் கோபம் வந்துவிட்டது.

''அட சரித்தான் எழுந்திரய்யா!'' என்று தன்னை மீறிக் கத்திவிட்டான். உடனே சுதாரித்துக் கொண்டு, ''மிஸ்டர், தயவு பண்ணி என் நேரத்தை வேஸ்ட் பண்ணுமல் புறப்படுங்க,'' என்ருன்.

அவனுடைய சீற்றக் குரல் பாங்க் முழுதும் கேட்டது.

பல பேர் தன்னைப் பார்ப்பதைக் கண்டு பழனிமுத்துவுக்கு அவமானமாகிவிட்டது. கருகருவென்று வளர்ந்திருந்த மீசையை ஒரு முறை முறுக்கிக் கொண்டார். ''இதற்கு நீ வருத்தப்படப் போறே, தம்பி,'' என்று கூறிவிட்டு எழுந்து சென்றுவிட்டார்.

''சே!'' என்று தலையை இரு கைகளிலும் தாங்கிக் கொண்டு பெருமூச்சு விட்டான் மனோஜ்.

கொஞ்ச நேரமாக மறந்திருந்த அந்த டைரியை நோக்கியே மனம் மறுபடியும் ஓடியது.....

நேற்று. நள்ளிரவைத் தாண்டிய வேளையில், டைரியை எடுத்துக் கொண்டு சடகோபன் அவன் அறைக்குள் சப்தம் போடாமல் நுழைந்தபோது அவன் தூங்காமல் ஆவலுடன் விழித்திருந்தான்.




அட்டை வண்ணப்படம்: யோகா

அட்டையில்: குமாரி சபரி;
குமாரி வாணி
(மாநிலப் பெண்கள் கூடைப்
பந்தாட்டக்காரர் குழு தலைவி)

''இந்தா,'' என்று அவனிடம் மூன்று டைரிகளை ஒப்படைத்தார். ''எங்கே எழுந்து கொண்டு விடுவாளோன்னு பயந்து கொண்டே எடுத்தேன்.''

''ரொம்பத் தாங்க்ஸ் மாமா,'' என்றான் அவன். ''நிச்சயமாய் இதிலிருந்து ஏதாவது தெரியும் பாருங்கள்.''

''நான் ஒண்ணு சொல்றேன், கேட்கிறியா?''

''என்ன மாமா?''

''எங்கள் தலையெழுத்து எப்படி வேணுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும். சுபாவோட பிரசினையிலே நீயும் ஏன் மனோஜ் சிக்கிக்கிறே?''

''உங்களுக்கே அது புரியலியா மாமா?''

''வேண்டாம் மனோஜ். நீ என் ஆப்த சினேகிதரோட பிள்ளை. உன்னைப் போய் இதிலே மாட்ட வைச்சேன் என்றால் உன் அப்பாவுக்கு நான் செய்யற துரோகம் அது. 'தெரிஞ்சிருந்தே இப்படிப் பண்ணினயே' என்று நாளைக்கு அவர் கேட்டால் நான் எங்கே கொண்டு போய் முகத்தை வைத்துக் கொள்வேன்? செ... மனோஜ்.''

அவன் அவருடைய கைகளை மெல்லத் தட்டிக் கொடுத்துச் சிரித்தான். ''என் அப்பாவுக்கு நான் பதில் சொல்லிக் கொள்கிறேன். கவலைப்படாதீங்க. நீங்க முகத்தைக் கொண்டு போய் எங்கேயும் வைத்துக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படாது.''

''என்னவோ மனோஜ். எனக்குத் தோன்றியதைச் சொல்லிவிட்டேன்.'' சடகோபன் தயங்கித் தயங்கி ஒவ்வொரு படியாக இறங்கிச் சென்றார்.

பெரிய விளக்கை அணைத்துவிட்டு மேஜை விளக்கைப் போட்டுக் கொண்டு ஆவலாய் அந்த டைரியின் பக்கங்களைப் பிரித்தான்.

என்ன முத்து முத்தான கையெழுத்து!

எழுதும்போதிருக்கும் மூடுக்கு ஏற்றாற் போலச் சில வரிகள் தமிழிலும் சில வரிகள் ஆங்கிலத்திலுமாக மாற்றி மாற்றி எழுதியிருந்தாள்.

ஆனால் விசேடமாக எதுவும் தென்படவில்லை. கல்லூரியில் நடந்த குட்டிக் கலாட்டாக்கள், சினேகிதிகளுடன் சென்ற சினிமாக்கள், பஸ்ஸில் வம்பு பண்ணிய ஆண்கள்—சில சமயம் சீரியஸா யும் சில சமயம் வேடிக்கையாகவும் குறித்து வைத்திருந்தாள்.

அவ்வளவே.

கடைசி டைரியை—அது போன வருடத்தது—மூடிக் கட்டில் மீது போட்ட போது—

டைரியின் பிளாஸ்டிக் உறை மடிப்புக்குள்ளிருந்து ஒரு காகிதம் நீட்டிக் கொண்டிருப்பது தெரிந்தது.



ராஜா: இன்று முகமூடி அணிந்து கொண்டு நகர்வலம் போகலாமென்று இருக்கிறேன் அமைச்சரே.

அமைச்சர்: வேண்டாம் மன்னா! முகமூடிக் கொள்ளையர் அரசர் வேடம் பூண்டு அரண்மனையைக் கொள்ளையடிக்க வருகிறார்களாம்.

—பாத்திமா ஜெயபால்.

எடுத்தான். பார்த்துத் திகைத்தான்.

அது டைரியிலிருந்து கிழிக்கப் பட்ட தாள்தான். ஒரே ஒரு தாள். பிப்ரவரி மாதம் 27'ம் தேதி ஒரு பக்கத்திலும் 28'ம் தேதி மறு பக்கத்திலும் இருந்தது.

அதல்ல அவனுடைய திகைப்புக்குக் காரணம்.

இரண்டு பக்கமும் சுலோசனு சுலோசனு சுலோசனு என்று கிறுக்கல் கிறுக்கலாக எழுதப்பட்டிருந்தது.. சுலோசனு என்ற பெயர் மட்டும்தான். வேறு எதையும் காணேம்.

டைரியைப் பிரித்துக் கவனித்தான். பிப்ரவரி 27, 28 இரண்டு தேதியும் கொண்ட தாள் கிழிக்கப்பட்டிருப்பது தெரிந்தது.

முந்தின பக்கங்களைப் பார்த்தான். சுலோசனு என்ற சினேகிதியின் வீட்டுக்குக் கல்லூரிப் பாடம் படிக்க அடிக்கடி போனதாகக் குறிக்கப்பட்டிருந்தது.

ஆனுல் ஏன் இப்படித் திடீரென்று வெறும் சுலோசனு சுலோசனு சுலோசனு? ஏன் அதையும் பிறகு கிழித்து விட்டாள்?

அடுத்த பக்கங்களில் சுலோசனுவைப் பற்றிய பிரஸ்தாபமே இல்லை.

வெகு நேரம் விழித்திருந்து விட்டுத் தன்னையறியாமல் காலையில் அதிகம் தூங்கிவிட்டான். அவன் குளித்து முடித்துவிட்டுச் சாப்பிட வந்தபோது, டைனிங் மேஜையில் சுபாவும் சடகோபனும் அவனுக்காகக் காத்திருந்தார்கள்.

'என்ன ஆச்சு?' என்று கண்ணுல் வினவினுர் சடகோபன்.

'பொறுங்கள்,' என்று அவனும் கண்ணுலேயே பதில் தந்தான்.

''நீ சரியான மோசடிக்காரன், மனேஜ்,'' என்றுள் சுபா.

அவன் திகைத்தான். ''ஏன்?''

''நீ ஒரு கப்பல் வாங்கியதையும் சொல்லவில்லை, அது முழுகிப் போனதையும் சொல்லவில்லையே! உன் மூஞ்சியிலிருந்துதான் அதையெல்லாம் கண்டு பிடிக்க வேண்டியிருக்கிறது.''

கோமளம் குறுக்கிட்டு, ''சரிதாண்டி வாயாடி. சாதம் ஆறிப்



## புதியவன்

**க**தை: காதலர்களுக்கே எங்கள் ஓட்டு என்கிறது.

கதாநாயகன் என்று கல்கத்தா விசுவநாதனைத்தான் சொல்ல வேண்டும். கிராமத்துப் பண்ணையாரின் தோரணையும் பட்டணத்துப் பெரிய மனிதரின் மிடுக்கும் கலந்து என்ன லாகவம்!

மகளுக்குச் சுதந்திரம் கொடுப்பவர் போல் கொடுத்துக் கொண்டேயிருந்தவர், மேடையில் உணர்ச்சி வசப்பட்டுக் காதலனுக்கு எல்லார் முன்னிலையிலும் மகள் ஒரு இச் கொடுத்ததும் ஆளே ரௌத்ராகாரமாக மாறிக் காதலர்களைப் பழி கொட்டிக் கொள்ளத் தொடங்கிவிடுகிருர். கடைசியில் ரொம்ப எளிதாய் மனம் மாறிவிடுகிருர். அந்த இடத்துக்கு அழுத்தம் சேர்த்திருக்கலாம்.

கதாநாயக முரளி கறுகறுப்பு ஆனுலும் சுறுசுறுப்பு. (டனியனைக் கழற்ற வேண்டாமே.)

மகனைக் கண்டிக்காதவர்; அவனுடைய காதலைக் கண்டுக்காதவர்,' விஷயம் முற்றிய போதும்கூட எல்லைக்குள்ளிருந்தே அவனைக் கண்டிப்பவர்—பலே டில்லி கணேஷ்.

அனிதாவுக்குப் பளிச்சென்ற முகம். அப்பா விஸ்வநாத்தை எதிர்த்துப் பேசும்போது நல்ல துடிப்பு.

முழுவதும் காதல் கதையாகவே கொண்டு போவதில் டைரக்டருக்கு நம்பிக்கை இல்லை போலும். இல்லாவிட்டால் பிற்பகுதியில் அந்த அனுவசியக் கொலை முதலான குழப்பங்களைச் சேர்ப்பானேன்? ரோஷக்காரனும் சண்டைக்காரனுமான கதாநாயகன், செய்யாத கொலைக்காக அஞ்சி, போலீசாரிடமிருந்து ஓடி ஒளிவது பொருத்தமாயுமில்லை. சுவையாயுமில்லை.

போறது. முதலில் சாப்பிடு,'' என்றாள்.

ஏதாவது பேச்சுக் கொடுத்து, சுபாவின் வாயைக் கிளற முடியுமா என்று பார்க்க அவன் முயன்றான். ''ஆமாம்..... என் மூஞ்சி என்னவோ போலிருக்கு என்றால் அதற்குக் காரணம் இருக்கு. சீர்காழியிலே என் அத்தை ஒருத்தி இருந்தாள். அவள் இறந்து போன தினம் இன்னிக்கு.''

''உனக்கு அத்தையா? எனக்குத் தெரிஞ்சு யாரும் கிடையாதே?'' என்றாள் கோமளம்.

''அத்தை அதிகமாய் ஸ்ரீரங்கத்துக்கு வந்ததில்லை. அதனாலே உங்களுக்குத் தெரியாது,'' என்றான் மனோஜ். பிறகு சுபாவை ஓரக் கண்ணால் கவனித்தபடி, ''சுலோசனா என்று பெயர்,'' என்றான்.

மின்னல் வெட்டுகிற மாதிரி ஓர் அதிர்ச்சி சுபாவின் கண்களில் தோன்றி மறைவதை அவன் கவனிக்கத் தவறவில்லை. ''சுலோசனான்னு பெயர். ரொம்பக் கர்னாடகமான பெயர் இல்லை சுபா?'' என்றான்.

''சாம்பார் ரொம்பச் சப்புனு இருக்கும்மா,'' என்றாள் அவள்.

பேச்சைத் திருப்புகிறாள் என்பது தெளிவாகத் தெரிந்தது.

''சார்.... மனோஜ் சார்......''

நினைவுகளிலிருந்து வெளியே வந்தவன், சேவிங்ஸ் பாங்க் குமாஸ்தா நின்றிருப்பதைக் கண்டான்.

''இந்த எஸ்.பி. அக்கவுண்ட்—இது நீங்க அறிமுகம் செய்து வைச்சவங்க தானே? அன்னிக்கு அழைச்சிட்டு வந்திருந்தாங்களே உங்க கஸின் ஸிஸ்டர்....''

அறிமுக அட்டையைப் பார்த்தான். சுபா அழைத்து வந்திருந்த லீலா.

''ஆமாம். என்ன இதுக்கு?''

''ஒண்ணுமில்லை. நீங்க சொன்னீங்களேன்னு அக்கவுண்ட் ஓபன் பண்ணிக் கொடுத்திட்டேன். ஆனால் இன்ட்ரொடக்ஷன் கார்டில் நீங்க கையெழுத்துப் போடாமல் இருந்துட்டீங்க.....''

''அதுக்கென்ன, இப்ப போட்டு விடுகிறேன்,'' என்று சொன்னவன் கையெழுத்திட்டு அனுப்பினான்.

சட்டென்று ஒரு யோசனை

தோன்றியது.

''பதி! மிஸ்டர் பதி!''

எஸ்.பி.க்காரர் திரும்பி வந்தார். ''என்ன சார்?''

''அந்தக் கார்டைக் கொஞ்சம் இப்படிக் கொடுங்க.''

வாங்கி, லீலாவின் முகவரியைப் பார்த்தான்.

கஸ்தூரியம்மாள் தெருவில், பதினெட்டாம் எண் என்றிருந்தது. மேற்கு மாம்பலம்.

'தாங்க்ஸ்' என்று கூறி அட்டையைத் திருப்பிக் கொடுத்தான்.

சுலோசனா என்று ஒரு சினேகிதி சுபாவுக்கு இருந்திருப்பாளேயானல் அவள் இந்த லீலாவுக்கும் தோழியாகத்தான் இருக்க வேண்டும். சுபாவிடமிருந்து வரவழைக்க முடியாத வார்த்தைகளை இவளிடமிருந்து வரவழைக்கலாம். சுபாவிடமிருந்து அறிந்துகொள்ள முடியாத விவரங்களை இவளிடமிருந்து தெரிந்து கொள்ளலாம்.

இந்தத் திட்டம் தோன்றிய பிறகு எல்லா வேலைகளையும் மளமள வென்று கவனிக்க முடிந்தது. அவனுடைய திடீர் சுறுசுறுப்பைக் கண்டு பக்கத்து மேஜை அக்கவுண்டெண்ட் கூட, ''என்னய்யா, காப்பி குடிச்சீரா? வேறே ஏதாவது சரக்கா? திடீர்னு எக்ஸ்பிரஸ் வேகம்?'' என்று பரிகாசம் செய்தார்.

சாயந்தரம் ஐந்து மணிக்கு அவன் ஸ்கூட்டரில் கிளம்பினன். மாம்பலத்தின் அடைசல் பகுதிகளைத் தாண்டி, அமைதியான கோடியை அடையும் வரையில் அவன் ஒரு விஷயத்தை யோசித்து வைத்துக் கொள்ளவில்லை. இப்போது ஞாபகம் வந்தது. 'எதற்காக அந்தச் சுலோசனாவைப் பற்றிக் கேட்கிறீர்கள்?' என்று லீலா கேட்டால் என்ன சொல்வது? 'அவளைப் பற்றிச் சுபாவிடமே கேட்டிருக்கலாமே?' என்று கேட்டால் என்ன சொல்வது?

என்ன சொல்வது என்று அவன் யோசித்து முடிப்பதற்குள் பதினெட்டாம் எண் வீடே வந்துவிட்டது.

காம்பவுண்ட் வைத்த சின்ன வீடு. வளைந்து படர்ந்திருந்த கிளைகளில் போகன்வில்லாப் பூக்கள் செக்கச் செவே லென்று வழிந்து கொண்டிருந்தன. கிரிக்கெட் விளையாடிக் கொண்டிருந்த சிறுவன், ''லீலா அக்காவா? இருங்க, கூப்பிட

றேன்,'' என்று உள்ளே சென்று லீலாவை அழைத்து வந்தான்.

அவனை உடனே அடையாளம் கண்டு கொண்டவளாக, ''வாங்க வாங்க. உள்ளே வாங்க,'' என்று கூப்பிட்டாள் லீலா. சமையலறையில் ஏதோ வேலையாய் இருந்திருப்பாள் போலிருந்தது. அவனைக் கண்டதும் ஏற்றிச் செருகியிருந்த புடவையை அவிழ்த்து இறக்கி விட்டுக் கொண்டு முழங்கையிலும் முகத்திலும் படிந்திருந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டு மின்சார விசிறியைச் சுழல விட்டாள்.

''இந்தப் பக்கம் ஒரு வேலையாய் வந்தேன். உங்க அட்ரஸ் ஞாபகம் வந்தது. எட்டிப் பார்க்கலாம்னு....''

''தாங்க் யூ..... உட்காருங்க. என்ன சாப்பிடறீங்க?''

வீட்டில் வேறு யாருமில்லாததை அவன் கவனித்தான். ''உங்க பேரண்ட்ஸ்....''

''ராம சமாஜத்திலே ஏதோ கச்சேரின்னு போயிருக்காங்க அம்மாவும் அப்பாவும். தம்பியைத்தான் பார்த்தீங்களே! இருபத்து நாலு மணி நேரமும் அவனுக்குக் கிரிக்கெட்தான்.''

அவள் அவனுக்காகக் குளிர்ந்த பானம் கொண்டு வந்து கொடுத்த சில நிமிடங்களுக்குள் அவன் ஒரு முடிவுக்கு வந்துவிட்டான்.

கண்டபடி பொய் சொல்லி இவளைக் குழப்புவதைக் காட்டிலும் உண்மையைச் சொல்லி இவளுடைய ஆதரவைப் பெறுவதே மேல்.

''மிஸ் லீலா. உங்களிடம் ஒரு உதவிக்காக வந்தேன்,'' என்றான் லெமனை உறிஞ்சியபடியே.

''சொல்லுங்கள். கட்டாயம் செய்கிறேன்.''

''சுபாவைப் பற்றி.''

அவள் முகத்தில் திகைப்புப் பரவியது. ''என்ன அவளுக்கு? உடம்புக்கு ஒன்றுமில்லையே?''

''உடம்புக்குத்தான்,'' என்றான் அவன் தலையைக் குனிந்து கொண்டு. திகிலுடன் தன்னை நோக்கும் அவளை நேருக்கு நேர் பார்க்காமலே சுருக்கமாகத் தெரிவித்தான்—பௌர்ணமியன்று இரவு சுபா எழுந்து நடப்பதையும் பிள்ளையார் கோவிலின் வாசலில் விழுந்து விழுந்து வணங்கி எழுவதையும்.



## நியாயம் கேட்கிறேன்

நீதிமன்றத்தில் நியாயம் கிடைக்காமல், சட்டத்தைத் தானே கையில் எடுத்துக்கொள்ளும் வரிசையில் மற்றுமொரு படம். இந்தத் தடவை சட்டத்தைச் சுடுபவர் ஓர் இன்ஸ்பெக்டர். ஆனால் கதையில் எந்த வலுவும் இல்லாததால் அத்தனையும் வெத்து வேட்டு.

முதல் முக்கால்வாசி—ஆனந்த் பாபுவின் விசில்கள் வரவழைக்கும் அந்த 'டிஸ்கோ காலாட்டத்தைத் தவிர—நாற்காலியில் உட்கார்ந்திருப்பது அவ்வளவு ஆனந்தமாக இல்லை. முதல் நடனத்தில் சில வியக்கத்தக்க 'பிடி'களைக் காட்டுகிறார். ஆனால் இரண்டாம் முறை ஆடும் டூயட் நடனம் கோணங்கித்தனமாக இருக்கிறது.

புதுமுகம் ஜீவா முகத்தில் இன்னும் நிறைய உணர்ச்சிகளைக் காட்டியிருப்பாரோ என்னவோ. அதற்குச் சந்தர்ப்பம் கொடுக்காமலே குளோஸ் பண்ணிவிட்டார்கள்.

படத்துக்குத் துளி கௌரவம் கொடுப்பது வில்லன் செந்தாமரையின் பண்பட்ட நடிப்பு. மமதைச் சிரிப்பினூடே ஓசை ஒரு வித்தியாசம்.

கதாநாயகன்தான் நியாயம் கேட்கப் போகிறான் என்று நினைத்தால், இடைவேளைக்குப் பிறகு இன்ஸ்பெக்டர் கதாநாயகனாகி விடுகிறார். அவர் சவால் எடுத்துக் கொண்ட பிறகு சிறிது தேவலாம். (வசனமும் உச்சரிப்பும் ரொம்பப் பழங்காலப் பாணி). அவருடைய துப்பறியும் வித்தைகள் அத்தனையும் தலையைச் சுற்றி மூக்கைத் தொடும் ரகம்.

புதுமுகங்களை அறிமுகம் செய்வது வரவேற்க வேண்டிய விஷயம்தான். ஆனால் அதுவே நடிகர்களும் புதுசு, டைரக்டர்களும் அப்படியே என்னும் போது வரவேற்க முடியாத விஷயமாகிவிடுகிறது.

''மை காட்!'' என்ற லீலா சிறிது நேரம் பேசாமலிருந்தாள். பின்னர், ''டாக்டரிடம் காட்டி வைத்தியம் செய்ய வேண்டாமா? செய்வதற்கென்ன?'' என்றாள்.

''நானும் அதைத்தான் சொன்னேன். அவள் அப்பா அதற்குச் சம்மதிக்க வில்லை. சுபா தூக்கத்தில் நடப்பதோடு இல்லாமல், பிள்ளையார் கோவிலுக்கு ஏன் போகிறாள்? களைத்துக் கீழே விழும் அளவுக்கு ஏன் நமஸ்காரம் செய்கிறாள்? ஆகவே வேறு ஏதோவொரு கோளாறு இருக்க வேண்டுமென்று அவர் நினைக்கிறார். அது சுபாவுக்கே இதுவரை தெரியாதபோது நாமாகச் சொல்லி அவளைக் குழப்பத்தில் ஆழ்த்த வேண்டாமென்கிறார்.''

அவன் சாப்பிட்டு முடித்த கண்ணாடி டம்ளரைக் கையிலெடுத்த லீலா, அதன் பூச் சித்திரங்களைப் பார்த்தபடி மௌனமாயிருந்தாள். ''சரி, இந்த விஷயத்தில் நான் என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?''

''அவளுடைய டைரியில் ஏதாவது விஷயம் தெரியக்கூடுமென்று அவளுக்குத் தெரியாமல் எடுத்துப் பார்த்தேன். அதில் இரண்டு பக்கம் நிறைய, சுலோசனா சுலோசனா என்று எழுதி வைத்திருக்கிறாள். உங்களைப் போல அவளும் சுபாவுக்கு ஒரு தோழி என்று தோன்றியது. அதைத்தான் உங்களிடம் கேட்கலாம் என்று வந்தேன்.....''

''சுலோசனா?'' லீலாவின் குரலில் வருத்தம் தெரிந்தது. ''சுபாவுக்குத்தான் அவள் ரொம்பச் சினேகிதம். எனக்கு. சுலோசனாவும் சரி, சுபாவும் சரி. ஒரு வருஷம் சீனியர். பரீட்சை சமயத்தில் சுலோசனாவின் வீட்டுக்குப் போய் அவளுடன் சேர்ந்து பாடம் படிப்பாள் சுபா. சில சமயம் அவளுடைய வீட்டிலேயே கூடத் தங்கிவிடுவதுண்டு.....''

அவள் ஏன் வருத்தமாகவே பேசுகிறாள் என்று அவனுக்கு மர்மமாக இருந்தது. ''டயரியில், இந்த இரண்டு பக்கங்களில், வெறுமே சுலோசனா சுலோசனான்னு மட்டும்தான் எழுதியிருக்கிறாள். வேறே எதுவும் எழுதக் காணோம்.''

''நேச்சுரலி,'' என்றாள் லீலா. ''தேதியைக் கவனித்தால் தெரிந்திருக்கும். அவள் இறந்துபோன தினமும் அதற்கு மறு தினமுமாக இருந்திருக்கும்.''

''என்ன?'' மனோஜ் திடுக்கிட்டான். ''அந்தச் சுலோசனா... இப்போது...''




- சமுதாய சீர்திருத்தச் சிற்பி பாரதி (ஆர். துரை மலையமான் —பக். 96 —ரூ. 6. —முத்துப் [illegible] பகம், 269, கிழக்குப் பாண்டி ரோடு, விழுப்புரம்) பாரதி பாடல்களிலிருந்தும், கட்டுரைகளிலிருந்தும் மேற்கோள் மூலம் பாரதி எப்படிப்பட்ட சீர்திருத்தவாதி என்பது காட்டப்படுகிறது.
- அந்நியன் (இந்திரன் —பக். 60 —ரூ. 4 —அன்னம் பிரைவேட் லிமிடெட், சிவகங்கை 623 560) வித்தியாசமான புதுக் கவிதைகள். 'சொற்கள்' அருமை.
- காந்தி—ஜோஷி கடிதப் போக்குவரத்து (இரண்டாம் பதிப்பு—மொழி பெயர்ப்பு: பி. ராமமூர்த்தி —பக். 126 —ரூ. 3.50. நியூ செஞ்சுரி.) உலகப் போர் நடந்த காலத்தில், இந்திய கம்யூனிஸ்டுக் கட்சியின் நடத்தை பற்றிக் காந்தியடிகள் எழுப்பிய கேள்விகளும், அப்போது செயலாளராக இருந்த ஜோஷி அளித்த பதில்களும்.
- பாரதியின் சொல்லாட்சி (பாரதிப்பித்தன் —பக். 96 —ரூ. 5 —இரண்டு புத்தகங்களும்: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 41—பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை 600 098.) பாரதியார் முத்திரை பதிந்த சில சொற்களின் பொருளையும் சுவையையும் விளக்குவது.
- பழரசம், ஜாம், ஊறுகாய்கள் செய்முறை (விசாலாட்சி —பக். 64 —ரூ. 3.60 —திருமகள் நிலையம், 13, எர்ரபாலு தெரு, சென்னை 600 001.) அறுபத்தைந்து வகைகளுக்கான செய்முறை விளக்கம்.
- வள்ளல் சீதக்காதியின் வாழ்வும் காலமும் (கேப்டன் என்.ஏ. அமீர் அலி —பக். 206 —ரூ. 10. இஸ்லாமிய ஆய்வு பண்பாட்டு நிலையம், சீதக்காதி டிரஸ்ட், 'சீதக்காதி சேம்பர்ஸ்,' 688, அண்ணா சாலை, சென்னை 600 006.) சீதக்காதியின் வரலாறு; அவர் புகழ் பாடும் பாடல்களுடன்.
- என் நினைவுகளில் பாவேந்தர் (த. கோவேந்தன் —பக். 118 —ரூ. 10 —பூக்கூடை பதிப்பகம், த.பெ. 501, பூங்கா நகர், சென்னை 600 003.) பாரதிதாசனுடன் பதினெட்டு ஆண்டுகள் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தவர் பல சம்பவங்களை விவரிக்கிறார்.
- ஸ்ரீமத் பாகவத புராணம் (எம். நாராயண வேலுப் பிள்ளை —பக். 184 —ரூ. 11.50 —குமரன் பதிப்பகம், முத்துகிருஷ்ணன் தெரு, தி.நகர், சென்னை 600 017.) மச்சம் முதல் கல்கி வரை பத்து அவதாரங்களின் கதை—சுருக்கமாக.
- காண்டேகர் மணிமொழிகள் (ஐந்தாம் அச்சு —தொகுப்பு: அன்புப் பழம் நீ —பக். 64 —ரூ. 3. —பாரி நிலையம், 184, பிராட்வே, சென்னை 600 001.) காண்டேகரின் நூல்களிலிருந்து திரட்டப்பட்ட கருத்துக்கள்.
- தெய்வ கானம் (மெய்வழி தவக்குடி அனந்தர் —பக். 56 —ரூ. 3.50 —செல்வன் பதிப்பகம், தென்னம்பட்டு அஞ்சல், (வழி) சக்கரமல்லூர், வ.ஆ.மா—632 511) மெய்வழிச் சாலை ஆண்டவரைப் போற்றும் பாடல்கள்.
- பாப்பா பாப்பா ஓடிவா (திருச்சி வாசுதேவன் —பக். 32 —ரூ. 3 —திருமகள் நூலகம், 115, இராயப்ப செட்டி தெரு, பூங்கா நகர்,



சென்னை 600 003.) குழந்தைகளுக்கான எளிய பாடல்கள்.

- அமெரிக்க ஐக்கிய நாட்டு வரலாறு (டாக்டர் ஏ. சுவாமிநாதன் —பக். 174 —ரூ. 12 — தீபா பதிப்பகம், 45, லாசரஸ் சர்ச் ரோடு, சாந்தோம், சென்னை 600 028) அமெரிக்க சரித்திரம்—1913 முதல் 1982 வரை. 24'ம் பக்கத்தில் பிரசுரிக்கப்பட்டுள்ள படம் வில்சனுடையதுதானா?
- சுவையான சமையல் (அருணா முகர்ஜி — பக். 120 —ரூ. 8.) சிற்றுண்டி வகைகள் தயாரிப்புப் பற்றியது.
- மருந்து இல்லாத மருத்துவம் (முத்து விஜய பாஸ்கர் —பக். 136 —ரூ. 8 —இரண்டு புத்தகங்களும்: அநுராகம், 54, பாண்டி பஜார், சென்னை 600 017.) உணவு மூலமாகவே வியாதிகளைக் குணப்படுத்திக் கொள்ள வழிகள்.
- [illegible]லா முற்றம் (வேலூர் ம. நாராயணன் — [illegible] —ரூ. 8. —நிறைவாணன் பதிப்பகம், தமிழ்ச் [illegible], 57, சர்க்கார் மண்டி வீதி, வேலூர், வட [illegible]) கவிதைத் தொகுப்பு.

## 1984 ஜூலை வெளியீடு

### பகத்சிங்

(அறந்தை நாராயணன் —பக். 84 —ரூ. 5.50. —விவேக பாரதி 19/14 பீட்டர்ஸ் ரோடு காலனி, சென்னை 600 014.)

சுதந்திரப் போராட்டத்தில் மகத்தான உயிர்த் தியாகம் செய்த வீரன் பகத் சிங். வழி வன்முறையாக இருந்தாலும், நோக்கம் புனிதமானது. பகத் சிங்கிற்குப் பொதுவுடைமைத் தத்துவத்திடம் இருந்த ஈடுபாட்டுக்கு அழுத்தம் கொடுத்து அவர் சரித்திரத்தைச் சுருக்கமாகத் தரும் நூல்.



மெர்வின்

### நடிகர் நடிகைகளின் வாழ்க்கை ரகசியங்கள்

(மெர்வின் —பக். 84 —ரூ. 5 —பூங்காற்று பதிப்பகம், 4, சபாபதி தெரு, குரோம்பேட்டை, சென்னை 600 044.)

வாழ்க்கையில் முன்னேறுவது எப்படி என்று வழி காட்டும் நூல்களை எழுதி வந்தவர், இன்றைய சினிமா நடிக, நடிகையரின் வாழ்க்கையிலிருந்து சில சம்பவங்களைத் தந்து, சினிமாவைச் சாடுகிறார்.

''மூளை ஜுரத்தில் திடீரென்று இறந்து போய்விட்டாள்.''

''ரியலி?''

''ஆமாம். ஸ்டுடண்ட்ஸ் யூனியன் பிரஸிடெண்டாக இருந்தவள் அவள். அதனால் அவள் இறந்ததற்காக ஒரு நாள் காலேஜ் லீவு விட்டதுகூட எனக்கு ஞாபகம் இருக்கிறது.''

அவனுடைய நம்பிக்கைகள் இறந்தன. சுலோசனாவைப்பற்றிய தகவல்களைச் சுலபமாகத் திரட்டலாமென்று ஆர்வத்துடன் வந்தவன் இப்படியொரு முட்டுச் சந்தில் வழி தெரியாமல் நின்றுவிடுவோமென்று எதிர்பார்க்கவில்லை.

''சுலோசனாவின் குடும்பம்?.....''

''அவள் அப்பாவும் அம்மாவும் எங்கேயோ கிராமத்தோடு போய் விட்டார்கள். அது மட்டும்தான் எனக்குத் தெரியும்.''

அவன் புறப்பட்டான்.

அவனுக்குச் சப்பென்று ஆகி விட்டது.

சுபாவின் கோளாறுக்கும் சுலோசனாவுக்கும் எந்தச் சம்பந்தமும் இருப்பதாகத் தெரியவில்லையே? ஒரு தோழி இருந்தாள். இறந்து விட்டாள். துயரம் தாங்காமல் இரண்டு நாள் சுலோசனா சுலோசனா என்று டயரியில் கிறுக்கி வருத்தப்பட்டிருக்கிறாள் சுபா. அவ்வளவுதானா?

''மனோஜ்!''

வழி மறிக்கிற மாதிரி அவன் எதிரே தன் ஸ்கூட்டரை நிறுத்தினார் மானேஜர். ''பாங்க்கிலேயே சொல்லணும் என்று நினைத்தேன். அதற்குள் நீ புறப்பட்டு விட்டாய்.''

''என்ன சார்?''

''அந்தப் பழனிமுத்து உன்னை ரொம்பக் கறுவிட்டுப் போயிருக்கிறான். எதற்கும் துணிஞ்ச ஆள். நீ ஜாக்கிரதையாய் இரு.''

மனோஜ் அலட்சியமாகச் சிரித்து, ''என்ன சார் பெரிய ஆள்? தலையையா சீவி விடுவான்?'' என்றான்.

மானேஜரின் பயம் சரியானதுதான் என்று அவனுக்கு அப்போது தெரியவில்லை.

(தொடரும்)

இது ஒரு விளம்பரம்:

# 3

[பார்வதி நீண்ட கடிதத்தை வைத்துக்கொண்டு பதட்டத்துடன் இருக்கிறாள்.]

மாலதி: என்னம்மா கடிதம்?

பஞ்சு: ஏண்டா வைத்தி, ஏதாவது மொட்டைக் கடிதமாயிருக்குமா?

வைத்தி: பார்த்தால் கிராப் கடுதாசி மாதிரி கூட இருக்கிறது. அதுவும் மடிச்சுக் கிடிச்சு இருக்கிறதைப் பார்த்தால் ஸ்டெப் கட்டிங் கடிதம்னுகூடச் சொல்லலாம்.

(பார்வதி விவரிக்கிறாள்—தான் கோவிலுக்குச் சென்ற போது அங்கு சந்திக்க நேர்ந்த அசோக்கின் தாயைப் பற்றியும், அவள் காட்டிய அசோக்கின் புகைப் படத்தையும், கேட்ட சீர் வரிசை லிஸ்ட்டையும் பற்றி.)

வீணு (அந்தக் கடிதத்தை—அதாவது லிஸ்ட்டை—வாங்கிப் பார்த்து): பயங்கரம்! ஏதாவது டிபார்ட்மெண்டல் ஸ்டோர்ஸ் ஆரம்பிக்கப் போறாங்களா என்ன? இவ்வளவு சாமான்கள் கேட்டிருக்கிறார்கள்.

பஞ்சு: எவ்வளவாயிருந்தால் என்ன, ஜமாய்ச்சுடலாம். வருகிற ஞாயிற்றுக் கிழமை கிண்டியிலே ஒரு நாலு கால் ஃப்ரண்ட் வேணும்கிற பணம் பாட் பாட்டாகத் தருவார்.

பார்வதி (வருத்தத்துடன்): உங்க பாட்டை ஆரம்பிச்சுட்டீங்க இல்லையா! இதுவரை நீங்கள் கிண்டிக்குப் போய்த் தொலைச்ச பணம் இருந்தால் இப்ப நாம் கவலைப்பட வேண்டியதேயில்லை. (மாலதியைப் பார்த்தவாறு கண் கலங்கி) குழந்தை எதிரில் இனிமேல் இதைப் பற்றிப் பேச வேண்டாம்.

வீணு: நாம் பேச வேண்டாம். மிஸ்டர் அசோக் பேசலாமே! என்ன மிஸ்டர் அசோக்?

அசோக்: நான் பேசுவதற்கு என்ன இருக்கு? அப்பா, அம்மா நாளைக்கு வந்து பேசுவார்கள். நான் புறப்படுகிறேன். (விருட்டென்று புறப்படுகிறான். மாலதி திகைத்து நிற்க கார் புறப்படும் சத்தம் கேட்கிறது. சமையல்கார வைத்தி வேகமாக உள்ளே வருகிறான்.)

வைத்தி: சே! இந்த அசோக் இப்படிப் பண்ணி விட்டாரே. எனக்கு நம்பிக்கையே போச்சு.

மாலதி (வருத்தத்துடன்): அசோக் பின்னடியே போனீர்களே, அவர் ஏதாவது சொன்னாரா? நீங்கள் ஏதாவது கேட்டீர்களா?

வைத்தி: கேட்கத்தானே போனேன்?

பார்வதி: என்ன ஆச்சு?

வைத்தி: ஆகிறதென்ன? டிக்கியில் வைத்திருந்த என் முறுக்கு டப்பாவும் சுண்டல் பாத்திரமும் காரோடு போச்சு! நாளைக்கு அவர் வந்தால் முதல் காரியமாகச் சுண்டல் காசை வசூல் பண்ணனும்.




பார்வதி: குழந்தையோட கல்யாண விஷயம் உங்களுக்கெல்லாம் கேலிக் கூத்தாயிருக்கு. சே! பொறுப்பற்ற ஜென்மங்கள்.

வீணு: ஆன்ட்டி, நீங்கள் கவலைப்படாதீர்கள். எனக்கு என்னவோ இந்தக் கல்யாணம் நடக்கும்னு நம்பிக்கை இருக்கு. நாளைக்கு மாலதி ஆபீசுக்கு லீவு போட்டுட்டு வீட்டிலேயே இருக்கட்டும். நானும் மத்தியானம் வந்துவிடுகிறேன்.


"எனது ஆறு வயதுச்
செல்வி பரத
நாட்டியம் நன்கு
ஆடுகிறாள்.
நாளைய உலகமே
அவளது மேடையாம்."
Bournvita
போர்ன்விடாவின் இனிமைக் காலம்
போர்ன்விடா அளித்தவரை பாச மனங்கள்
நேசத்தோடு நினைத்து மகிழும் ஒருநாள்!
வளரும் குழந்தைகள் வேறு எந்த மால்ட்டட் பானங்களையும்விட போர்ன்விடாவை விரும்பு வதேன்? போர்ன்விடா அருந்தி வளர்ந்த இரு தலைமுறையினர் தங்களுடைய குழந்தைகளுக்கு போர்ன்விடா தவிர வேறு எதுவும் உகந்ததல்ல என்று வலியுறுத்திக் கூறுவதேன்?
அதில்...உற்சாகம் துள்ளும் சுவை மட்டுமல்ல. காட்பரிஸின் பிரபல பெயர் மட்டுமல்ல. அவற்றைவிட அதிகமோ அதிகம். அதுதான் போர்ன்விடா! அதோடு வளருங்கள்.
காட்பரிஸ்
போர்ன்விடா
நல்ல வளர்ச்சி,
போர்ன்விடா பயிற்சி.
1 கிலோ பேக்கிலும் கிடைக்கிறது. அதன் உள்ளே, ஒரு இலவசக் குவளை.
Bournvita
Bournvita
SAVE Rs.1.50
The Tastier Food Drink
OBM/3783 TAM

6

# என்னைத் தவிர

சனிக்கிழமையாதலால் அரை நாளோடு பாங்க் முடிந்திருந்தது. மனோஜ் வீட்டுக்குக் கிளம்பத் தயாரானான்.

சிகரெட் பாக்கெட்டைப் பிரித்து வைத்துக் கொண்டு ஒவ்வொரு மேஜையாக நீட்டிக் கொண்டே கிளார்க் பட்டாபி வருவது தெரிந்தது.

''ஏண்டா பாவி, ஏற்கெனவே மூணு குழந்தை இருக்கு. மூணும் பெண் வேறே. இப்ப நாலாவது குழந்தைக்கு ஸெலிப்ரேட் பண்றியே, அடுக்குமாடா தேசத் துரோகி!'' சாமுவேல் திட்டினார்.

''ஐயையோ, குழந்தை இல்லே சார். ஸி.ஏ.ஐ.ஐ.பி. எல்லாப் பார்ட்டும் பாஸ் பண்ணிவிட்டேன். அதைக் கொண்டாடுகிறேன்!''

''ஸெலிப்ரேட் பண்ணுகிற லட்சணமா இது! சாக்லேட் கொடுத்தாலும் வீட்டிலே இருக்கிற குழந்தைகளுக்குக் கொஞ்சம் அள்ளி எடுத்திட்டுப் போவேன். இது என்னடா கருமித்தனம்!'' என்றார் வரததேசிகன்.

''தாத்தா! இதுவா கருமித்தனம்!'' என்றான் பட்டாபி. ''ஒரு சிகரெட் எழுபது பைசா இது. ஒண்ணு பத்த வைச்சுப் பாருங்க. பிரமாதமாய் இருக்கும். சாக்லேட் வாங்கியிருந்தால் பத்துப் பைசாவோடு போயிருக்கும். இப்பல்லாம் இதுதான் ஃபாஷன்னு சொல்லி என் தலையிலே செலவு கட்டிட்டாங்க!''

வரததேசிகன், ''ஏம்பா பேரா, இதுதான் ஃபாஷன்னு சொல்றியே! அதோ அங்கே நாலு லேடீஸ் இருக்காங்களே, அவங்களுக்கும் இதுதான் கொடுப்பியா?'' என்றார்.

''இல்லே, இல்லே. அவங்களுக்கு ஸ்பெஷல் திருச்சினாப்பள்ளி சுருட்டு!'' என்று யாரோ சொல்ல, எல்லோரும் சிரிக்க, வெட்கத்துடன் வீட்டுக்குப் புறப்பட்ட பெண்களை வழிமறித்து, ஆளுக்கொரு சாக்லேட் கட்டி வழங்கினான் பட்டாபி.

மனோஜ் அவன் கையைக் குலுக்கி, ''வாழ்த்துக்கள்,'' என்றான். பல நாட்களுக்குப் பிறகு இன்றுதான் மனம் விட்டுச் சிரித்துக் கலகலப்பாக இருக்கிறோம் என்று அவனுக்குத் தோன்றியது.

''சார், கிளம்பாதீங்க. என் வீட்டிலே ஒரு சின்னப் பார்ட்டி இருக்கிறது,'' என்று அழைத்தான் பட்டாபி.

வேறொரு ஆளாக இருந்தால் மனோஜ் போக ஒப்புக்கொண்டிருக்க மாட்டான். இந்தப் பட்டாபியின் விஷயம் வேறே.. வேலையில் எவ்வளவுக்கெவ்வளவு கெட்டிக்காரனோ அவ்வளவுக்கவ்வளவு சினேகிதத்துக்குச் சிறந்தவன். எவ்வளவோ நாள், தான் காப்பி சாப்பிட்டுவிட்டு, மனோஜின் மேஜை மீதும் ஒரு கப் காப்பி கொண்டு வந்து வைத்து, 'சாப்பிடுங்கள் சார்' என்று உபசாரம் செய்திருக்கிறான். மனோஜுக்கு வேலைப் பளு அதிகமாகும் சமயத்தில், அலுவலக நேரம் தாண்டிய பின்னும், தங்கியிருந்து உதவிகள் செய்திருக்கிறான். ஆகவே அவன் அழைத்ததும் 'ஓ எஸ்' என்று ஒப்புக் கொண்டான்.

பட்டாபிக்குப் பாங்க்கில் குவார்ட்டர்ஸ் கொடுத்திருந்தார்கள். நவீன வசதிகள் நிறைந்த ஃப்ளாட். அவனும் அவன் மனைவியும் குழந்தைகளும் வீட்டைக் கண்ணாடி மாதிரி வைத்திருந்தார்கள்.

கிருஷ்ணகுமார்




அஷ்டகோணல் என்றால் எட்டு கோணல். அனுராதா ஒரு சரியான அஷ்டகோணல்.

சிற்றுண்டி சாப்பிட்டு முடித்ததும், ''ஒரு சின்ன என்டர்டெயின்மெண்ட்,'' என்று கூறி நண்பர்களை இருக்க வைத்தான் பட்டாபி.

வேறொன்றுமில்லை. வீடியோவில் ஒரு படம். பழசு. தர்மேந்திரா—ஹேமமாலினி நடித்த இந்திப் படம்.

எல்லோரும் அதை ரசித்துக் கொண்டிருக்கையில் மனோஜின் மனம் சடகோபனின் குடும்பத்துக்குத் தாவிற்று.

அங்கே சடகோபனுக்கும் கோமளத்துக்கும் விளையாட்டுப் பேச்சு என்றாலே என்னவென்று தெரியாது. தமாஷுக்கு, சுபா ஒருத்திதான். அப்போதும் கூடத் தன் நோயை அறியாமல் அவள் சிரித்துக் கொண்டிருக்கிறாள் என்பதை எண்ணுகையில் அவனால் அவளுடைய மகிழ்ச்சிகளில் பங்கு கொள்ள முடியாமல் போய்விடுவதுண்டு.

வந்த புதிதில் ஒரு நாள் தங்கள் நாலு பேருக்குமாகச் சினிமாவுக்கு ரிசர்வேஷன் செய்திருந்தான் மனோஜ். சடகோபன் கடைசி நிமிடத்தில் வர முடியவில்லை என்று போன் செய்துவிட்டார். 'நீங்கள் மூன்று பேரும் போய்விட்டு வாருங்கள்' என்று அவர் சொன்னாலும் கூட, கோமளத்துக்கு அது என்னவோ போலிருந்தது. நாலு பேர் நாலு விதமாகப் பேசப் போகிறார்கள் என்று மனத்துக்குள் உணர்ந்தவளாக, 'எனக்கு ஒரே தலைவலி' என்று சொல்லிவிட்டாள்.

மனோஜ் ஏமாற்றத்துடன் டிக்கெட்டுகளைக் கிழித்துப் போட்டுவிட்டு மாடிக்குப் போய்விட்டான்.

இப்போது வீடியோவில் படம் பார்த்துக் கொண்டிருந்தபோது ஒரு யோசனை தோன்றியது.

சடகோபனின் குடும்பத்துக்கு நாமாவது கலகலப்பும் குதூகலமும் ஏற்படுத்தினால் என்ன?

பட்டாபிக்குத் தாராள மனம். கேட்டால் தருவான்....

டாக்ஸியிலிருந்து டி.வி.யையும் டெக்கையும் இறக்கி அவன் வீட்டுக்குள் நுழைந்தபோது, ''என்னப்பா இதெல்லாம்?'' என்றார் சடகோபன். உள்ளே வேலையாயிருந்த கோமளமும் ஆவலுடன் வந்து பார்த்தாள்.

ஹாலில் டி.வி.யை வைத்தான். ''வீடியோ மாமா. ஒரு சிநேகிதனிடமிருந்து இரவல் வாங்கி வந்திருக்கிறேனாக்கும்!''

சுபா பரிகாசமாகச் சிரித்தாள். ''நீ ஸ்ரீரங்கம் பட்டிக்காடு. இதெல்லாம் புதுசாயிருக்கு. மெட்ராசில் வீட்டுக்கு வீடு கலர் டி.வி.தான், வீட்டுக்கு வீடு வீடியோதான்!''

''சுபா! எதையும் தூக்கி எறிகிற மாதிரி பேசாதே. அவன் எத்தனை ஆசையாய் வாங்கிட்டு வந்திருக்கான், பாவம்,'' என்று மகளைக் கண்டித்த கோமளம், ''இவர் கூட வாங்கணும்னு தான் சொல்லிட்டிருக்கார். இவள் படிப்புக் கெட்டுப் போயிடும்னு வாங்கலை. இனிமேல் வாங்கலாம்.






## சேவாஷ்ரம்

## ஆயுர்வேதிக் படைப்புகள்.

**இயற்கை தரும் அதி உன்னதப் பொருட்களால் தயாரிக்கப்படும்**

### ப்ரம்மி அம்லா ஹேர் ஆயில்

உங்கள் கேசத்திற்குத் தேவையான போஷாக்கைத் தரவல்ல ப்ரம்மி மற்றும் நெல்லிக்காய் சத்துக்கள் செறிந்தது. மயிர்க் கால்களை வலுப்படுத்துவதோடு. கூந்தல் வளர்ச்சியும் தருகிறது இது.

### கறுப்பு பற்போடி

சீரிய பற்களுக்கு சிறந்த ஆயுர்வேதிக் வழி. மாஜு:பல், கிராம்புத் தைலம், கற்பூரம், நீலகிரித் தைலம், புதினு மற்றும் படிக்காரம் ஆகியவற்ருல் தயாரிக்கப்பட்டது. இதனை முறையாக உபயோகித்து வந்தால் பற்சிதைவைத் தடுக்கலாம். வாய் நாற்றத்தையும் தடுக்கலாம். அதே சமயம் பற்கள் தூய்மையாகவும் பளிச்சிடும் வெண்மையுடனும் விளங்கும்.

**ஆயுர்வேதிக் சேவாஷ்ரம் லிமிடெட்**

உதய்ப்பூர் • வாரணுசி • ஹைதராபாத்

ரெஜிஸ்டர்டு ஆபீஸ்: பஜாஜ் பவன்.
226, நரிமன் பாயின்ட், பம்பாய்-400 021.

பொழுது போகும். என்ன படம் கொண்டு வந்திருக்கேப்பா?''

''என்னென்ன படம்?'' என்றாள் சுபா.

''தமிழில் ஒண்ணு, இந்தியில் ஒண்ணு, இங்கிலீஷில் ஒண்ணு. ஏழு மணிக்கெல்லாம் சாப்பாட்டுக் கடையை முடிச்சிடணும், மாமி. உடனே மனோஜ் தியேட்டர் மகத்தான திறப்பு விழா. ராத்திரி இரண்டு மணி வரையில் மனோஜ் ரிலீஸ் படங்கள்....''

''அடடா! நாங்கள் இருந்து பார்க்க முடியாதே?'' என்றார் சடகோபன்.

''ஏன் மாமா? சினிமா பிடிக்காதா?''

''அதில்லே. ஒரு கல்யாண ரிசப்ஷன். நானும் கோமளமும் போகிறோம். எங்கேயோ ஆலந்தூர் தாண்டி. ராத்திரி பத்து பதினொரு மணி ஆயிடும் நாங்கள் திரும்பறதுக்கு. சுபாவையும் வான்னு சொன்னால் வர மாட்டேன் என்கிறாள்.''

''போங்கப்பா. யாரோ டாம் டிக் அண்ட் ஹாரி வீட்டுக் கல்யாணத்துக்கெல்லாம் போவீங்க. போகாட்டி பிஸினஸ் போச்சுன்னு சொல்லுவீங்க. எனக்கு அங்கே யாரையும் தெரியாது. கொட்டு கொட்டுனு தனியா உட்கார்ந்து கிட்டு, லைட் மியூசிக் என்கிற பெயரில் எவனாவது அறுப்பான். அதையெல்லாம் கேட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கணும். அதுதான் நான் வர்றதில்லே.''

கோமளம் மெதுவாக, ''நான் வேண்டுமானால் தங்கிக்கிறேன்,'' என்றாள்.

''ஸாரி மாமா..... என்னால் ஒரு அனுவசிய பிராப்ளம்.''

''சேசே! நீ வரலேன்னா அவங்க தப்பா நினைச்சுப்பாங்க.''

''ஸாரி மாமா.... என்னால் அனுவசிய பிராப்ளம்...''

''அப்படியெல்லாம் இல்லே. நீங்க இரண்டு பேரும் பாருங்க,'' என்று சொல்லிவிட்டு, 'ஜாக்கிரதை' என்று எச்சரிப்பதுபோல் அவனை ஒரு பார்வை பார்த்தார் சடகோபன். 'ஜாக்கிரதையாயிருப்பேன்' என்று பார்வையாலேயே மனோஜும் உறுதி தந்தான்.

அவர்கள் டிரெஸ் செய்து கொள்ளச் சென்றதும், ''நீயும் நானும் மட்டும்தான் வீடியோ பார்க்கப் போகிறோமா? ஆயிரம் கும்பிடு. உன் அறுவை தாங்காது. நான் அடுத்த வீட்டில் போய் உட்கார்ந்துக்கப் போகிறேன்,'' என்றாள் சுபா. அவனும், ''இங்கேயும் அதே கேஸ் தான். வீடியோவை எடுத்து வந்த வீட்டிலேயே திருப்பிக் கொண்டு போய்க் கொடுத்து அங்கேயே இருந்து பார்த்து விட்டு வரப் போகிறேன். உன் போரை என்னாலேயும் தாங்கிக்க முடியாது,'' என்றான்.

சடகோபனும் கோமளமும் புறப்பட்டுச் சென்று ஐந்து நிமிடம் வரை ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்.

''ஏன்? எங்கேயோ அடுத்த வீட்டுக்குப் போகப் போறதா சொன்னியே, போறதுதானே?'' என்றான் மனோஜ்.

''ஏன்? எங்கேயோ சிநேகிதன் வீட்டுக்குப் போகப் போவதாய் நீ சொன்னாயே? போவதுதானே?'' என்றாள் அவள்.

சொல்லி வைத்த மாதிரி இருவருக்கும் ஒரே நொடியில் சிரிப்பு வந்து விட்டது.

டைனிங் மேஜையில் எதிரெதிராக அமர்ந்து, ஒருவருக்கொருவர் எடுத்துப் போட்டுக் கொண்டார்கள். பாத்திரங்களை நகர்த்தும் போது அவள் கை வளையல்கள் உராய்கின்ற ஓசை; ஐஸ் வாட்டர் புட்டியை அவள் தொட்டு இவன் தொடுகையில் அந்த இடத்துக்கு மட்டும்

சோதிடர்: "உங்களுக்கு இன்னும் பதினைந்து நாளிலே கல்யாணம் நடந்திடும்!"
அவன்: "அப்படி நடக்கா விட்டால்?"



சோதிடர் என்ன பதில் சொன்னார்?

அடுத்த பக்கம் பார்க்க...

மின்னல் நேரத்துக்குத் தெரியும் கதகதப்பு; விசிறியின் விஷமத்தினால் முன்னுச்சிக் கூந்தல் கண்மீது விழுகிற போது அவள் தன் இடது கையினால் அதை ஒதுக்கிக் கொள்ளும் லாகவம்; 'ரசம் பிரமாதம்!' என்று கப்பை உறிஞ்சிவிட்டு நாற்காலியில் நீண்டு சாயும் போது அவன் கால் அவள் காலைத் தொட, 'அபசாரம்! அபசாரம்!' என்று அவனைத் தொட்டு அவள் கண்களில் ஒற்றிக்கொள்ளும் வேடிக்கை—

கண்ணுக்குத் தெரியாத ஊதுவத்தி மணமாக இதயத்தின் இடுக்குகளுக்குள் நுழைந்து பரவும் இந்தப் பரவசம் மேலும் மேலும் நீடிக்காதா, நீடித்துக் கொண்டே இராதா என்று மனோஜின் மனம் ஏங்கிய போதிலும் சடகோபனின் எச்சரிக்கை அவனை உஷாராகவே இருக்கச் செய்தது.

ஹாலுக்கு வந்தார்கள். வீடியோ கருவிகளைப் பொருத்திவிட்டுக் காஸெட்டுகளை எடுத்தான். "எது போடட்டும் சுபா? இந்தியா, தமிழா, இங்கிலீஷா?"

"இங்கிலீஷ் போடு," என்று சொல்லிவிட்டு இருவருக்கும் நாற்காலிகளை இழுத்துப் போட்டாள் அவள்.

பெரிய விளக்கை அணைத்துவிட்டு, சிறிய விடிவிளக்கை மட்டும் போட்டுக் கொண்டு படம் பார்க்க ஆரம்பித்தார்கள்.

முதலில் ஒரு குழந்தையையும் அதன் தாயையும் பற்றிய சாதாரணப் படம் போல ஆரம்பித்தது. சிறிது சிறிதாகப் பேய்க் கதையாகத் திரும்பியது.

கதவுகள் மடேர் மடேரென்று மூடித் திறந்தன. மின்னல்கள் சாட்டையடித்தன. கட்டில்கள் ஆடின. தலைகள் சுழன்றன. நாக்குகள் பிதுங்கின. விழிகள் முட்டிக் கொண்டு திணறின. பளீர் பளீரென்று இருட்டும் வெளிச்சமுமாய் வீச, ஹோஹ்ஹோவென்ற அலறல்களும் ஊய் ஊய் என்ற ஊளைகளும் காதைச் செவிடுபடுத்தின. எலும்புக் கூடுகள் பறந்தன. மண்டையோடுகள் மிதந்தன.

'சே! என்ன மடத்தனமாய் இந்தக் காஸெட்டை வாங்கி வந்தோம்!' என்று மனோஜ் தன்னைத் தானே நொந்து கொண்டான்.

"சுபா! உனக்குப் பயமாய் இருந்தால் நிறுத்திவிடுகிறேன். என்ன?"

"பயமென்ன பயம்.... அதெல்லாம் ஒண்ணுமில்லை....." என்று சொன்ன போதிலும் அவள் குரலில் அச்சத்தின் அடையாளம் லேசாகத் தென்படுகிற மாதிரி அவனுக்குத் தோன்றியது.

சரேலென விளக்குகள் அணைந்தன. வீடே இருட்டில் மூழ்கியது.

"அப்படியே உட்கார்ந்திரு, சுபா. நான் மெழுகுவத்தி ஏற்றி எடுத்துக் கொண்டு வரேன்," என்று எழுந்து கொண்டான். "இங்கேயே இரு. எழுந்துக்கப் பார்த்து எதிலாவது இடித்துக் கொண்டு நான் இந்த இருட்டில் பர்னாலையும் தேடற மாதிரி பண்ணிவிடாதே."

அவன் உள்ளே டப்பாக்களைத் திறந்து மூடி, தேடி எடுத்து மெழுகுவத்தியை ஏற்றி எடுத்துக் கொண்டு வந்தான். ஆடி அசையும் அந்தச் சுடரில் அவள் முகம் விசித்திரமான அழகுடன் துலங்குவதைக் கண்டான்.

சுபா மௌனமாகவே உட்கார்ந்திருந்தாள்.

அலமாரியில் ஒரு சொட்டு மெழுகை ஊற்றி அதன்மீது வத்தியை நட்டுவிட்டு வாசல்புறம் சென்று பார்த்துவிட்டுத் திரும்பி வந்தான்.

அவள் அசையாமலே இருந்தாள்.

"தெருப் பூரா அவுட்," என்றான்.

அவள் எதுவும் சொல்லவில்லை. அந்த அரையிருட்டான சூழ்நிலையில் நகங்களைக் கிள்ளியவண்ணம் தலைகுனிந்து கொண்டு பேசாதிருந்தாள்.

"நல்ல வேளை, அந்தப் பயங்கரப் படத்தைப் பார்த்துக் குலை நடுங்க வேண்டியதில்லை. தானாகவே நின்றுவிட்டது," என்றான்.

எந்த மூலையிலிருந்தோ கடுகத்தனை வெளிச்சம் வந்து அறைக்குள் பரவியிருந்தது. அந்த வெளிச்சம் சுபா உட்கார்ந்திருந்த தோரணையை அமானுஷ்யமானதாக எடுத்துக் காட்டியது.

"சுபா....." என்று கூப்பிட்டான்.

---

**சோதிடர் சொன்னது!**

"நேராய் என் கிட்டவாங்க. என் பெண்ணைக் கல்யாணம் பண்ணி வைக்கிறேன்!"

- கபிஸ்தலம் சாயிகுமார்

அவள் கற்சிலை மாதிரி உட்கார்ந்திருந்தாள். ஆழ்ந்த தியானத்தில் அமிழ்ந்து விட்ட யோகியைப் போல ஆடாமல் அசையாமல் இருந்தது அவள் மேனி.

''சுபா....'' என்று மீண்டும் கூப்பிட்டு அவளைத் தொட நினைத்தவன், சட்டென்று கையைப் பின்வாங்கிக் கொண்டான். முன்னொரு நாள் அவளிடம் வாங்கிக் கொண்ட அசுரத்தனமான அடி ஞாபகம் வந்ததே காரணம்.

சுபாவின் உதடு ஏதோ முணுமுணுக்கிற மாதிரி இருந்தது.

''சுலோசனா..... சுலோசனா.... வீட்டில் பாடம்.....''

சுலோசனா! அவனுக்கு ஆர்வம் பிறந்தது. ''என்ன சுபா? யார் அந்தச் சுலோசனா? என்ன நடந்தது?''

அந்தக் கேள்விகளுக்கு அவளிடமிருந்து பதில் வரவில்லை. மறுபடியும் முணுமுணுப்பாக, ''இந்தோரா மஹந்த்....'' என்றாள்.

''இந்தோரா?'' என்று மேலும் அவன் திகைத்தான். மஹந்த் என்றால் பூசாரி இல்லை? குருக்கள்? அதுதானே அர்த்தம்?''

பளீரென்று விளக்குகள் எரிந்தன.

இது நேரம் வரை அவளைப் போர்த்தியிருந்த விறைப்பு திடீரென உதறப்பட்ட மாதிரி அவள் கண்களில் தண்மை தெரிந்தது. பார்வையில் தெளிவு தென்பட்டது. ஆனால் உடம்பு முழுதும் வியர்வையில் குளித்து முழுகியிருந்தது.

''சுபா.... கொஞ்சம் முன்னால் என்னவோ சொன்னாயே, என்ன அதெல்லாம்?'' என்றான் அவன்.

''நீ ஒரு சரியான எருமை மாடு!'' என்று சிரித்தாள் அவள். ''இத்தனை புழுக்கத்திலும் நீ ஒரு குட்டித் தூக்கம் போட்டு, அதற்குள்ளேயே ஒரு குட்டிச் சொப்பனமும் கண்டிருக்கிறாயே!''

அவன் அவளையே பார்த்துவிட்டு டி.வி.யைப் பார்த்தான். அந்தப் பேய்ப் படம் தொடர்ந்து ஓடிக் கொண்டிருந்தது. ''இது வேண்டாம்,'' என்று சொல்லி, அந்தக் காஸெட்டை எடுத்துவிட்டு ஒரு தமிழ்ப் படத்தைப் போட்டான்.

ஆனால் அவனுடைய காரியங்கள் இயல்பாக இருக்கவில்லை. தடுமாற்றமும் குழப்பமும் நிறைந்திருந்தன.

(தொடரும்)



## மண் சோறு

ஒரு பிணத்தைப் புதைப்பதற்காகத் தவிதவியென்று தவிப்பவர்களைப் பற்றிக் கொஞ்ச நாள் முன்பு ஒரு படம் வந்தது. இதுவும் ஏறத்தாழ அதே பாதை தான். கொலை செய்துவிட்டுப் புதைத்துள்ள பிணத்தை யார் எப்போது கண்டு பிடித்துவிடுவார்களோ என்ற திக்திக்கில் பின்பாதி படம் ஓடுகிறது.

பாண்டியனுக்குப் பாசம் வருமா? சோதித்துப் பார்த்திருக்கிறார்கள்—சசிகலாவை அவருக்குத் தங்கையாக்கி. அண்ணனுக்கு எட்டாதது தங்கைக்கு எட்டுகிறது.

புழக்கடையில் புதைக்கப்பட்ட ரவியின் உடம்பு அடிக்கடி மண்ணிலிருந்து மேலே வரப் பார்ப்பதும், சசிகலாவும் பாண்டியனும் அந்தச் சமயங்களில் பதறுவதும் (திருமணம் செய்து கொள்ள விரும்பும் இன்ஸ்பெக்டரே தலைகாட்டினால் அச்சமாக இராதா பின்னே?) சமாளிப்பதும் சுவையானவை. பள்ளத்தை நாய் பறிக்கும் போது எலும்புத் துண்டு; கழுகு வட்டமிட்டதும் கோழிக் குஞ்சுக் கூடை; மழை வெள்ளம் அரிக்கையில் இடிந்து விழும் சுவர்—எல்லாமே வித்தியாசமான கற்பனைகள்.

பாண்டியனைச் சோடா வண்டி இழுக்கும் கூலியாய் வைத்து, சுலக்ஷணாவைப் பெட்டிக் கடைக்காரியாய் அமர்த்தி, சின்ன முறுவல்களை எழுப்பும்

# என்னைத் தவிர

## 7

சுபாவுக்கு என்னதான் நேர்ந்தது? எது அவளைப் பிடித்து ஆட்டுகிறது? தூக்கத்தில் நடக்கிறுள். சுலோசனு என்று கிறுக்குகிறுள். இந்தோர் மகந்த் என்று உளறுகிறுள். கேட்டால் அப்படி எதுவும் சொல்லவில்லையே என்கிறுள்.

இவ்வளவும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ள விஷயங்களா?

என்ன தொடர்பு?

இப்படியெல்லாம் குழம்பிக் கொண்டிருந்த மனேஜுக்கு, மனத்தை வேறு திசையில் திருப்பச் சந்தர்ப்பம் கிடைத்தது.

அன்று காலையில் எழுந்தபோதே, ''மனேஜ், இன்னிக்கு எங்காவது உனக்குப் புரோக்ராமா?'' என்று சடகோபன் கேட்டார்.

சுபா கேலி செய்தாள்: ''ஆமாம்! பெரிய எஸ்.பி.பி. இவர்! மெல்லிசை ப்ரோக்ராம் இருக்கிறது!''

''எதுவும் இல்லை மாமா, என்ன செய்யணும்?'' என்று மனேஜ் கேட்டான்.

''ஒத்தைவாடையில் என் பாக்டரி வரை வந்துவிட்டுப் போயேன்.''

பிளாஸ்டிக் பிஸினஸைத் தவிர, நாலு லேத் வாங்கிப் போட்டு ஒரு பட்டறையும் வைத்திருக்கிறுர் அவர். ஏழெட்டுத் தொழிலாளிகள் வேலை பார்க்கிறுர்கள். வெகு சிறிய சமாசாரம்தான் என்றுலும் அதைப் 'பாக்டரி' என்றே பெருமையாகச் சொல்லிக் கொள்வார்.

''ஃபாக்டரியில் எனக்கென்ன மாமா வேலை?''

''வாயேன் சொல்கிறேன்,'' என்றுர் அவர் புன்னகைத்தபடி ''பத்து மணிக்குப் புறப்படலாம். ரெடியாயிரு.''

அவருடன் ஒற்றைவாடையை அடைந்த போதுதான் அவனுக்குப் புரிந்தது.

திருப்பதிக் குடை ஊர்வலம் அன்று அந்த வழியாகப் போகிறதாம். கடைக்குக் கடை, பட்டறைக்குப் பட்டறை, எங்கே பார்த்தாலும் பந்தல்கள். தோரணங்கள். ஒலிபெருக்கிகள் டி.எம்.எஸ்.ஸையும் சீர்காழியையும் காது கிழியப் பறை சாற்றிக் கொண்டிருந்தன. சின்னச் சின்னப் பந்தல்களில் வெங்கடாசலபதி படங்கள், செவந்தி மாலைகளுடன். குத்துவிளக்கு. ஊதுவத்தி. உண்டிகள். பக்கத்திலேயே அடுப்புகள் மூட்டப்பட்டு, சிறியதும் பெரியதுமான பாத்திரங்களில் சர்க்கரைப் பொங்கல்களும் தயிர் சாதங்களும் தயாராகிக் கொண்டிருந்தன.

சடகோபனின் பட்டறையிலும் மும்முரமாக வேலை நடந்து கொண்டிருந்தது. தொழிலாளர்கள் தோரணம் கட்டுவதில் ஈடுபட்டிருந்தார்கள்.

''இந்தக் கோலாகலத்தை நீ பார்த்திருக்க மாட்டாய் என்றுதான் அழைத்து வந்தேன்,'' என்று சடகோபன் விளக்கினர். ''முடிந்தால் ஒத்தாசை செய். இல்லாவிட்டால் ஒரு ஸ்டூலைப் போட்டுக் கொண்டு வேடிக்கை பார்.''

தொழிலாளர்களின் குதூகலத்தில் கலந்து கொள்வது மனேஜுக்கு ஆனந்தமாய் இருந்தது. சட்டைக் கையைச் சுருட்டி விட்டுக் கொண்டு பந்தலை அலங்கரித்தான். ஒலிபெருக்கி மக்கர் செய்த போது சரி பண்ணிக் கொடுத்தான். பஜனைக் கோஷ்டிகளுக்கு நீர் மோர் வழங்கினன். முண்டி வரும் கூட்டத்தை ஒழுங்குபடுத்தி, க்யூ அமைத்து, சர்க்கரைப் பொங்கலை வினியோகித்தான்.

கிருஷ்ணகுமார்

## ஜோக் பதில்

''நான் அப்போதே சொன்னேன், ஹைதராபாத் நாற்காலி வேண்டாம்னு. கேட்டீங்களா.''

—ஐயாறு. ஆர்.டி. மூர்த்தி.

சடகோபனின் பட்டறைத் தொழிலாளர்கள் தங்கள் வீட்டுப் பெண்களையும் குழந்தைகளையும் அழைத்து வந்திருந்தார்கள். அவர்களுடைய ஆரவாரமும் சேர்ந்து கொண்டது.

புதிதாகக் கல்யாணம் செய்து கொண்டிருந்த வீராசாமி தன் இளம் மனைவியைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தான். பலகாரம் வாங்கித் தருவதும் காப்பி குடிக்கச் சொல்வதும், 'செல்லம்மா..... செல்லம்மா....' என்று நொடிக்கொரு தரம் கூப்பிடுவதும் எல்லோருக்குமே வேடிக்கையாயிருந்தது.

''வீராசாமி! வீட்டுக்குப் போய்க் குலாவுவதற்குக் கொஞ்சம் பாக்கி வைத்திரு,'' என்று சடகோபன் கூடக் கிண்டல் செய்தார்.

இருட்டு நெருங்க நெருங்கக் கோலாகலம் அதிகரித்தது. திரும்பிய திசையெல்லாம் சின்னச் சின்ன வண்ணப் பல்புகளின் தோரணங்கள் ஒளி வீசின.

சடகோபனின் பட்டறைத் தொழிலாளர்களும் மின்சார அலங்காரம் செய்திருந்தார்கள். ''சார், இதைக் கொஞ்சம் அந்தப் பிளக்கிலே மாட்டிக் கனெக்ஷன் கொடுங்க,'' என்று ஒரு பல்பு 'சீரியலை' மனோஜிடம் நீட்டினான் ஒருவன்.

எங்கே ஞாபகமாய், எந்த இடத்தில் கை வைத்தானோ, படீரென்று ஒரு ஷாக் மனோஜின் முழங்கையில் அடித்தது. 'அம்மாடி!' என்று முக்காலியிலிருந்து இடறி விழ, கீழேயிருந்த அண்டா சரிய, அதிலிருந்து நீர் மோரெல்லாம் வழிய—

மனோஜ் அசடு வழிய எழுந்து கொண்டான்.

''அடி கிடி பட்டதா என்ன?'' என்றார் சடகோபன் பதறிப் போய்.

''சே, சே! ஒண்ணுமில்லை,'' என்ற மனோஜ், வீராசாமியின் இளம் மனைவி, கையில் வைத்திருந்த துணிப் பையைப் பதைப்புடன் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டான்.

பை நனைந்து, ஓரங்கள் சொட்டிக் கொண்டிருந்தன. அதற்குள்ளிருந்து நனைந்து போன சில காகிதங்களை எடுத்து எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்தாள் அவள்.

''அடடா! அண்டா கவிழ்ந்ததில் நனைஞ்சிட்டுதாம்மா?'' என்றான் மனோஜ். ''என்ன காகிதம் அதெல்லாம்?''

''அது ஒண்ணுமில்லே சார்....'' என்றான் வீராசாமி.

ஆனால் செல்லம்மா, ''வந்துங்க....'' என்று தயங்கினாள்.

''சொல்லு.''

''சிதம்பரத்திலே எங்க அப்பாவுக்குச் சொந்தமாக ஒரு வீடு இருக்குதுங்க.... அதை என் மாமன் ஒருத்தன் அடாவடியா தன்னுதுங்கிறான்.... இதெல்லாம் வீட்டைப் பத்தின லெட்டருங்க. மெட்ராசிலே வக்கீல் கையிலே காட்டுன்னு எங்கப்பாரு கொடுத்தாரு.... எடுத்திட்டு வந்தேன்....''

''அட ராமா! முக்கியமான பேப்பர்கள் போலிருக்கே?'' என்றார் சடகோபன்.

மனோஜுக்குச் சங்கடமாகி விட்டது. காகிதங்களை வாங்கிப் பார்த்தான். வீடு சம்பந்தமாக எழுதப்பட்ட கடிதங்கள்.... சில பத்திரங்கள்... தண்ணீரில் நனைந்து, எழுத்து அழிந்து.....

''கவலைப்படாதேம்மா. இதையெல்லாம் நான் வேறே பேப்பரில் நல்ல படி நகலெடுத்துத் தரேன்,'' என்றான். ''நானே நாளைக்கு நல்ல வக்கீலாயும் பார்த்துத் தரேன்....''

''பரவாயில்லீங்க.... உங்களுக்கு ஏன் பேஜார்?'' என்றான் வீராசாமி.

''இது ஒண்ணும் பெரிய வேலையில்லை....'' என்று சொல்லி அந்தப் பையையும் காகிதங்களையும் வாங்கிக் கொண்டான் மனோஜ்.

மணி பதினொன்றைத் தொட்டுக் கொண்டிருந்தது.

நாலைந்து கடிதங்களைச் சரி செய்திருந்தான் மனோஜ்.

தூக்கம் கண்ணைச் சுழற்றியது. நாளைக்கு மிச்சத்தை எடுத்துப் போய் வீராசாமியிடம் கொடுத்து, 'என்னாலே இதற்கு மேல் முடியவில்லையப்பா' என்று

RELIABLE HIRE PURCHASE

# Readymoney SHOPPERS' CLUB

## 6.9.84 இதழ் மணியான போட்டியில் வெற்றி பெற்ற அதிர்ஷ்டசாலிகள்

முதல் பரிசு ரூ. 500/-
திரு. V. சுப்ரமணியன்
R-28, பட்டினப்பாக்கம்
சென்னை—600 028.

### இரண்டாம் பரிசு ரூ. 250

திரு. T.S.S. நாகராஜ்
ஹாரீஸ் மஞ்சில்
வடக்கு கல் பாலம்
ஆலப்புழை—688 010.

### மூன்றுவது பரிசு ரூ. 100

திரு. K. மோகன்தாஸ்
64 வடக்கு வீதி
அன்னுன்ஜி போஸ்ட்
பெரியகுளம் தாலுகா
மதுரை மாவட்டம்
P.C. 626 523

### ரூ. 50 பெறும் அதிர்ஷ்டசாலிகள்

1. திரு. ப. ரமேஸ்குமார்
S/o அ. வெ. பழனிச்சாமி
அப்பநாயக்கன்பட்டி Post
சூலூர் வழி
கோவை ஜில்லா.

2. திரு. S. பன்னீர்செல்வம்
110, விக்கிரபாண்டியம்
கொடவாசல் தாலுக்கா
திருவிடைச்சேரி S.O.
P.C. 610 107

3. திரு. V. கணேஷ்
S/o R. வைகுண்டம்
பிளாட் எண்: 1
வால்மீகி தெரு,
அய்யப்பநகர்,
திருச்சி—620 021.

4. Mr. அ. கல்குல் ஜமால்
4/103 பெரிய தெரு
திருமங்கலக்குடி
P.C. 612 102.

5. திரு. R. சிவசுப்ரமண்யன்
16—7—5—தெற்கு வீதி
மேலூர்
செங்கோட்டை
P.C. 627 809.

6. Ms. G. செல்வி
நல்லிச்சேரி
விளாகம் போஸ்ட்
எரவாஞ்சேரி வழி
நன்னிலம் தாலுக்கா

7. திரு. B. சங்கர்
B-122 P.S.G.
டெக்னிகல் ஹாஸ்டல்
பீளமேடு, கோவை—4.



சொல்லிவிடலாமென்று தோன்றியது. ஆனால் தான் பண்ணிய தப்புக்குத் தான் தான் பரிகாரம் பண்ண வேண்டும்.....

தெரு முனையில் ஒரு டீக் கடை இரவு வெகு நேரம் திறந்திருப்பதை அவன் கண்டிருக்கிறான். போய் ஒரு டீ குடித்து விட்டு வந்தாலென்ன?

ஓசை செய்யாமல் படியிறங்கிக் கீழே வந்தான்.

வாசல் கதவை உட்புறம் பூட்டி விட்டு, கதவருகே உள்ள ஆணியிலேயே சாவியை மாட்டி வைத்திருப்பது அவனுக்குத் தெரியும். போகும்போது கதவைத் திறந்து வெளிப்புறம் பூட்டிக் கொண்டு சென்றால் ஐந்து நிமிஷத்தில் திரும்பித் திறந்து கொண்டு வந்துவிடலாம். யாரையும் அனாவசியமாக எழுப்பத் தேவையில்லை.

ஆனால் சாவியில் கை வைத்த போது கோமளம் விழித்துக் கொண்டு விட்டாள். அல்லது தூக்கமேயில்லையோ என்னவோ. "யார், மனோஜா? எங்கேப்பா இந்த வேளையில் புறப்படறே?" என்றாள் திகைப்புடன்.

"வந்து.... ஒண்ணுமில்லே மாமி.... கொஞ்சம் விழிச்சிட்டு வேலை பார்க்க வேண்டியிருக்கு.... போய்க் காப்பி.... இல்லேன்னா டீ சாப்பிட்டு வரலாம்னு கிளம்பினேன்... கதவை வெளிப் பக்கம் பூட்டிக்கிட்டுப் போறேன்..."

"ஏம்பா மனோஜ்.... நீ இங்கே வந்து இத்தனை நாளாச்சேடா. இன்னும் கூடவா யாரோ மூன்றாம் மனுஷன் மாதிரி நடந்துக்கணும்? இங்கேயே காப்பி கிடைக்காதா?"

"சே.... சே.... அப்படியெல்லாம் இல்லே, மாமி. அகாலத்திலே உங்களை ஏன் எழுப்பணும்னு...."

"எழுப்ப வேண்டாம். நீயே போட்டுக்கயேன். டிகாக்ஷன் போட்டு ஃப்ரிஜ்ஜிலே வைச்சிருக்கேன். பாலும் ஃப்ரிஜ்ஜிலேயே இருக்கு. நீயே போட்டுக் கொண்டு சாப்பிடக் கூடாதா? அந்த அளவுக்குக்கூட உனக்கு உரிமை கிடையாதா?"

கோமளத்தின் அன்பு அவன் மனதைத் நெகிழ்த்தியது. "சரி மாமி. போட்டுக்கறேன்," என்று சொல்லி, எடுத்த சாவியைத் திரும்ப மாட்டிவிட்டுச் சமையலறைக்குச் சென்றான்.



சாப்பவா! ஜெவிதா
படம்: 'இது எங்கள் ராஜ்யம்'

விளக்கைப் போட்டுக் கொண்டு ஃப்ரிஜ்ஜிலிருந்து பாலேயும் டிகாக்ஷனையும் எடுத்துச் சென்று சமையலறை மேடைமீது வைத்தான். ஒரு டம்ளர் கலந்து கொண்டான். ஜில்லென்றிருந்தது. சுட வைப்பதற்காகக் கியாஸ் அடுப்பை மூட்ட எண்ணி, தீப்பெட்டியைத் தேடி எடுத்து வைத்துக் கொண்டான்.

ஆனால் தீக்குச்சிக்கு மேல் தீக்குச்சி கிழித்தும் அடுப்புப் பற்றவில்லை. ஜில்லென்றிருந்தாலும் பரவாயில்லை, அப்படியே குடிக்கலாமா என்று யோசிக்கையில்—

''புத்திசாலிக் கொக்குன்னு நீதான் உலகத்திலேயே உயரமான புத்திசாலிக் கொக்கு!''

—கண்ணைக் கசக்கிக் கொண்டு சுபா வந்தாள்.

''நீ இன்னும் தூங்கலே; சுபா?''

''நீ காப்பி போடற லட்சணத்தைப் பார்க்கிறதுக்காகவே வந்தேன்,'' என்றாள் அவள். ''ஸ்ரீரங்கம் பட்டிக்காடு! முன்னே பின்னே கியாஸ் அடுப்பைப் பார்த்திருக்கியா?''

''ஏன்? என்ன இதிலே?'' அவன் விழித்தான்.

''கீழே சிலிண்டரை மூடியிருக்கு. அதைத் திறந்து கொண்டு, பிறகு அடுப்பைப் பற்ற வை!'' என்று சிரித்தவள் அவனை நகரச் சொல்லி, குனிந்து, ஸிலிண்டர் திருகைத் திறந்து கொடுத்தாள்.

''ரொம்பத் தாங்ஸ்,'' என்றான் அவன். கலைந்த கூந்தலும் கசங்கிய உடைகளும் தூக்கக் கலக்கக் கண்களுமாய் இருந்த அவளிடம் அவனுக்கு விநோதமான கவர்ச்சி ஏற்பட்டது. ''போய்ப் படுத்துக்க, சுபா. இனிமேல் நானே பார்த்துக்கறேன்.''

''ஆகா! மலையைத் தூக்கி என் தலைமேல் வை, பத்து மைல் நடந்து காட்டுகிறேன்னுனும் ஒருத்தன்! இவ்வளவு தூரம் நான் செய்து கொடுத்தப்பறம் நீ என்ன காப்பி போட்டுக்கிறது? இரு, நானே போட்டுத் தரேன்.''

[illegible] என்று அவன் ஓரமாய் ஒதுங்கிக் கொண்டான். அவள் காப்பியைச் சுட வைத்து, டபரா டம்ளரில் ஊற்றிக் கொடுத்து, அடுப்பையும் சிலிண்டரையும் பழையபடி மூடினாள்.

''டம்ளரை மாடிக்கு எடுத்திட்டுப் போகவாவது தெரியுமா, இல்லே அதுவும் நானே கொண்டு வந்து தரணுமா?''

''வேண்டாம் யுவர் ஹைனஸ். எவ்வளவு கனமாயிருந்தாலும் நான் ஒண்டியாகவே மாடிக்குத் தூக்கிட்டுப் போயிடுவேன்,'' என்றவள், அவனை நெருங்கி வந்து, ''மனேஜ், இப்படியெல்லாம் கண் விழிக்காதே....'' என்றாள்.

அவளுடைய அக்கறைக்கு எப்படிப் பதில் சொல்வதென்று அவனுக்குத் தெரியவில்லை. 'ஓ.கே.' என்று கூறி, அறையைத் திரும்ப அடைந்து காப்பியைச் சொட்டுச் சொட்டாக உறிஞ்சினன்.

மேலும் இரண்டு கடிதங்களை நகல் செய்தான். அதற்கு மேல் முடியவில்லை. காப்பியின் சக்தி சிறிது சிறிதாய்க் குறைந்துவிட்டது. தன்னையறியாமலே தலை ஆடி, மேஜை மீது விழுவதைப் போல உணர்ந்தான்.

இனிமேல் முடியாது. காலையில் எழுந்து பார்த்துக் கொள்ளலாம். காலையில் எழுத ஆரம்பித்தால் முடியாதா? அவனுக்குச் சந்தேகமாயிருந்தது. ரொம்ப நேரம் விழித்திருந்துவிட்டுத் தூங்குவதால், எட்டு மணிக்கு முன்னே எழுந்திருக்க முடியாது. அலாரம் வைத்துக் கொண்டால் ஒருவேளை எழுப்பும். ஆனால் அவன் அறையில் அலாரம் இல்லை. கீழே போய் எடுத்து வர வேண்டும். மறுபடியும் மாமியின் தூக்கத்தைக் கெடுக்கிற மாதிரி நேர்ந்துவிடும்.

எப்படியானாலும் இனிமேல் ஒரு நிமிஷம்கூட இமைகளைத் திறந்து வைத்துக் கொள்ள முடியாது என்று நிச்சயமாகத் தெரிந்து விட்டது.

விளக்கை அணைத்தான், படுக்கையில் படுக்கப் போகுமுன் சட்டையைக் கழற்றி ஸ்டாண்டில் எறிந்தான்.

எதுவோ வெள்ளையாய், [illegible] வென்று ஒரு சின்னஞ்சிறு காகிதம் கீழே விழுந்த மாதிரி இருந்தது. எதுவாக வேண்டுமானாலும் இருக்கட்டும் என்று தீர்


PRASA/PGF-118'84



# சேஸ் வாங்கிட்டு வாங்க!"

## இப்போது இல்லம் தோறும் இதே அன்புக் கட்டளை!

உயர் விலை டிடர்ஜென்ட் பவுடர்களின் சிறந்த மூலப் பொருட்கள் யாவும் கொண்ட குறைந்த விலை வாஷிங் பவுடர், சேஸ் வாஷிங் பவர் ஒன்று மட்டுமே!

- இனிய மணம் கொண்டது.
- கரங்களுக்கு மென்மையானது.
- அழுக்கை அகற்றி விரட்டும் திறன் வாய்ந்தது.
- பொங்கும் நுரைவளம் மிக்கது.
- சலவைக்கு நட்சத்திர ஒளி படைப்பது.

# சேஸ்

## வாஷிங் பவர்

## குறைந்த விலையில் உயர்ந்த தரம்!

தயாரிப்பு: TAC தூத்துக்குடி
தூத்துக்குடி ஆல்கலி கெமிக்கல்ஸ் & ஃபெர்டிலைசர்ஸ் லிமிடெட்
553, அண்ணா சாலை, சென்னை 600 018.




ADWAVE/TAC/2647/R

மானத்துக் கண்களை மூடினான். ஆனால் அது என்னவாக இருக்கும் என்ற குறுகுறுப்பு அவனைத் தூங்க விடவில்லை.

எழுந்து மறுபடி விளக்கைப் போட்டான். கட்டிலுக்கடியில் குனிந்து பார்த்தான்.

ஒரு மாத்திரை.

கையிலெடுத்து, என்ன மாத்திரை என்று ஆராய்ந்தான். அது எப்படித் தன் பைக்கு வந்தது என்றும் யோசித்தான்.

டெரிஜின் என்ற மாத்திரை என்று கண்டுபிடித்தான்.

எதற்கு இது.... எப்படி.....

சிறிது சிறிதாய் ஞாபகம் வந்தது.

ஜூன் முப்பதாம் தேதி பாங்கில் ஏகப்பட்ட வேலைகள் இருந்த சமயம். அரை வருடக் கணக்குகளை முடிக்க வேண்டும். லெட்ஜர் பாலன்ஸ் எடுத்து, ஸேவிங்ஸ் பாங்க் கணக்குகளில் வட்டித் தொகைகளை க்ரெடிட் செய்து....

அன்று ராத்திரி பாங்க்கிலேயே தங்கியிருந்தார்கள் மானேஜரும், மனோஜும், இன்னும் மூன்று நாலு எழுத்தர்களும். மெஸஞ்சர் அவ்வப்போது டீ வாங்கி வந்து கொடுத்துக் கொண்டிருந்தான்.

மனோஜுக்கு ஒரு விஷயம் ஆச்சரியமாயிருந்தது. கேஷியர் மட்டும் டீயோ காப்பியோ ஒரு வாய்கூட அருந்தக் காணோம். ஆனால் வேலையைச் சுறுசுறுப்பாகச் செய்து கொண்டிருந்தார்.

''என்ன சார், தூக்கம் வராமல் இருக்க ஏதாவது வரம் வாங்கிட்டு வந்திருக்கீரா?'' என்றான் அவரிடம்

''வரம் வாங்கிட்டு வரலை. இதை வாங்கிட்டு வந்திருக்கிறேன்,'' என்று பாண்ட் பையிலிருந்து இரண்டு மூன்று மாத்திரையை எடுத்துக் காட்டினார் அவர்.

''என்ன மாத்திரை இது?''

''டெரிஜின் என்று பெயர்.

''எதுக்கு இது?''

''தூக்கம் வராமல் இருக்க,'' என்றார் அவர். ''கண்ணைச் சுழற்றுகிற போது ஒண்ணு போட்டால் போதும். உங்களுக்கும் இந்தாருங்கள் ஒன்று.''

''எனக்குத் தேவையிருக்காது,'' என்றான் மனோஜ். என்றாலும் அவர் கொடுத்த மாத்திரையை வாங்கிப் பையில் போட்டுக் கொண்டான்.

அந்தச் சட்டையை இன்றுவரை சலவைக்குப் போடாமலே இருந்ததால், மாத்திரையும் பையிலேயே தங்கியிருந்திருக்கிறது.

இப்போது சரியான சமயத்தில் தான் கிடைத்திருக்கிறது.

உறையைக் கிழித்து மாத்திரையை உள்ளங் கையில் வைத்துக் கொண்டான். கூஜாவிலிருந்து தண்ணீரை டம்ளரில் சரித்துக் கொண்டான்.

வாயில் போடுவதற்காகக் கையை உயர்த்திய சமயம், பட்டென்று யாரோ கையைத் தட்டி விட்டார்கள்.

''இந்த மாதிரி நீ ஏதாவது செய்யப் போகிறாயென்னுதான் பார்க்க வந்தேன்,'' என்றாள் சுபா.

''சுபா... அது வந்து....''

''தெரியும்.'' அவனுடைய இரண்டு கைகளையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டாள் அவள். ''ராத்திரி எத்தனை தடவை வேண்டுமானாலும் என்னை எழுப்பு. எவ்வளவு காப்பி வேணுமானாலும் கேள். போட்டுத் தரேன். இது மட்டும் வேண்டாம், மனோஜ், வேண்டவே வேண்டாம்.''

அவள் கண்ணின் முனைகள் கண்ணீரால் பளபளத்தன. மறு விநாடி புடவைத் தலைப்பால் விம்மலை அடக்கிக் கொண்டு விருட்டென்று மாடிப் படியில் இறங்கிப் போய் விட்டாள்.

(தொடரும்)




—பாரதிகுமார்.



சாராயக் கடையும [illegible]சும் கையுமாக உட்கார்ந்திருக்கும் பாக்யராஜை முதல் காட்சியில் கண்டதும் தூக்கிவாரிப் போடுகிறது. ஏதோ வேடிக்கை பண்ணப் போகிருர் என்று நினைப்பவர்களுக்கு அதிர்ச்சி—நிஜமாகவே குடிக்கிருராம், குடும்பக் கவலைகளையும் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் மறப்பதற்காக.

பாக்யராஜின் வழக்கமான 'இமேஜ்' கொஞ்சம் ஆடித்தான் போகிறது.

ஆனல் பாக்யராஜுக்கே உரிய குறும்பு ராஜ்யமும் இடம் பெருமல் இல்லை. வீட்டுக்கு எதிரே செட்டு செட்டாக வாலிபர்கள் ஏதோ வேலையாயிருக்கிற மாதிரி நின்று தையல் வேலையில் ஈடுபட்டிருக்கும் தன் தாவணித் தங்கைகளை 'டாவு' கட்டுவதைக் கண்டதும், மெகபோனை வாயில் வைத்துக் கொண்டு, அவர்களை விரட்டப் பார்ப்பதும், அவர்கள் நகராதிருக்கவே, 'இதோ பாருங்க, நேரே என்னண்டை வாங்க. உங்களுக்கு எந்தப் பெண்ணைப் பிடிக்குதுன்னு சொல்லுங்க. நானே கல்யாணம் பண்ணி வைக்கிறேன்,' என்று அடுத்த அறிவிப்புச் செய்வதும், இளைஞர்கள் பின்னங்கால் பிடரியில் பட ஓட்டமெடுப்பதும் எடுத்துக்காட்டு.

பாசத்தையும் காட்ட முடியாமல் கண்டிப்பையும் அமல் படுத்த முடியாமல் வேடிக்கையான பட்டாளத்தானுக இருக்கும் வரையில் சிவாஜியின் பாத்திரத்தை உருவாக்கியவர் பாக்யராஜ்தான் என்று தெரிகிறது. ரத்தம் கக்கும் பகுதிகள் வந்ததும், சிவாஜிக்காகவே சம்பவங்களைச் சிருஷ்டிக்கும் மாமூல்காரர்களிடம் கதை போய்விட்ட மாதிரி இருக்கிறது.

மண் வாசனை—கிராமத்து முகங்கள்—யதார்த்தம்—இதிலெல்லாம் பாக்யராஜுக்கு நம்பிக்கை குறைகிறதா என்ன? பளபளா ஜிலுஜிலுக்கள் ஏராளம்.

முத்தாய்ப்பு வைத்துப் பளீரென்று முடிக்கவில்லை என்று தோன்றுகிறது. பட்டினிக் கொடுமை, சத்துணவுத் திட்டம், வேலையில்லாப் பிரசினை, வரதட்சணைச் சீர்கேடு, குடியின் தீமை—இப்படிப்பட்ட சமுதாயப் பிரச்னைகளை அலச ஆசைப்பட்டதுதான் காரணமோ?

## So does Madura.





The 9 to 5 man stays cool, fresh and unruffled because that's the way he's made.
So does Madura shirting and trousering.
A blend of polyester and cotton that breathes, keeps cool, resists creasing and stays unruffled. In a wide range of stripes, checks, plains and weaves.
Over 60 variations in each.
To keep the 9 to 5 man looking his best all day. Day after day.

9to5

Trousering and Shirting.
Specially crafted for the 9 to 5 man.

**Madura Fabrics**

A quality product from Madura Coats.

# என்னைத் தவிர

## 8

ராத்திரி பூரா மனேஜ் தூங்கவுமில்லை. அந்த ஏழைப் பெண் செல்லம்மாவின் தஸ்தாவேஜுகளை ஒட்டிச் சரிபண்ணவுமில்லை.

இரண்டு கைகளையும் தலையின் பின்னே கோத்துக் கொண்டு, சுழலும் மின் விசிறியைப் பார்த்த வண்ணம் கட்டிலில் மல்லாந்து கிடந்தான்.

மாத்திரையைத் தட்டிவிட்டு விம்மலுடன் வெளியே ஓடிய சுபாவைப் பற்றியே அவன் எண்ணங்கள் சுழன்றன. 'வேண்டாம் மனேஜ். இது உனக்கு வேண்டாம்....' என்று கண்ணீர் நிரம்பிய குரலில் அவள் சொன்ன வார்த்தைகள், யாரோ டேப் ரெக்கார்டரில் ஒலிக்க வைக்கிற மாதிரி மறுபடியும் மறுபடியும் கேட்டன.

கொஞ்சம் கொஞ்சமாகக் கீழ் வானம் சிவப்பதை அவன் ஜன்னல் வழியே கண்டான். விளக்குக் கம்பங்களின் மீது உட்கார்ந்திருக்கும் குருவிகள் கீச் கீச் சென்று சத்தமிடுவதைக் கேட்டான். ஒரே மாதிரி படுத்திருந்ததால் முதுகின் கீழே வியர்த்துக் கசகசப்பதை உணர்ந்தான்.

நல்ல வெளிச்சம் பரவியபின் கீழே இறங்கி வந்த போது கோமளமும் சுபாவும் சமையலறையில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

சுபாவின் அரட்டைக் குரல் கலகலப்பாகக் கேட்டுக் கொண்டிருந்தது. ராத்திரி சம்பவங்கள் ராத்திரியோடு போய் விட்டதா என்ன?

''மனேஜ்!'' என்ற சடகோபனின் குரல் உரக்கக் கேட்டது. ''அப்போது பிடித்து உன்னைக் கூப்பிட்டுக் கொண்டிருக்கிறேனே, காதில் விழவில்லையா?''

சமையலறையிலிருந்த சுபா கடகடவென்று சிரித்துக் கொண்டு, ''ஐயையோ அப்பா! அவனை எழுப் பாதீங்க! அவன் தூங்கிக் கொண்டே பல் விளக்குவான். தூங்கிக் கொண்டே ஆபீஸ் போவான். தூங்கிக்கொண்டே வேலைகளைப் பார்ப்பான். தூக்கத்தில் நடக்கும் வியாதி அவனுக்கு!'' என்றாள்.

சட்டென்று உலகத்தின் சுழற்சி நின்றுவிட்டாற் போல சடகோபனும் அவனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். முற்றத்தில் பற்றுப் பாத்திரத்தை வைப்பதற்காக வந்த கோமளமும் அப்படியே ஸ்தம்பித்து நின்றாள். திரைப் படத்தில் ஒரு ஃப்ரீஸ் ஷாட் போல ஒரு நிமிடம் அவர்கள் அப்படியே நின்றார்கள். மனேஜ் முதலில் சுதாரித்துக் கொண்டான். ''ஸாரி மாமா. எங்கோ ஞாபகமாய் இருந்துவிட்டேன். எதுக்குக் கூப்பிட்டீங்க?''

''நீ என்ன பண்ணறே, ஸ்கூட்டரை எடுத்திட்டுப் போய்.....''

''ஐயையோ! அவன் தூக்கத்திலே ஸ்கூட்டர் ஓட்டுவான் அப்பா!'' என்று மறுபடியும் சுபா கத்தினாள்.

''நீ கொஞ்சம் சும்மா இரேன் சுபா, அப்பா ஏதோ முக்கியமாகப் பேசும்போது கலாட்டா பண்ணாதே,'' என்று கோமளம் கண்டித்தாள்.

கிருஷ்ணகுமார்

''அவள் கிடக்கிறாள். நீங்க சொல்லுங்க,'' என்றான் மனோஜ்.

''எக்ஸ்பிரஸ் பஸ் ஸ்டாண்டுக்குப் போ. திருநெல்வேலியிலிருந்து வருகிற பஸ்ஸில் குமரேசன் என்று என் சிநேகிதன் வருகிறான். முழுக் கை சட்டையும் தங்க பிரேம் போட்ட கண்ணாடியுமாயிருப்பான். கழுத்தைச் சுத்தி நீளமாய் ஒரு அங்கவஸ்திரம் போட்டிட்டிருப்பான். இன்னிக்கு வருவதாய்த் தந்தி கொடுத்திருந்தான். லக்கேஜ் எதுவும் இருக்காது. நீ அவனைப் பார்த்து ஸ்கூட்டரிலேயே அழைச்சிட்டு வந்திடு. உனக்கு ஆபீசுக்கு டயமாயிடாதே?''

''ஆகாது, மாமா. அதுக்குள்ளே எட்டு நடை போய்விட்டு வந்து விடலாம்....'' என்று அவன் சொல்லிக் கொண்டிருந்த போது, 'ஸ்! ஆ!' என்று சுபா மெல்லிய கூச்சலிடுவது கேட்டது.

''என்னடி? என்ன?'' என்று பதறினாள் கோமளம்.

''ஒண்ணுமில்லே. பளபளன்னு அழகா இருக்குதுன்னு சொல்லிப் புது அடுப்பு வாங்கியிருக்கியே, அதோட லட்சணம். பழைய அடுப்பு கொஞ்சம்கூட வெளிப்பக்கம் சுடாது. இந்த ஸ்டீல் அடுப்பிலே கை பட்டால் போச்சு, கொப்பளிச்சிடுது!''

''எங்கே காட்டு,'' என்றான் மனோஜ்.

அவள் உள்ளங் கையைப் பிரித்துக் காட்ட, அழகிய விரல்களை மடக்கிக் கொண்டு அவன் பார்த்தான். இருவர் கண்களும் சந்தித்தபோது அந்த விநாடியில், வார்த்தைகளால் சொல்ல முடியாத உணர்ச்சிகளை அவர்கள் உள்ளங்கள் பரிமாறிக் கொண்டன.

''இப்படிக் காட்டு, கொஞ்சம் எண்ணெய் தடவி விடறேன்,'' என்றாள் கோமளம்.

அவன் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் எக்ஸ்பிரஸ் பஸ் ஸ்டாண்டுக்குப் போய், சிரமமில்லாமல் அந்தக் குமரேசனை அடையாளம் கண்டுபிடித்து, வீட்டுக்கு அழைத்து வந்தான். எது செய்தபோதிலும், எது பேசியபோதிலும், தண்ணென்று குளிர்ச்சியான சுபாவின் விரல்களிலேயே மனம் சென்று கொண்டிருந்தது. எத்தனை உற்சாகமான கலகலப்பான பெண்! இவளுக்கு ஏன் விதி அந்தக் கோளாறை ஏற்படுத்தியிருக்க வேண்டும்....

''சௌக்கியம்தானே?'' என்று கணவரின் நண்பரை நலம் விசாரித்துக் கொண்டிருந்தாள் கோமளம்.

''காப்பி சாப்பிடுங்கள் முதலில்,'' என்றார் சடகோபன். ''வெற்றிலை சீவல் வைத்திருக்கீங்களா? பன்னீர்ப் புகையிலை வாங்கிட்டு வரச் சொல்றேன்.... மனோஜ் நீ போய்...''

குமரேசன் குறுக்கிட்டு, ''மன்னிக்கணும். நான் வெற்றிலை போடறதில்லே,'' என்றார்.

''என்னது! ஒரு நாளைக்கு ஐம்பது தடவை புகையிலை குதப்புவீரே!'' என்று



சடகோபன் வியப்புத் தெரிவித்தார்.

''ஆமாம். ஆனுல் இப்ப விட்டுட்டேன்.''

''ஏன்?''

''உங்களுக்குத் தெரியாதா? என் ஒய்ஃப் ரொம்ப உடம்புக்கு முடியாமல் படுத்திருந்தாளே போன வருடம், அப்ப ஒருத்தர் சொன்ஞர்—எதையாவது தியாகம் பண்ணுங்கன்னு. வெற்றிலே சீவல் புகையிலையை விடப் பிரியமானது எதுவும் எனக்கு இல்லே. அதை விட்டேன். ஒய்ஃபுக்கும் குணமாயிட்டுது.''

புகையிலே வாங்குவதற்காகச் சடகோபன் கூப்பிட்டபோது கீழே இறங்கி வந்த மனேஜ் மாடிப்படியில் நின்றபடியே குமரேசன் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

திரும்ப மாடியேடியபோது அவன் உள்ளத்தில் ஒரு யோசனே....

இன்ட்டர்காம் மணி ஒலித்தது. ''ஹலோ,'' என்று பதிலளித்தான் மனேஜ்.

''ஒரு நிமிஷம் என் ரூமுக்கு வர முடியுமா மனேஜ்?'' என்ருர் மானேஜர்.

''வருகிறேன் சார்,'' என்று சொல்லி லெட்ஜர்களேயும் மேஜை டிராயர்களேயும் மூடிவிட்டு அவன் எழுந்து கொண்ட போது, மானேஜர் கூப்பிடுவது விசுவேசுவரன் விஷயமாக இருக்கும் என்று தான் நினேத்தான்.

ஒரு வாரமாக எழுத்தர் விசுவேசுவரன் விஷயம் பாங்க்கில் பலமாக அடிபட்டுக் கொண்டிருந்தது.

வேறு பல எழுத்தர்களும் ஆபீசர்களும் கூடச் செய்கிற குற்றம்தான். அவர்கள் சாமர்த்தியமாகச் செய்துவிட்டுத் தப்பித்துக் கொள்வார்கள். விசுவேசுவரன் அசட்டுத்தனமாகச் செய்து மாட்டிக் கொண்டு விழித்தான்.

ஃப்ரிஜ், டி.வி., ஸ்டீல் பீரோ முதலியன வாங்குவதற்குப் பாங்க்கில் தங்கள் ஊழியர்களுக்குக் கடன் கொடுப்பதுண்டு. பொருள் வாங்க விரும்பும் ஊழியர் சம்பந்தப்பட்ட கடையில் இன்வாய்ஸ் வாங்கி, பாங்க்கில் கொடுப்பார்கள். அதற்கான செக் குறிப்பிட்ட கடைக்குப் போனதும் பில்லில் போட்டுள்ள பொருள் அவர்கள் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்து விடும்.

# நடமாடும் கம்ப்யூட்டர்



மதுரையில் தபால் தந்தி ஊழியர்கள் மருத்துவ செலவு சம்பந்தமாக நடந்த பல லட்சம் ரூபாய் மோசடி வழக்கின் தீர்ப்பை நீதிபதி ரத்னவேல் பாண்டியன் 53 பக்கங்களில் எழுதியிருந்தார். கடைசிப் பக்கத்தில் நீதிபதி குறிப்பாக ஒருத்தரைப் பாராட்டியிருந்தார். அவர் ஒரு கான்ஸ்டபிள். பெயர் முத்தையா.

முத்தையா ஒரு 'வாக்கிங் கம்ப்யூட்டர்' போன்று தன்னைக் கவர்ந்ததாக நீதிபதி குறிப்பிட்டிருக்கிருர்.

# எஸ். ஜானகியின் மருமகள்



இதுவரை பல பட்டங்கள் விருதுகள் பெற்ற பின்னணிப் பாடகி எஸ். ஜானகிக்கு விரைவில் ஒரு புதுப் பட்டம் கிடைக்கப் போகிறது. பட்டத்தை வழங்கப் போகிறவர் குமாரி உமா சுப்பிரமணியம். ஜானகியின் குமாரர் பாபுவை உமா அடுத்த ஆண்டு திருமணம் செய்து கொள்ளப் போகிருர்.

—எஸ். ரஜத்

# பு(து)த்

■ ஊதுகிறேன் சங்கு (அரிமதி தென்னகன் — பக். 128 —ரூ. 10 —சேகர் பதிப்பகம், பெரியார் தெரு, எம்.ஜி.ஆர். நகர், சென்னை 600 078) கவிதைத் தொகுப்பு. 'போற்றிடப் பழகுவோம்,' நல்ல கருத்தைக் கொண்டது.

■ பாரதியம் (அரிமதி தென்னகன் —பக். 68 — ரூ. 5 —ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம், புதுச்சேரி —மதுரை தமிழாலஜி பப்ளிஷர்ஸ், 121, மேல மாசி வீதி, மதுரை 1). பாரதிதாசனின் அடியொற்றிப் பாரதியாரின் கருத்துக்கள் வெளிப்படும் வகையில் பாரதியாரை முன்னிலைப்படுத்தி எழுதப்பட்ட கவிதைகள்.

■ ஐரோப்பிய வரலாறு 1919—1970 (ஏ. சுவாமிநாதன் —பக். 176 —ரூ. 13 —தீபா பதிப்பகம், 45, லாசரஸ் சர்ச் ரோடு, சாந்தோம். சென்னை—600 028)

இரண்டாவது உலகப் போர் முடிந்தது முதல், 1970 வரை, ஐரோப்பிய நாடுகளின் சரித்திரத்தைச் சுருக்கமாக வரைகிறது.

■ ஐநூறு மூலிகைகளின் அரும் பயன்கள் (இரண்டாம் அச்சு —என். ஜனார்த்தனன் — பக். 144 —ரூ. 9—நர்மதா). அகிற் கட்டை முதல் தேள் கொடுக்குப் பூ வரை வைத்தியத்துக்கு உதவும் விதம்.

■ முயற்சியே முன்னேற்றம் (இரண்டாம் அச்சு —மெர்வின் —பக். 136 —ரூ. 7.50 —நர்மதா) வாழ்க்கை முன்னேற்றத்துக்காக உதவக் கூடிய அறிவுரைகள்.

■ நர்மதா நளபாக சமையல் (ராஜம் அனந்தராமன் —பக். 168 —ரூ. 9 —நர்மதா) விதவிதமான சமையல் வகைகள் விவரிக்கப்பட்டுள்ளன.

■ அதிர்ஷ்ட நியூமராலஜி ஜோதிடம் (என். ஜனார்த்தனன் —பக். 176 —ரூ. 11 —நர்மதா). வாழ்க்கையில் முன்னேற எண் சோதிடம் மிகவும் பயன்படும் என்று கூறுகிறது.

■ கை ரேகைக் களஞ்சியம் (இரண்டாம் அச்சு. —ஆர்.வி.பி. —பக். 172 —ரூ. 10 —ஐந்து புத்தகங்களும்: நர்மதா பதிப்பகம், 10, சோமசுந்தரம் தெரு, தியாகராய நகர், சென்னை—600 017) கை ரேகை சாஸ்திர விளக்கம்.

■ பாராட்டுத் தமிழ் (எஸ். மகராஜன் — பக். 152 —ரூ. 9—வானதி) 'முத்து என்பது உனது கொற்கையில் மாத்திரம் விளையும் சரக்கு என்று நினைக்கிறாய்? இல்லை, மன்னனே, உனது அழகிய மார்பை நினைத்து உருகும் பெண்களின் கண்ணிலும் அது விளைகிறது,' என்று பாண்டியனைப் பாராட்டிய புலவரைப் புகழ்கிறது முதல் கட்டுரை. தமிழ் ரசனையைப் பகிர்ந்துகொள்ளும் பத்தொன்பது கட்டுரைகள்.

இது நேர்மையானவர்கள் செய்யும் காரியம்.

குறுக்கு வழிக்காரர்கள், அவ[illegible] மாக நாலாயிரம் ஐ[illegible]யிரம் ரூபாய் பணம் தேவைப்படுகிறபோது இந்தச் சலுகையைப் பயன்படுத்திக் கொள்வதுண்டு.

தெரிந்த கடைக்குப் போவார்கள். அல்லது அதற்கென்றே ஏற்பட்டுள்ள இடத்துக்குப் போவார்கள். சும்மா இன்வாய்ஸ் போடச் சொல்லுவார்கள். பாங்க்கிலிருந்து செக் போனதும் அந்தக் கடைக்காரர் தனக்கொரு குறிப்பிட்ட கமிஷன் எடுத்துக் கொண்டு மீதித் தொகையை இவரிடம் தந்துவிடுவார்.

இந்தக் குறுக்கு வழியைத்தான் விசுவேசுவரன் கடைப் பிடித்திருந்தான். ஒரு ஃப்ரிஜ் வாங்கியதாகச் சொல்லிப் பணம் வாங்கிக் கொண்டிருந்தான். ஆனால் பாங்க்கிலிருந்து செக்கிங் செய்ய ஆள் வந்த போது, அவன் வீட்டில் ஃப்ரிஜ்ஜும் இல்லை, ஒன்றுமில்லை. வேறு சாமர்த்தியக்காரராயிருந்தால் வீட்டில் முன்பே வாங்கி வைத்திருந்த ஃப்ரிஜ்ஜை இப்போதுதான் வாங்கியதாகக் காட்டுவார்கள். அதையும் செய்யவில்லை இவன்.

விசாரணை நடந்து கொண்டிருந்தது. விசுவேசுவரனை ஸஸ்பென்ஷன் செய்திருந்தார்கள். பாங்க் பூராவும் அதுதான் பேச்சு. பிள்ளை குட்டிக்காரனான விசுவேசுவரனுக்கு எப்படியாவது மன்னிப்பு வாங்கிக் கொடுக்க வேண்டும் என்று எல்லோரும் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

மானேஜரின் அறையை நோக்கி நடந்தபோது இவ்வளவும் மனோஜுக்கு ஞாபகம் வந்தது.

விசுவேசுவரன் விஷயமாகத்தான் பேசக் கூப்பிடுகிறார் என்று நினைத்துக் கொண்டு சென்றவனுக்கு, அறைக்குள் நுழையுமுன்பே விளங்கி விட்டது—என்ன காரியமாய் மானேஜர் கூப்பிட்டாரென்று.

மானேஜரின் அறைக்கு வெளியே இருந்த சிறிய சோபாவில் பழனிமுத்துவும் அவனுடைய அடியாட்கள் மாதிரி மூன்று பேரும் கால் மேல் கால் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்.

மனோஜைப் பார்த்துப் பழனி முத்துக் காலை இறக்கிக் கொள்ளவில்லை. இன்னும் கொஞ்சம் உயர்வாகப் போட்டுக் கொண்டு கடகடவென்று ஆட்டவும் ஆட்டினான். இடது புறங் கையால்

மீசையைத் தடவிவிட்டுக் கொண்டே மனோஜைப் பார்த்த பார்வையில் திமிரும் அலட்சியமும் நிறைந்திருந்தன.

''உட்கார் மனோஜ்,'' என்றார் மானேஜர். உட்கார்ந்தான். தடிமனைய் மூன்று நான்கு ஃபைல்களை மேஜைக்குள்ளிருந்து வெளியே எடுத்துப் போட்டார். ''பழனிமுத்து விவகாரம்தான்,'' என்றார் சுருக்கமாக.

''பார்த்தேன். வெளியே உட்கார்ந்திருக்கிறானே''

''விட மாட்டேன் என்கிறான் மனிதன்.'' மானேஜரின் குரலில் கவலை தெரிந்தது. ''அதுவும் உன் மேல் ரொம்பக் கோபம்.''

''பாங்க் மேலேன்னு சொல்லுங்க.''

''இல்லை. குறிப்பாய் உன் மேலேதான். அவன் சிபாரிசு பண்ணியிருக்கிற பினாமிகளுக்கெல்லாம் கடன் கொடுப்பதற்கு நீதான் பெரிய தடையாயிருக்கிறாயாம். உன் கையைக் காலை வாங்கி விட்டுத்தான் மறு வேலை என்று ஒப்பனாகவே சொல்கிறான்.''

மனோஜ் சிரித்தான். ''வாங்கட்டும். ஒரு கால் ஒரு கைதானே வாங்குவான்? இன்னொரு கால் இன்னொரு கையைக் கொண்டு சமாளிச்சுக்கிறேன்.''

''விளையாட்டில்லை, மனோஜ். இது ரொம்ப சீரியஸான விஷயம்.''

''நானும் சீரியஸாய்த்தான் சொல்கிறேன் சார்,'' என்றான் மனோஜ். ''அவன் சிபாரிசு பண்ணியிருக்கிற அத்தனை பேர்களையும், அத்தனை வியாபாரங்களையும் பற்றி நான் தரோவாய்ச் செக்கப் பண்ணிவிட்டேன். வெளியே இன்ஸ்பெக்ஷனுக்குக் கிளம்பினால் எனக்கு வேறென்ன வேலைன்னு நினைக்கிறீங்க? இதுதான். அவன் சிபாரிசுகள் அத்தனையும் பினாமி. என் உயிரே போனாலும் நான் ஓ.கே. பண்ண மாட்டேன். நீங்கள் உங்கள் அதாரிட்டியை உபயோகித்து எப்படி வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள் சார்.''

''ரொம்பச் சூடாக இருக்கிறாய்,'' என்று மானேஜர் புன்னகைத்தார்.

அதே சமயம் மெஸஞ்சர் அவருக்காகக் கூல் டிரிங்க் கொண்டு வந்து வைத்தார்.

# தகவம்



எஸ். மகராஜன்

■ கம்பனில் மக்கள் குரல் (ந... ரெட்டியார் —பக். 144 —ரூ. 9 —வானதி) சுரங்கத்தில் தங்கம் வெட்டி எடுக்கப்படு... னொரு வகையில். ஒரு வகை: கம்பனில் ...யின்பம்.

■ சொல்லின் செல்வன் (மு. சாயபு மரைக்காயர் —பக். 108 —ரூ. 6—வானதி). அனுமனின் சிறப்பும், இராவணனின் இயல்பும், சீதையின் செம்மையும் சுவைபட ஆராயப்படுகின்றன.

■ பெரிய புராணக் கதைகள் —முதற் பாகம் —ஐந்தாம் அச்சு—தே.ப. பெருமாள் —பக். 80 —ரூ. 3. நான்கு புத்தகங்களும்: வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை—600 017) ஒன்பது நாயன்மார் வரலாறுகள்.

## ஆகஸ்ட் 1984 வெளியீடுகள்

### சமயம் கடந்த நெறி

(தகடூரான் —பக். 284 —ரூ. 18.50 தென் தமிழ்ப் பதிப்பகம், 85, சுப்பிரமணியம் பிள்ளைத் தெரு, சேலம்—636 001.

இராமலிங்க வள்ளலாரின் வாழ்க்கையையும், போதனைகளையும் சற்று ஒதுங்கி நின்று விவரிக்க முயல்கிறது.

### வாழ வைக்கும் வைகுண்டங்கள்

(பொன். பாஸ்கர மார்த்தாண்டன் —பக். 320 —ரூ. 20 —அம்பாள் பதிப்பகம், 48 ராமநாயக்கன் தெரு, நுங்கம்பாக்கம், சென்னை—600 034).

திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள் கோவில் முதல் காஞ்சிபுரம் வரதராஜர் கோயில் வரை பதினான்கு வைணவக் தலங்கள் பற்றிய உணர்ச்சிபூர்வமான வர்ணனைகள், கதைகள், அனுபவங்கள்.

### இயந்திர சூரியன்

(மேமன் கவி —பக். 136 —ரூ. 9 —நர்மதா).

இளம் ஈழத்துக் கவிஞரின் படைப்புக்கள்.

### ஜன்னல் கைதிகள்

(பாப்ரியா —பக். 150 —ரூ. 9 —இரண்டு புத்தகங்களும்: நர்மதா பதிப்பகம், 10, சோமசுந்தரம் தெரு, தியாகராய நகர், சென்னை 600 017)

காதல் கண்ணோட்டத்தில் உலகை நோக்கும் புதுக் கவிதைகள்.



அட்டையில்: சிறுமி உமா
வண்ணப்படம்: பிரபுசங்கர்

''இன்னொன்று வாங்கிட்டு வாப்பா,'' என்றார் மானேஜர்.

''யாருக்கு சார், எனக்கா? வேண்டாம்,'' என்றான் மனோஜ்.

''சும்மா சாப்பிடு. என் மேல் என்ன கோபம் உனக்கு?''

''இல்லை சார். உண்மையில் நான் காலைச் சாப்பாட்டுக்குப் பிறகு எதுவும் சாப்பிடுவதில்லை.''

''விரதமா?''

''அது மாதிரிதான்.''

''என்ன இந்த வயசில் விரதம், அனுஷ்டானமெல்லாம்? பெரிய குடும்பஸ்தனா? உனக்கு என்ன குடும்பக் கஷ்டம்?'' என்று மானேஜர் சிரித்தார்.

அவன் பேசாமல் மேஜை மீதிருந்த கண்ணாடிக் குண்டை உருட்டிக் கொண்டிருந்தான்.

''என்னிடம் சொல்லக் கூடாதா? என்ன விரதம்?''

''ஒன்றுமில்லை சார்.... நமக்கு வேண்டியவர்கள் நன்றாயிருப்பதற்காக ஏதாவது தியாகம் செய்தால் நல்லதுன்னு கேள்விப் பட்டேன். அதிலிருந்து நானும் காலை ஒரு வேளை சாப்பாட்டைத் தவிர வேறு எதுவும் சாப்பிடறதில்லைன்னு தீர்மானம் பண்ணி, அதன்படி செய்து கொண்டும் வரேன், சார்.''

''ஓ!'' அவனை ஆச்சரியத்துடன் பார்த்தார் அவர். ''கேட்கிறேன்னு தப்பாய் நினைச்சுக்காதே.... அப்படி விரதம் இருக்கிறது யாருக்காக?''

''உங்களிடம் சொல்வதற்கென்ன சார்?'' என்றார் மனோஜ். ''எங்கள் குடும்ப சினேகிதரின் பெண்.... சுபான்னு பெயர்.... அவள் மேல்.... அவள் மேல்....''

''அவள் மேல்?''

''அவள் மேல் எனக்கு உயிர், சார். அவளுக்கு ஏதாவது ஒன்று என்றால் எனக்குத் தாங்காது....''

''புரிகிறது, புரிகிறது. அந்தப் பெண்ணைப் பற்றிப் பேசுகிற போதே உன் குரல் தழுதழுக்கிறதே!'' என்று பரிகாசம் செய்துவிட்டு, குளிர் பானத்தை உறிஞ்சியவர், ''சரி, அந்தப் பழனிமுத்து சமாசாரத்தை மறுபடி யோசி,'' என்று கூறியனுப்பினார்.

அவன் வெளியே வந்தபோது ஓர் ஆச்சரியம் காத்திருந்தது.

கொஞ்சம் முன் கால்மேல் கால் போட்டுக் கொண்டு திமிராக இருந்த பழனிமுத்து இப்போது திடீரென்று எழுந்து பணிவுடன் கும்பிட்டான். ''வணக்கம் சார்,'' என்றான்.

''ஊம், ஊம்,'' என்று கூறிவிட்டு மனோஜ் அவனைத் தாண்டிக் கொண்டு செல்ல முயன்றான்.

''சார், உங்க மனசைப் புண் படுத்தியிருந்தேன்னா மன்னிச்சிடுங்க.... நீங்க பேசிட்டிருந்ததெல்லாம் காதிலே விழுந்தது. உங்களுக்கு எவ்வளவு நல்ல மனசு! யாரோ ஒரு பொண்ணுக்காக இவ்வளவு நினைக்கிறீங்களே....''

அவன் மனமாற்றம் மனோஜுக்கு ஆச்சரியமாகவே இருந்தது. வேடிக்கையாகவும் இருந்தது. இந்த முகஸ்துதிக்கெல்லாம் நான் மயங்க மாட்டேன் என்று தனக்குள் சொல்லிக் கொண்டு இருக்கைக்குத் திரும்பினான்.

கொஞ்சம் கொஞ்சமாக ஏதோ ஒரு கிலி அவன் அடிவயிற்றில் உற்பத்தியாகி, மேலெழும்பியது. ஐஸ் கட்டி வைத்த மாதிரி சிலீரென்று உடம்பெங்கும் ஒரு பயம் பரவியது.

(தொடரும்)



# 1984'ல் ஒரு வாசுகி!

நண்பர் ஒருவரைச் சந்தித்தேன். ''வீட்டில் மனைவி நலமா?'' என்று கேட்டேன்.

''திருவள்ளுவரும் அவர் மனைவி வாசுகியும் போல இருக்கிறோம்,'' என்று சிரித்தார் நண்பர்.

''அது சரி, வள்ளுவனும், வாசுகியும் போல் என்கிறீர்களே, எந்த ஆதாரத்தில்?'' என்று கேட்டேன். ''உங்களுக்கு என்ன ஆதாரம் வேண்டும்?'' என்றார்.

''வள்ளுவர் மனைவி வாசுகி கிணற்றில் தண்ணீர் இழுத்துக் கொண்டு இருக்கும்போது வள்ளுவர் அவரைக் கூப்பிடுவாராம். உடனே அம்மையார் இழுத்துக் கொண்டிருந்த தண்ணீர்க் குடத்தை அப்படியே விட்டு விட்டு செல்வாராம். ஓடோடி வந்து தன்னுடைய கணவர் சொன்ன வேலையைச் செய்வாராம். அந்தத் தண்ணீர்க் குடம் கிணற்றில் பாதியில் அப்படியே நின்றதாம். இதுபோல நடக்குமா?''

நண்பர் சொன்னார்: ''இதுதானா பிரமாதம்? இது எங்கள் வீட்டில் தினந்தோறும் நடக்கின்ற சாதாரண நிகழ்ச்சி!''

எனக்கு மிக ஆச்சரியம். ''குடம் கிணற்றில் பாதியில் நிற்பதை நான் உங்கள் வீட்டிற்கு வந்தால் பார்க்க முடியுமா?'' என்றேன். ''கட்டாயம் வந்து பாருங்கள்,'' என்று சொல்லிவிட்டு என்னைக் கையோடு அழைத்துப் போனார்.

அவர் மனைவி வந்து கதவைத் திறந்தார். நான் வெளியிலேயே நின்று கொண்டேன். நண்பர் மெல்ல உள்ளே சென்று, ''என் நண்பர் ஒருவர் வந்திருக்கிறார்,'' என்று சொல்லி, என்னிடம், ''உள்ளே வாருங்கள்,'' என்று சொல்லிவிட்டு, ''கமலா, கிணற்றுக்குச் சென்று தண்ணீர் இழு,'' என்று குரல் கொடுத்தார். உடனேயே அம்மையார் கிணற்றுக்குச் சென்று தண்ணீர் இழுத்தார். நண்பர் எட்டிப் பார்த்து வாளியைப் பாதி தூரம் இழுத்துக் கொண்டிருக்கையில், ''கமலா! இங்கே வா!'' என்று கூப்பிட்டார். அம்மையாரும் வாளியை அப்படியே விட்டுவிட்டு உடனே வந்தார்.

நண்பர் என்னைப் பெருமிதத்துடன் பார்த்தார். ''வாருங்கள்,'' என்று கிணற்றடிக்குக் கூட்டிப் போனார்.

என்ன ஆச்சரியம்! தண்ணீரோடு பாதியில் நின்றிருந்தது வாளி!

வாளி பாதியில் நின்றது உண்மைதான். ஆனால் எதனால்? அதுதான் வேடிக்கை.

கிணறு வெகு ஆழமாக இருந்ததால் நீண்ட கயிறு போட்டிருக்கிறார்கள். மழை நாளானதால் தண்ணீர் நிரம்பி மேலே இருக்கிறது. தேவையில்லாத கயிற்றை முடித்து ஒரு கட்டாகக் கட்டியிருந்தார்கள். அப்படிக் கட்டப்பட்ட கயிற்றினுடைய எடை, தண்ணீருள்ள வாளியினுடைய எடையைவிட அதிகமாக இருந்ததால், விடப்பட்ட இடத்தில் வாளி அப்படியே நின்றது!

—காரைக்குடியில் ஒரு திருமண வரவேற்பு நிகழ்ச்சியில் புலவர் தெட்சிணாமூர்த்தி கூறிய கதை.

கேட்டவர்: சிவகங்கை அ. ரமணி

# என்னைத் தவிர

## 9

தன் ஆட்களுக்குப் பாங்கில் கடன் வாங்கித் தர மனோஜ்தான் முட்டுக் கட்டை போடுகிறான் என்று பழனிமுத்து ஏற்கெனவே கொதித்துக் கொண்டிருந்தார்.

அதை மேலும் சூடேற்றுகிற மாதிரி ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

பிறந்தது முதலே பழனிமுத்து யாருடனாவது போட்டியிட்டு வந்திருக்கிறார் என்றால் அது அவருடைய அண்ணன் சொர்ணமுத்துவுடன்தான்.

வீட்டுக்கு வருகிற விருந்தாளி அண்ணனுக்கு ஒரு சாக்லேட் அதிகமாகக் கொடுத்துவிட்டால் இவருக்குப் பொறுக்காது. இரண்டு பேருக்கும் ஒரேவிதமான சட்டைதான் வாங்கித் தந்திருப்பார்கள். ஆனால் அண்ணன் போட்டிருக்கிற சட்டை அழகாக இருக்கிறது என்று யாராவது சொல்லிவிட்டால் அன்று முழுதும் பழனிமுத்து பச்சைத் தண்ணீர்கூடக் குடிக்காமல் மூலையில் படுத்துவிடுவார் கோபமாக. நாலாவது வகுப்பு வரை சொர்ணமுத்து ஒரு கிளாஸ் கூடவே படித்து வந்ததைத் தம்பியால் எதுவும் செய்ய முடியவில்லை. நாலாம் வகுப்பில் அண்ணன் தோல்வி அடைந்தார். அண்ணனும் தம்பியும் ஒரே வகுப்பில் படிக்க நேரிட்டது. அப்போது பழனிமுத்து அடைந்த ஆனந்தத்துக்கு அளவில்லை.

வட ஆற்காடு, தென்னாற்காடு மாவட்டங்களில் விவசாயிகளுக்குப் பம்ப் செட் விற்பனை செய்ய ஏஜென்ஸி எடுத்திருந்தார் பழனிமுத்துவின் அப்பா. இரண்டு பிள்ளைகளும் தன் வியாபாரத்தை அபிவிருத்தி செய்ய உதவப் போகிறார்கள் என்று நம்பியிருந்தார். மூத்த மகன் மட்டும்தான் அவர் நம்பிக்கையைக் காப்பாற்றினான். பழனிமுத்துவுக்கு, அண்ணனுக்குக் கிடைக்கும் நல்ல பெயரைப் பார்த்துப் பொருமவே நேரம் சரியாக இருந்தது.

ஒரு முறை, பம்ப் செட் வாங்கியிருந்த ஒரு சில்லறை வியாபாரியிடமிருந்து மூவாயிரம் ரூபாய் பாக்கி வரவேண்டியிருந்தது. பழனிமுத்துவை அவரிடம் அனுப்பினார் தந்தை.

முரட்டுத்தனமாக அந்த வியாபாரியிடம் மோதத்தான் தெரிந்தது பழனிமுத்துவுக்கு. ''பைசாகூடத் தர முடியாதய்யா! உன்னால் ஆனதைப் பார்த்துக்க!'' என்று சொல்லியனுப்பிவிட்டார் அவர்.

அப்பாக்காரர் அடுத்து, மூத்தவனை அனுப்பினார். எவ்வளவு பக்குவமாகப் பேச முடியுமோ அவ்வளவு பக்குவமாகப் பேசி, பாதிப் பணத்தை வாங்கிக் கொண்டு வந்துவிட்டார் சொர்ணமுத்து. இன்னொரு பாதிக்கு ஒரு புரோநோட்டும் எழுதி வாங்கிவந்தார்.

மூத்த மகனைக் கட்டியணைத்துக் கொண்டு நின்றிருக்கலாம் தந்தை. ''நீயும் இருக்கிறாயேடா, பழனி! உன் அண்ணன் சாமர்த்தியத்தைப் பார்த்தியா?'' என்றும் சொல்லிவிட்டார்.

''அண்ணனையே கட்டிக்கிட்டு அழுங்க!'' என்று சொல்லிவிட்டு அன்றைக்கே சென்னைக்கு வந்து சேர்ந்துவிட்டார் பழனிமுத்து. காண்டிராக்ட் என்றும் கமிஷன் வியாபாரம் என்றும் ஏதோ பெயர்கள் வைத்துக் கொண்டிருந்தாரே தவிர, ஒரு ரௌடிப் பட்டாளத்தின் தலைவர் என்பதுதான் அவருடைய முக்கியமான புகழ்.

அண்ணன் சொர்ணமுத்துவும் கொஞ்ச நாளில் சென்னைக்குக் குடியேறிவிட்டார். அவருக்கும் தம்பியைப் போலத்தான் பெயர், புகழ் எல்லாம். பழனிமுத்துவின் பட்டாளம் முரட்டுத்தனமாகச் செயலாற்றும். சொர்ணமுத்துவின் ஆட்கள் சத்தம் போடாமல் வேலை செய்வார்கள்.

கிருஷ்ணகுமார்

வாய் பொத்தப்படும்
நட்சத்திரம்
சுஹாசினி

எட்டு வயதில் ஆரம்பித்த
ாட்டியைப் பழனிமுத்து இன்னும் விட
ல்லே.

அதிர்ஷ்டம் அவர் பக்கமில்லே.
ண்ணனுடைய பதவிகளேயோ, ஆள்கட்
டயோ குறைக்க வேண்டுமென்று அவர்
பற்சி செய்யும் ஒவ்வொரு முறையும்
க்கை உடைத்துக் கொள்வதுதான் மிச்ச
க இருந்தது.

எல்லாவற்றையும் விடப் பெரிய
வமானம் அன்று நிகழ்ந்தது.

அவருடைய மூன்ருவது மகள்
துக்கு வந்திருந்தாள். அதையொட்டிக்
ாலாகலமான ஏற்பாடுகள் நடை
ற்றுக் கொண்டிருந்தன. உறவினர்கள்
ட்டமும் தோழர்கள் கும்பலும் வீட்டின்
ன்னறையைத் திணற அடித்துக் கொண்
ந்ததைப் பார்த்துப் பழனிமுத்துவுக்குக்
ாஞ்சத்துக்குக் கொஞ்சம் ஆறுதலேற்
ட்டது. அண்ணன் சொர்ணமுத்துக்கு
ன்று குழந்தைகள். மூன்றும் ஆண்
ந்தைகள். இந்த மாதிரி ஒரு மஞ்சள்
ாட்டு விழா அவருடைய வீட்டில் நடை
ற வாய்ப்புக் கிடையாது என்று எண்ணி
ற்ப சந்தோஷமடைந்தவராக, ''வாங்க,
காருங்க....'' என்று எல்லோரையும்
ர வேற்றுக் கொண்டிருந்தார்.
அண்ணே, ஏதாவது சாப்பிடறீங்களா?''
ன்று சொர்ணமுத்துவிடம் வெகு பணி
க விசாரித்தார்.

''இந்தக் கலரெல்லாம் நமக்கு
துக்காது, தம்பி. நல்லதா ஒரு
பென்ஸர் சோடா வாங்கிட்டு வரச்
ால்லு,'' என்ருர் அண்ணன்.

''டேய் வேதாசலம்!'' என்று
ல் கொடுத்த பழனிமுத்து சட்டென்று
 விஷயம் ஞாபகம் வந்தவராக நின்ருர்.

வேதாசலத்தைக் காலேயிலிருந்து
ணவில்லே. இவ்வளவு பெரிய வைபவம்
ப்பது தெரிந்திருந்தும் அவருடைய
ளான வேதாசலம் எங்கே போனுன்?

யோசித்தவர், மேலும்
டுக்கிட்டார்.

வேதாசலம் மட்டுமில்லே, கிஷ்டன், நடேசு ஆகியோரையும் காண வில்லே. காலேயிலிருந்து அவர்கள் தலே தென்படவே இல்லே. வீட்டிலிருந்த பரபரப்பில் அதை அவர் கவனிக்கத் தவறி விட்டார்.

''ஏம்பபா, வேதாசலம், கிஷ்டன், நடேசு மூணு பேரையும் காணுேமே? எங்கே போயிட்டாங்க? ஊரிலே இல்லேயா?'' என்று இன்னெரு ஆளிடம் கேட்டார்.

''ஊரிலே தான் இருக்காங்க, தம்பி,'' என்று அண்ணன் சொர்ணமுத்து குறுக்கிட்டுப் பதிலளித்தார். ''ஆனுல் மூணு பசங்களும் இங்கே வர மாட்டாங்க.''

பழனிமுத்து திடுக்கிட்டார். ''ஏன்.... ஏன் வரமாட்டாங்க?''

''என்னவோ பயந்துகிட்டு வராமல் இருக்காங்க,'' என்ருர் சொர்ணமுத்து ஒரு மர்மப் புன்னகையுடன்.

''பயமா? என்கிட்டே என்ன பயம்?'' பழனிமுத்துவின் திகைப்பு அதிகமாயிற்று.

''அதென்னவோ.... நான் எவ்வளவோ சொன்னேன். பசங்க கேட்கலே.''

''விளக்கமாய்த்தான் சொல்லுங்களேன் அண்ணே?''

''இப்ப எதுக்கு அதெல்லாம்? உன் தலேக்கு மேலே ஆயிரம் வேலே இருக்குது. முதல்லே அதைக் கவனி.''

''இல்லேண்ணே. விசயத்தைச் சொல்லுங்க.''



அட்டையில்: ரம்யா கிருஷ்ணன்
வண்ணப் படம்: பிரவீண்குமார்



## அந்த ஒரு கவர்ச்சியான தோற்றம்

உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் பலவித
டிசைன்கள், பற்பல வண்ணங்கள் கொண்ட
மெல்மோவேரின் மெலமைன் க்ராக்கரி உங்கள்
இல்லத்துக்கு ஒரு கவரும் தோற்றத்தைத் தருகிறது.
கம்பீரமானது, சௌகரியமானது இருந்தும்
சிக்கனமானது. மெல்மோவேரின் க்ராக்கரி
சிறுய்வதில்லை, உடைவதில்லை.
இல்லத்தரசிகள் இன்பமுடன் போற்றக்கூடியது.

# மெல்மோவேர்

## மெலமைன் க்ராக்கரி



ரட்டன்சந்த் ஹர்ஜஸ்ராய் (மோல்டிங்ஸ்) பிரை. லிட்.
54, இண்டஸ்ட்ரியல் ஏரியா, ஃபரிதாபாத் (இந்தியா)

**மெல்மோவேர்**

*டின்னர்வேரின் நேர்த்தி நயம்*

RH வாங்குமுன் தரத்தின் முத்திரையைப் பார்த்து வாங்குங்கள்.

National-375-TAM.




எச்எம்டி குவார்ட்ஸின் தொழில் நுணுக்கத்தைப் பற்றி இன்னும் அதிகமாக அறிய விரும்பினுல் இலவச கைப்பிரதிக்கு நீங்கள் எழுதவேண்டிய முகவரி: புரமோஷன் டிபார்ட்மென்ட், எச்எம்டி வாட்ச் மார்க்கெட்டிங் டிவிஷன், பசப்பா காம்ப்ளக்ஸ், 40 1A லெவல்லி ரோடு, பெங்களூர்-560001

''அது வந்து.... நீ அவர்களுக்குப் பாங்க்கிலே ஏதோ கடன் வாங்கித் தர்றதா சொல்லியிருந்தியாமே?''

''ஆமாம்.''

''அது சம்பந்தமாய்த்தான். சரி நீ போய் வேலையைப் பார். அப்பாலே பேசிக்கலாம்.''

''வேலை கிடக்குது. நீங்க சொல்லுங்க.''

''அந்தப் பசங்க என்னண்டை வந்தாங்க. பாங்க்கிலே கடன் வாங்கித் தர உன்னாலே முடியலேன்னுங்க. 'அதனாலே என்னப்பா? நான் வாங்கித் தரேன்'னு சொல்லி, எனக்குத் தெரிஞ்ச இன்னொரு பாங்க்கிலே வாங்கித் தந்தேன்.''

பழனிமுத்துவுக்கு ஆத்திரத்தில் பேச்சு வராததை ரசித்தபடி சொர்ண முத்து தொடர்ந்தார். ''நீ என்ன சொல்லு வியோ ஏதோன்னு பயந்துகிட்டு என் மண்டியிலேயே உட்கார்ந்திருக்கிறுங்க. நான் எவ்வளவோ சொன்னேன், 'நான் வாங்கித் தந்தாலென்ன, என் தம்பி வாங்கித் தந்தாலென்ன? அவன் ஒண்ணும் சொல்ல மாட்டாம்ப்பா,' என்று சொன் னேன்...''

பழனிமுத்து பொடிப் பொடி யாகிக் கொண்டிருந்தார்.

வந்தவர்களில் ஒருவர் ''அதாவது, தம்பியாலே முடியாததை அண்ணன் செய்திட்டார்!'' என்று நீட்டி முழக்கிச் சொல்ல, கூடியிருந்த அத்தனை பேரும் 'ஹாஹா!' என்று அட்டகாசமாய்ச் சிரித்தார்கள்.

அவசர வேலை இருப்பது போலப் பழனிமுத்து அந்த இடத்தை விட்டு வேக மாக நகர்ந்தார். அவருடைய ரத்தம் கொதித்துக் கொண்டிருந்தது.

இவ்வளவு பேருக்கு நடுவே இவ்வளவு பேர் சிரிக்கும்படியாக, அவர் மானம் போய்விட்டது! இதற்கெல்லாம் அந்தப் பாங்க் ஆபீசர் மனேஜ்தான் காரணம்!

மனத்தில் லேசுபாசாக எழுந் திருந்த யோசனை இன்று விசுவரூபமெடுத் தது.

சடகோபனின் வீட்டு வாசற் புறத்தில் ஒரு சிறிய ஸிட்டவுட் இருந்தது. அங்கே மூன்று பிரம்பு நாற்காலிகளைப் போட்டு வைத்திருந்தார்கள், சடகோ பனைப் பார்ப்பதற்காக வருகிறவர்கள் உட்காருவதற்காக. ஆனால் பெரும்பாலும் மனேஜ்தான் வாசிக்க விட்டுப்பான பழைய பத்திரிகைகளையெல்லாம் எடுத்துப் பக்கத்து நாற்காலியில் போட்டுக் கொண்டு அங்கே உட்கார்ந்திருப்பான். அந்தச் சமயங்களில் சுபாவும் அவனுக் கெதிரில் இன்னொரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்த

# கோதண்டராமனுக்கு என்ன அதிர்ச்சி

எஸ்.டி. சோமசுந்தரம் எம்.ஜி.ஆரை விட்டு விலகிய பிறகு இரண்டு புதிய அமைச்சர்கள் நிய மிக்கப்பட்டார்கள் அல்லவா? அந்தச் சம யத்தில் அதிர்ச்சிக்கு உள்ளானவர்களில் முக்கிய மானவர் கோதண்டராமன் எம்.எல்.ஏ.தான்.

தலைவர் தன்னை எப்படியும் ஓர் அமைச்சராகத் தேர்ந் தெடுப்பார் என்று அந்த ராமர் மிகவும் நம் பிக்கையோடு இருந்தார். எம்.ஜி.ஆரும் சமயம் வரும் போது உன்னை மந்திரி யாக்குகிறேன் என்று சொல்லியிருந்தாராம். ஆகவே தன் பெயர் நியமனப் பட்டியலில் இல்லை என்று தெரிந்த போது ரொம்பவும் ஏமாந்து போனுராம் அவர்.

அவருடைய தொகுதியி லிருந்தும் திருச்சியிலிருந்தும் ஏராளமான அண்ணு



தி.மு.க. தொண்டர்கள், எம்.ஜி.ஆர். ரசிகர் மன்ற உறுப்பினர்கள் பெருங் கூட்டமாக சென்னைக்கு வந்து விட்டார்கள்.

பலன் இல்லை. வேறு சில பேர்களுக்குச் செய்வது போல, எம்.ஜி.ஆர். தன் விஷயத்திலும் இப்படிக் கையை விரித்து விட்டாரே என்று வருத்தப்பட்டுக் கொண்டாராம்.

ஊரிலிருந்து வந்த தொண்டர்களைச் சமாதானப்படுத்தி அனுப்ப வைப்பதற்குள் படாத பாடு பட்டுப் போனுராம்.



''பக்கத்து சீட்லதானே ராமசேஷன் இருக்கான். காப்பி சாப்பிடப் போகும்போது அவனைக் கூப்பிடாமல் போயிட்டியே?''

''கூப்பிட்டால் வந்துவிடுவானே!''

அவனை வம்புக்கு இழுத்துக் கொண்டிருப்பாள். ''ஏய், ரொம்ப வாராதேடி அவனை. பாவம். பாங்க் ஆபீசர்!'' என்று சடகோபன் இடையிடையே கண்டிப்பார்.

அன்றும் அப்படித்தான் சுபா அவனுக்கு எதிரில் இருந்தாள். ஆனால் காலையிலிருந்து கடும் தலைவலி என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தாள்.

''மாமியை வெளிப்படையாகக் கேளேன், இன்னொரு காப்பி வேணும் என்று? தலைவலி திருகுவலின்னு சாக்கு என்ன?'' என்று மனோஜ் கிண்டல் செய்து கொண்டிருந்தான்.

பக்கத்து வீட்டுச் சிறுமி கையில் ஒரு காகித ஊதலுடன் ஓடிவந்தாள். ''ஆன்ட்டி, ஆன்ட்டி! இது ஊதவே மாட்டேங்குது. சரிபண்ணிக் கொடுங்க ஆன்ட்டி,'' என்று சுபாவிடம் நீட்டினாள்.

''என்னைத் தொந்தரவு பண்ணாதே, சோட்டு. அங்க்கிள்கிட்டே காட்டு,'' என்றாள் சுபா.

''அங்கிள், அங்க்கிள்....''

''ஆன்ட்டி இல்லேன்னா இந்த ஆண்டியா?'' என்றவன் ஊதலை வாங்கி அதன் வாயைச் சரிப்படுத்தினான். நன்றாய் ஊதிற்று. கைதட்டிக் குதித்து, தானும் அதை ஊதிப் பார்த்தாள் சோட்டு. ஊதவில்லை. திரும்ப அவன் சரி செய்து கொடுத்தான். திரும்பவும் மக்கர். அவன் ஊதும் போது சரியாயும் அந்தக் குழந்தை ஊதும் போது தகராறும் இருந்ததை எப்படிச் சரிபண்ணுவது என்று யோசித்த வண்ணம் தற்செயலாகத் தலை நிமிர்ந்து தெருவைப் பார்த்தான்.

தெருக் கோடியிலிருந்து வந்து கொண்டிருந்த ஓர் ஆட்டோ ரிக்ஷா அவன் வீட்டு வாசலை அடைந்த போது கர்புர்ரென்ற ஓசையுடன் தயங்கியது. மக்கர் பண்ணும் இஞ்சினை டிரைவர் சரி செய்தான்.

இரண்டு நிமிடம் தான் இருக்கும். போய்விட்டது.

மனோஜ் திடுக்கிட்டான்.

ஆட்டோவில் உண்மையில் மக்கர் இல்லை.

அந்த இரண்டு நிமிடமும், ஆட்டோவுக்குள் இருந்த இரண்டு பேர் தங்கள் வீட்டையே பார்த்துக் கொண்டிருந்ததுதான் காரணம். குறிப்பாக, சுபாவைச் சுட்டிக் காட்டித் தங்களுக்குள் பேசிக் கொள்வது போல் தோன்றியது.

யார் அந்த இரண்டு பேர்?

அவனுக்குச் சரியாய் நினைவு வரவில்லை. ஆனால் அவர்களைப் பழனிமுத்துவுடன் பார்த்திருக்கிற மாதிரி இருந்தது.

அவர்கள் ஏன் இந்த வழியாய்ப் போக வேண்டும்? எதற்காக சுபாவைச் சுட்டிக் காட்டிப் பேச வேண்டும்?

இனம் தெரியாத பயமொன்று அவனைக் கலங்க வைத்தது.

அந்தப் பயம் அடுத்த வாரம் நிஜமாயிற்று.

அன்று அவன் பாங்க்கிலிருந்து வீடு திரும்பியபோது சடகோபன், கோமளம், சுபா மூன்று பேரும் கதவைப் பூட்டிக் கொண்டு வெளியே புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

''நல்ல சமயத்துக்கு வந்தாய். நீயும் வா,'' என்றார் சடகோபன்.

''எங்கே மாமா?''

''அவன் சோம்பேறி! வர மாட்டான்,'' என்று சீண்டினாள் சுபா.

''என் ஆபீசுக்குத் தான் போறோம். ஆபீசிலேயும் பாக்டரியிலேயும் வேலை பார்க்கிறவர்களுக்கு இரண்டு மாச சம்பளம் போனஸாகத் தருகிறேன். அதுக்காக ஒரு சின்ன ஃபங்க்ஷன். விழாத் தலைவர், எல்லாரும் குடும்பத்தோடு வந்தால்தான் தலைமை தாங்க ஒப்புக்கொள்வேன்னு சொன்னார். சரின்னேன். அது தான் புறப்பட்டுக்கிட்டிருக்கோம். நீயும் வா.''

''டிரெஸ் மாத்திக்கணும்னா போயிட்டு வா. நாங்க காத்திருக்கிறோம்,'' என்று கோமளமும் அழைத்தாள்.

''ஸாரி மாமா. நீங்க போயிட்டு வாங்க. நாங்க பாங்க்கிலே பத்துப் பேர் சேர்ந்து சினிமாவுக்குப் போகத் தீர்


தீபாவளிப் பரிசு!
ஹேண்ட்லூம் ஹவுஸ் வழங்கும்
20%
சிறப்புத் தள்ளுபடி
1-10-84 முதல் 22-10-84 வரை
எல்லா ரகங்களுக்கும் உண்டு.
பிரிண்டட் பட்டு, ஆர்கென்ஸா
புடவைகள் மற்றும் குறிப்பிட்ட
ரகங்களுக்கு மேலும்
20%
சிறப்புத்
தள்ளுபடி
உண்டு.
ஹேண்ட்லூம் ஹவுஸ்
7, ரத்தன் பஜார், சென்னை 600 003
கோயம்புத்தூர்:
512, திவான் பகதூர் ரோடு,
R.S. புரம், கோயம்புத்தூர் 641 002
திருச்சி:
"சுமங்கலி"
பட்டு கூட்டுறவு சூபர் மார்க்கெட்,
464, பெரிய கடை வீதி, திருச்சி 620 006
ஞாயிறு மற்றும் விடுமுறை தினங்களிலும் திறந்திருக்கும்.

மானிச்சு, ரிசர்வேஷனும் பண்ணிட்டோம்,'' என்றான்.

''நான் சொல்லலே?'' என்றாள் சுபா.

சடகோபன் அதிகம் வற்புறுத்தவில்லை.

''சரி, உன்னிடமும் ஒரு சாவி இருக்கு, இல்லே? பூட்டிக் கொண்டு போ,'' என்று கூறிவிட்டுப் புறப்பட்டு விட்டார்.

கொஞ்ச நேரத்தில் முகம் கழுவி, உடை மாற்றிக் கொண்டு மனோஜும் கிளம்பினான்.

பின்புறமெல்லொம் சரியாய்ப் பூட்டியிருக்கிறதா என்று பார்த்துவிட்டுத் திரும்பியபோது, டைனிங் டேபிளின் மீது ஓர் அழைப்பிதழ் கிடப்பது தெரிந்தது.

சடகோபனின் போனஸ் வழங்கு விழா அழைப்பிதழ்.

அலட்சியமாய்ப் பார்த்துவிட்டுத் திரும்ப வைத்தவன், திடீரென்று ஏதோ தோன்றவே மறுபடி பார்த்தான்.

'தலைவர் பழனிமுத்து.'

அவனுக்கு வயிற்றில் ஏதோ சங்கடம் பிறந்தது.

'குடும்பத்தோடு எல்லோரும் வரவேண்டும்' என்று தலைவர் வற்புறுத்தியது..... சுபாவும் போயிருப்பது... அன்று ஆட்டோ வந்தது...

அவசர அவசரமாக வீட்டைப் பூட்டிக் கொண்டு புறப்பட்டு, தியேட்டரை அடைந்து, தான் படம் பார்க்க வருவதற்கில்லை என்று நண்பர்களுக்குத் தெரிவித்துவிட்டு, சடகோபனின் அலுவலகத்தை அடைந்து, ஏன் எல்லா இடங்களும் ஒரே இருளாக இருக்கிறது என்று யோசித்துக் கொண்டே நாலு படிக்கு ஒரு காலாகத் தாவி, மாடியை அடைந்தபோது—

அங்கே அமளியாக இருந்தது. இருட்டில் பல பேர் இங்குமங்கும் ஓடி ஒருவர் மீதொருவர் இடித்துக் கொண்டிருந்தார்கள்.

'விளக்கு!' 'மெயினைப் பார்!' 'யார்கிட்டேயாவது டார்ச் இருக்கிறதா?' என்று பல குரல்கள் கேட்டன.

''சுபா! நீ எங்கே இருக்கிறாய்? ஆர் யூ ஆல்ரைட்?'' என்று மனோஜ் கூவினான்.

[தொடரும்]



# சொன்னார்க

எதிர்க் கட்சித் தலைவர்கள் இப்போது விவேகம் பெற்று விட்டார்கள். முன்பு செய்த தவறை மீண்டும் செய்ய மாட்டார்கள்.

—வாஜ்பாய்

எம்.ஜி.ஆரின் அமைச்சரவையில் உள்ள எந்த மந்திரிக்கும் என் கட்சியில் சேரத் தகுதியில்லை.

—எஸ்.டி.எஸ்.

கேரளத்தில் இ. காங்கிரஸ் தலைமையிலான அரசில் பங்கு வகிக்கிறோம். தமிழகத்தில் தி.மு.க.வுடன் உறவு உள்ளது. அந்த உறவு நீடிக்கும்.

—சுலைமான் சேட்

இதர எதிர்க் கட்சிகளிலிருந்து விலகுபவர்களை எனது கட்சியில் சேர்த்துக்கொள்வது நியாயமே. ஏனெனில் அவர்கள் முதலில் எனது கட்சியில் இருந்தவர்கள்தான்.

—சரண் சிங்

அண்ணாவுக்கு இணையான தலைவர் யாரும் கிடையாது என்று எஸ்.டி.எஸ். சொன்னதை எம்.ஜி.ஆரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. 'நான் இல்லையா? எப்படி அப்படிக் கூறலாம்?' என்று எஸ்.டி.எஸ்ஸை வெளியேற்றி விட்டார்.

—கருணாநிதி

இலங்கைத் தமிழர்கள் போர்க் களத்தில் ஈடுபட்டுக்கொண்டு இருக்கிறார்கள். ஆனால் இங்கு இருக்கிற தமிழர்கள் சினிமாக் கொட்டகைகளில் சினிமா பார்த்துக் கொண்டு இருக்கிறோம்.

—மதுரை ஆதீனம்

பிரதமர் பதவியை அடைய வேண்டும் என்ற ஆசை எனக்கு இல்லை. இருந்தாலும் எதிர்க் கட்சிகள் வெற்றியடைந்தால் பிரதமர் பதவிக்கு என்னைவிடத் தகுதியானவர் வேறு யார் இருக்கிறார்கள்?

—சரண் சிங்

# வாய்ச் சொல்லில்

## வீரனடி

விசுவுக்கு எப்போது தேவராகும் ஆசை ஏற்பட்டது? ஆரம்பத்தில் பாம்பு, நடுவில் பாம்பு, முடிவில் பாம்பு, நெடுகிலும் பாம்பு.

பிரசினை: நாத்திகரான கணவன் பூஜைக்குரிய பாம்புகளில் ஒன்றை அடித்துக் கொன்றுவிட்டதாக மூன்று வருடம் அவனுடன் உடலுறவு கொள்வதில்லை என்று ரகசியமாக விரதம் எடுத்துக் கொள்கிறாள் ஓர் இளம் மனைவி. அதைப் புரிந்துகொள்ளாத கணவன் விவாகரத்து கோர, நல்லவர்களும் நல்ல பாம்பும் சேர்ந்து இணைத்து வைக்கிறார்கள்.

புதுமுக ஜோடி தேவலாம். மனோதத்துவ டாக்டரான இளைஞருக்கு அளவாக உணர்ச்சிகளைக் காட்டத் தெரிகிறது. ஆனால் அந்த மாயாஜால வர்ணச் சுழல்களை நிஜமாகவே யாராவது உபயோகிக்கிறார்களா என்ன?

வசன விசுவிடம் வழக்கமான குதர்க்கம் கொஞ்சம் கம்மியோ என்று தோன்றினாலும் நடிகர் விசு வழக்கம் போல அட்டகாசம். இருபத்தைந்து வருடத்துக்கு முன் தன்னை முறியடித்த வக்கீலைத் தன் மைத்துனன் மூலமாகவாவது ஜெயிக்க வேண்டும் என்று ஜனகராஜை அவர் தயார் செய்யும் அழகும்; மனைவி மனோரமா தம்பிக்கு உபதேசம் செய்து எதிரி வக்கீலிடம் அவன் ஜூனியராகச் சேரும்படி செய்தவுடன் கொதிப்புடன் தடுப்பைத் தள்ளி மனைவியைப் பிரித்து வைக்கும் மிடுக்கும்; கடைசிக் காட்சியில் என்னவோ இருபது வருடத்துச் சினேகிதனிடம் பேசுகிற மாதிரி பாம்பிடம் பேசுகிற சரளமும்—எல்லாமே ஜோர்.

விசு எட்டடி என்றால் கிராமத்து மிராசு கிஷ்மு பதினாறடி. வெகு தோரணை.

ஊருக்கு ஒரேயடியாகக் கூட்டிப் போய்விட வேண்டிய அளவுக்குப் பெண் என்ன தப்பு செய்தாள் என்பதைத் தெரிந்து கொள்ள அவர் துடிப்பதைக் குறிப்பிட வேண்டும்.

மகேந்திரனும் வனிதாவும்



# என்னைத் தவிர...



**10**

மனேஜ் உள்ளே நுழைந்த போது, அந்தப் பெரிய ஹால் இருட்டில் மூழ்கியிருக்க, அமளிக் கூச்சல்கள் கட்டிடத்தை இரண்டாக்கின.

மேஜைகளும் நாற்காலிகளும் பெஞ்சுகளும் வேண்டுமென்றே தள்ளப்படுகின்றனவா? அல்லது ஒருவர் மீதொருவர் இடிப்பதால் தாங்களாகவே சரிகின்றனவா? தடதடவென்று அவை விழும் ஓசையும், ''யாரய்யா அது? ஏன் இப்படி இடிக்கிறே?'' என்ற பெரியவர்களின் சீறல்களும், பெரியவர்கள் அழைத்து வந்திருந்த குழந்தைகள் பயந்து போய் வீறிடும் அலறல்களும் அந்த இருட்டின் குழப்பத்தைப் பன்மடங்கு அதிகரித்தன.

**கிருஷ்ணகுமார்**




அட்டையில்: குமாரி ஷோபனு
வண்ணப்படம்:
சரஸ்வதி சத்தியமூர்த்தி

''சுபா! நீ எங்கே இருக்கிறுய்? பத்திரமாய் இருக்கிறுயா?'' என்று மறுபடியும் கூவினுன் மனேஜ்.

''அயோக்கிய ராஸ்கல்கள்! வேணும்னு இங்கே புகுந்து கலாட்டா பண்றுங்க!'' என்று அவனுக்குச் சமீபத்தில் ஒரு கரகரப்பான குரல் கேட்டது.

அது பழனிமுத்துவின் குரல் என்பதைக் கண்டுகொண்ட மனேஜ், ''ஐயா, சுபாவைப் பார்த்தீர்களா? சடகோபனின் டாட்டர்,'' என்றுன்.

''யாரு பேசறீங்கன்னே தெரியலியே?'' என்றுர் பழனிமுத்து. ''நல்லா பத்திரமா இருப்பாங்க. டோண்ட் ஒர்ரி. யாரோ ரௌடிப் பசங்க மெயினே அணைச்சுக் கலாட்டா பண்றுங்க.''

அவர் சொல்லிக் கொண்டிருந்த போதே, ''மெயின்தான் ஆஃப்பாகியிருந்திச்சு!'' என்றுர் ஒருவர். விளக்கு வந்துவிட்டது. கூட்டத்தில் மொத்தம் சுமார் முன்னூறு பேர் இருப்பார்கள். அவரவர் முகத்தையும் கழுத்துப் பட்டையையும் துடைத்துக் கொண்டு, கவிழ்ந்து விழுந்திருந்த பெஞ்சுகளையும் நாற்காலிகளையும் நிமிர்த்தி வைத்துவிட்டு, ஒன்றுமில்லாததற்கு இவ்வளவு பதட்டப்பட்டுவிட்டோமே என்று அசட்டுச் சிரிப்புச் சிரித்தார்கள்.

மேடைக்கருகே நின்றிருந்தார்கள் சடகோபனும் கோமளமும்.

சுபா எங்கே?

கூட்டத்தை விலக்கிக் கொண்டு மனேஜ் அவர்களிடம் ஓடினுன். ''மாமா, சுபா எங்கே?''

கூட்டம் ஆரம்பிக்கும் போது இப்படியொரு கலாட்டா நிகழ்ந்துவிட்டதே என்ற கவலையில் இருந்த சடகோபன், பளீரென்று விளக்கு வந்ததில் மகிழ்ச்சியடைந்து நிகழ்ச்சிகளை ஆரம்பிப்பதில் குறியாயிருந்தார். ஆகவே மனேஜின் கவலையைப் பொருட்படுத்தவில்லை. ''இங்கேதான் எங்கேயாவது போயிருப்பாள். மெயினைக் கவனிப்பதற்காகக் கீழே போனுளோ என்னவோ,'' என்று கூறிவிட்டு, பழனிமுத்துவிடம், ''ஆரம்பிக்கலாமா?'' என்றுர். அவர்கள் மேடைக்குப் போனுர்கள்.

சுபாவைத் தேடி மனேஜின் கண்கள் பரபரத்தன.

முதலில் பதற்றம் காரணமாகச் சரியாய்க் கவனித்திருக்க மாட்டோம் என்றெண்ணி, இப்போது வரிசை வரிசையாக, தலை தலையாக ஆராய்ந்தான்.

இல்லை. சுபா இங்கே இல்லை.

எங்கேதான் போயிருப்பாள்? மாடியிலிருந்து தடதடவென்று கீழே இறங்கி வந்தான். தெருவைச் சுற்றிச் சுற்றி வந்தான்.

ஒருவேளை தலை கிலை வலிக்கிறதென்று கோமளத்திடம் சொல்லிக் கொண்டு வீட்டுக்குப் போயிருப்பாளோ? மாமியைக் கேட்காமல் இருந்து விட்டோமே?

திரும்ப மாடிக்கு வந்தான். விழா நிகழ்ச்சிகள் மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. கூட்டத்தை நீந்திக் கொண்டு முன்னே செல்ல முடியவில்லை.

காத்திருந்தான். காத்திருந்த ஒவ்வொரு வினுடியும் பீதி அவன் நெஞ்சை அடைத்தது.

ஒரு வழியாய் நிகழ்ச்சிகள் முடிந்ததும், முண்டியடித்துக் கொண்டு சடகோபனிடம் முன்னேறி, அவரைத் தனியே அழைத்து, ''மாமா! சுபாவை எங்குமே காணலியே? வீட்டுக்குப் போயிட்டாளா?'' என்று அவருக்கு மட்டுமே கேட்கும்படி காதருகே கேட்டான்.

அப்படியும் கோமளத்துக்கு அது கேட்டுவிட்டது. ''என்னது! சுபாவைக் காணுேமா?'' என்று மளமளவென்று

கண்ணீர் பெருக அழ ஆரம்பித்து விட்டாள்.

''உஷ்! மனோஜ்! என்ன நீ உளறு கிறே? என்னோடுதானே வந்தாள்? இங்கேதானே இருந்தாள்? சரி, எதுவானு லும் இப்ப யாருக்கும் தெரிய வேண்டாம். வந்திருக்கிற பெரிய மனிதர்களுக்கு என்னவோ போலாகிவிடும். இதோ ஐந்து நிமிஷத்தில் இவர்களை அனுப்பிவிட்டு வந்துவிடுகிறேன்,'' என்றார் சடகோபன்.

அதற்குள் ஒரு பையன் அவர்களிடம் வந்து, ''சுபாம்மா வீட்டுக்குப் போறதா சொல்லச் சொன்னாங்க,'' என்று கூறிவிட்டுக் கூட்டத்தில் மறைந்து விட்டான்.

''பார்த்தியா?'' என்றார் சடகோபன்.

மனோஜ் அந்தப் பையனைத் தேடினான். எங்கும் காணோம்.

பழனிமுத்து வெகு பணிவோடு அவர்களை நெருங்கி, ''வருகிறேன் சார். வர்றேம்மா. விழா ரொம்ப நல்லா நடந்தது. ஆரம்பத்திலேதான் ஒரு சின்னத் திருஷ்டி பரிகாரம்,'' என்று சிரித்தபடி சொல்லிவிட்டுப் புறப்பட்டார்.

எல்லாரையும் அனுப்பிவிட்டு, விழா நடந்த இடத்தை ஒழுங்கு செய்துவிட்டு அவர்கள் வீடு திரும்பிய போது மணி பன்னிரண்டைத் தொட்டு விட்டது.

''சீக்கிரம் போப்பா. வண்டியை வேகமாய் விடு,'' என்று சடகோபன் ஆட்டோ ரிக்ஷாக்காரரைத் துரிதப் படுத்திக் கொண்டிருந்தார்.

சுபா முன்னதாய் வீட்டுக்குப் போனதாக அந்தச் சிறுவன் சொன்னது உண்மைதானா? ஏன் போனாள்? எப்படிப் போனாள்? கேள்விகள் அந்த மூவரின் உள்ளங்களையும் குடைந்து கொண்டிருந்தன.

கோமளத்துக்கு வார்த்தைகள் குழறிக் குழறி வந்தன. ''உப்பிலியப்பா.... சீனிவாசா.... பெருமாளே.... என் குழந்தைக்கு ஒண்ணும் நேர்ந்திருக்கக் கூடாது. உடம்பு சரியில்லாத பொண்ணு. வீட்டிலே அவள் பத்திரமாய் இருக்கணும்....'' என்று திரும்பத் திரும்பச் சொல்வது மட்டும் கேட்டது.

சடகோபன் எரிச்சலும் வருத்தமுமாக, ''கொஞ்ச நாழி நீ புலம்பாமல் வர மாட்டியா?'' என்று மனைவியை அதட்டி

# காதில் விழுந்தது



தேனாம்பேட்டையில் தாடிக்கார எம்.எல்.ஏ. (இ. காங்கிரஸ்) ரொம்பவும் மகிழ்ச்சியாக இருந்தார். மராட்டிய வீரனின் பெயரைக் கொண்ட இ. காங்கிரஸ் பிரமுகரின் தீவிர ஆதரவாளர் அவர். அண்ணனுக்குப் பதவி கொடுக்காத வரையில் தாடியை அகற்ற மாட்டேன் என்று சபதம் செய்திருக்கிறார். முந்நூறு நாள் தாடி கொச கொசவென்று காடாக மண்டிப் போயிருந்தது.

டெல்லிக்குப் போய் மலை மீது உள்ள முருகன் கோவிலில் தாடியை எடுத்துவிடப் போகிறாராம்.

''உமது தலைவருக்குப் புதுப் பதவி கொடுத்து விட்டார்களா, என்ன? இப்போது அவரை இ. காங்கிரசின் கொ.ப.செ. ஆக்கியிருக்கிறார்கள். அவ்வளவுதானே?'' என்று கேட்டுவிட்டு, தாடிக்காரரிடம் வகையாய் மாட்டிக் கொண்டேன்.

கொ.ப.செ. என்று சொல்லக் கூடாதாம். அருவருப்பான பெயராம் அது. பிரசார அணித் தலைவர் என்று என்னை ஒரு தரம் சொல்லச் சொன்னார்.

'யார் எப்படி வேண்டுமானாலும் சொல்லிவிட்டுப் போகட்டும். ஆந்திர ராமரை வழிக்குக் கொண்டு வந்த வகையில் புரட்சித் தலைவருக்குத்தான் பெரிய வெற்றி' என்று எம்.ஜி.ஆர். கட்சி வட்டாரத்தில் இப்போதும் அடித்துப் பேசுகிறார்கள்.

திருஷ்டி பட்ட மாதிரி தலைவருக்கு உடல்நலம் இல்லாமல் போய் மருத்துவ மனையில் அனுமதிக்கும்படி ஆகிவிட்டதே என்று கவலைப்படுகிறார்கள் அவர்கள்.

ஆந்திராவில் 49 நாடாளுமன்றத் தொகுதிகள் உள்ளன. எல்லாத் தொகுதிகளிலும் ஆந்திர ராமரின் கை ஓங்கியிருக்குமென்றாலும் சுமார் 20 தொகுதிகளில் இ. காங்கிரசுக்கு வெற்றி ஏற்படும்படி பார்த்துக் கொள்வதாக ஏற்பாடாம்.

—ஒற்றைக் கண்ணாடி

ளுர். ''அந்தப் பையன்தான் சொன்ளு னில்லையா—வீட்டுக்குப் போறேன்னு சுபா சொல்லிட்டுப் போனதாய்? அப்புறம் என்னத்துக்கு அழுது கொண்டே இருக்கிறே?''

''ஆமாம், மாமி. சுபா இந்நேரம் நல்லா படுத்துத் தூங்கிப் போயிருப்பாள். கதவை நாம்ப பிளபிளன்னு பிளக்க வேண்டியிருக்கும். அப்பத்தான் தூக்கம் கலைஞ்சு எழுந்து வந்து கதவைத் திறப் பாள்,'' என்று மனோஜும் அவளுக்குத் தைரியம் சொன்னான். ஆனால் பேசும்போது தன் நாக்குப் படபடக்காமல் அடக்கி வைத்துக் கொள்ள ரொம்பச் சிரமப் பட்டான். தன் தேகம் நடுங்குவதைச் சடகோபன் அறிந்துவிடப் போகிறாரே என்று ஆட்டோவில் கூடுமானவரையில் நகர்ந்து ஒதுங்கிக் கொண்டான்.

கடந்த பத்து நாட்களாகத் தான் கொண்டிருந்த பயம் உண்மையாகி விட்டது என்று அவனுடைய உள்மனம் சொல்லிக் கொண்டது.

அப்படி இருக்காது அப்படி இருக் காது என்று தனக்குத் தானே தைரியம் சொல்லிக் கொண்ட போதிலும், தான் பயப்பட்டபடி நேர்ந்திருந்தால் என்ன செய்யப் போகிறோம் என்ற அடுத்த கட்டத் தைப் பற்றிச் சிந்திக்கவே அவன் மனம் அஞ்சியது.

ஆட்டோ அவர்கள் தெருவில் திரும்பி வேகத்தைக் குறைத்துக் கொண்டது. பிள்ளையார் கோவிலைத் தாண்டும் போது, ''பிள்ளையாரப்பா! என் குழந்தை உன்னைத்தான் எப்பவும் மனசில் நினைச்சு, உனக்குத் தான் விளக்கேற்றிப் பூஜை பண்ணுவாள். விநாயகரே, கணேசா, நீதான் அவளுக்கு ஒரு கெடுதலும் நேராமல் காப்பாத்தணும்,'' என்று கோமளம் வேண்டிக் கொண்டாள்.

ஆட்டோவிலிருந்து இறங் கியதுமே அவர்கள் இதயத்தில் துடிப்பு நின்றது.

மனத்திலிருந்த எள்ளத்தனை நம்பிக்கையும் அடியோடு நாசமாயிற்று.

முன்புற கேட் பூட்டப்பட்டிருந் தது.

கோமளம் வாய்விட்டே அழ ஆரம்பித்து விட்டாள்.

இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. விடை: 68'ம் பக்கம்



''கொலு முடிந்து இரண்டு வாரமாளுலும் பொம்மைகளை எடுக்க விடமாட்டேன்னு இப்படி அடம் பிடிக்குதுகளே!''



ஏன் பலபேர்கள்
இந்த பிராண்டு
போலவே
தயாரிக்க
விரும்புகிறார்கள்
LAKSHMI
WET GRINDERS
It's to-day's Top Seller
It's to-day's Talk of Housewives
It's 22 years of Glorious Service
It's only solution to eliminate imitation
– Buy from our Authorised Dealers
22 YEARS GLORIOUS SERVICE
Manufacturers & Exporters :
SRI LAKSHMI INDUSTRIES
25, Devanga High School Road
Coimbatore – 641 002 Phone: 31689

''பேசாமலிரு,'' என்று அவளை அடக்கிவிட்டுச் சடகோபன் காம்பவுண்டு கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே போனார்.

வீட்டுக்குள்ளிருந்த கதவிலும் பெரிய பூட்டு அப்படியே தொங்கிக் கொண்டிருந்தது.

''சுபா! எங்கேடிம்மா போனே? உனக்கு என்னடிம்மா ஆச்சு?'' என்று கோமளம் பிரலாபிக்க—

பூட்டின் வாயில் சாவியை நுழைக்க முடியாமல் சடகோபனின் கைகள் நடுங்க—

அவரிடமிருந்து சாவியைப் பறித்துத் தானே திறந்தான் மனோஜ்.

படக் படக்கென்று விளக்கின் ஸ்விட்சுகளை மூன்று பேருமாய்த் தட்டி விட்டார்கள். ''சுபா! சுபா!'' என்று அறைக்கு அறை ஓடி, மாடியிலும் கீழுமாய்த் தேடி, பயனில்லாத முயற்சி என்று தெரிந்த பின்னும், ''சுபா! எங்கே இருக்கிறே? சுபா!'' என்று குரல் கொடுத்துக் கொண்டு—

பத்து நிமிடத்தில் திகில் அவர்கள் உள்ளங்களில் பனிப் பாறையாக உட்கார்ந்துவிட்டது.

''ஐயோ! என் கண்ணம்மா! என் தங்கம்! அவளுக்கு என்னமோ ஆபத்து நேர்ந்திருக்கு! இப்படிப் பேசாமல் இருக்கீங்களே!'' என்று கணவனை உலுக்கு உலுக்கென்று உலுக்கினள் கோமளம்.

திடீரென்று ஏதோ ஞாபகம் வந்தவராக, திடீரென்று தற்காலிகமாக உற்சாகமடைந்தார் சடகோபன். ''பார்த்தியா, மறந்தே போனேன்.''

''என்ன மாமா?''

''சாவி உன்கிட்டே ஒண்ணு இருக்கு, என்கிட்டே ஒண்ணு இருக்கு. அப்புறம் சுபா எப்படி வீட்டைத் திறந்து கொண்டு உள்ளே வந்திருக்க முடியும்?'' வாசல்பக்கம் போய்க் கொண்டே அவர் சொன்னர்: ''இங்கே வந்தப்புறம்தான் தன்கிட்டே சாவி இல்லேங்கிறது ஞாபகம் வந்திருக்கும். ராத்திரியில் தனியா இருக்க வேண்டாம்னு எதிர் வீட்டிலே போய்ப் படுத்திட்டிருப்பாள்....''

அவர் பின்னலேயே கோமளமும் மனோஜும் ஓடினர்கள்.

அந்த நட்ட நடுநிசியில் மடேல் மடேலென்று கதவு தட்டப்பட்டதும்




கோபம், பகைமை, கூச்சப் போன்ற உணர்ச்சிகள் சில சமயம் நன்மை பயப்பதாக நீங்கள் நினைத்து அவற்றை விடாமல் பிடித்துக் கொண்டிருக்கக் கூடும்.

அந்த உணர்ச்சிகளால் நீங்கள் எந்த அளவுக்குச் செயலிழந்து போகிறீர்கள் என்பதை எண்ணிப் பாருங்கள். செயலிழந்து போவது என்பது, ஒன்றுமே செய்ய முடியாமல் போய்விடுவதாகவும் இருக்கலாம். குழப்பம், தயக்கம்—இவையாகவும் இருக்கலாம்.

உங்கள் கோபம், நீங்கள் எதையாவது சொல்லவோ, உணரவோ, செய்யவோ முடியாதபடி தடுக்கிறதா? அப்படியானல் நீங்கள் செயலிழந்து போய் விட்டீர்கள்.

அறிமுகம் செய்துகொள்ள வேண்டும் என்று நீங்கள் ஆசைப்படும் மனிதர்களைச் சந்திக்க ஒட்டாமல் உங்களைக் கூச்சம் தடுக்கிறதா? அப்படியானல் நீங்கள் செயலிழந்து போய்விட்டீர்கள்.

செயலிழப்பை முறியடிக்கும் ஒரு வழி, நிகழ்காலத்தில்—இந்த விநாடியில்—வாழக் கற்றுக் கொள்வது.

இந்த விநாடியில் வாழத் தெரியாமல், எதிர்காலத்திலோ கடந்த காலத்திலோ வாழ்ந்துகொண்டிருப்பது, மக்களைப் பீடித்துள்ள மிகப் பெரிய வியாதி.

வீட்டில் போர் அடிக்கிறது என்று விடுமுறைக்குப் போய், அங்கே இருந்தபடி வீட்டை நினைத்துக்கொண்டிருப்பது, நிகழ்காலத்தைக் கைநழுவவிடுவதாகும்.

விடுமுறையை நேரடியாக அனுபவிக்காமல், நண்பர்கள் எப்படி நம் அதிர்ஷ்டத்தை நினைத்துப் பொறாமைப் படுவார்கள் என்று எண்ணி மகிழ்வது நிகழ்காலத்தை இழப்பதாகும்.

புத்தகத்தைப் படித்துக்கொண்டே எண்ணத்தை வேறெங்கோ புல்மேயவிடுவது நிகழ்காலத்தை இழப்பதாகவும்.

இந்த விநாடியை ரசியுங்கள். வாழ்க்கையின் ஒவ்வொரு விநாடியையும்—சுகமோ துக்கமோ—மதியுங்கள். முழுமையாக அனுபவியுங்கள். நழுவ விடாதீர்கள்.

6 வித்தியாசங்கள் விடை:

1. மேசையின் கால்
2. அப்பாவின் சட்டைக் காலர்
3. கிருஷ்ணர் பொம்மையின் கிரீடம்
4. மேல்படிப் பையன்
5. கீழ்ப்படிச் சிறுமி பாவாடை
6. கதவு

என்னவோ ஏதோ என்று பதைத்துக் கொண்டு கதவைத் திறந்தார்கள் அந்த வீட்டில். மூன்று பேரையும் பார்த்து, மூன்று பேரின் கலப்புக் குழப்படியான கேள்விகளையும் கேட்டு, விஷயத்தைப் புரிந்து கொள்ளவே பல விநாடிகள் பிடித்தன அவர்களுக்கு.

கடைசியில், ''சுபாவா? இங்கே வரவில்லையே? சாயந்தரம் உங்களுடன் தானே புறப்பட்டுப் போனாள்? நான்கூடப் பார்த்தேனே? என்ன ஆச்சு?'' என்றார்கள்.

அவர்களுடைய எதிர்க் கேள்விகளுக்கு விடையளித்துக் கொண்டிராமல் திரும்பினார்கள்.

ஆனால் தெரு மொத்தமும் விழித்துக் கொண்டு விட்டது. வீட்டுக்கு வீடு விளக்குகள் எரிந்தன. வாசல் கதவுகள் திறக்கப்பட்டன. ஒருவரையொருவர் விசாரித்துக் கொண்டு ஆளுக்கொரு ஊகங்கள் செய்து கொண்டார்கள். சடகோபனின் குடும்பத்துக்கு நெருக்கமான இரண்டு மூன்று பேர் நேரிலேயே வந்து கேட்டார்கள்.

''மனோஜ்! நீங்களும் இப்படி உட்கார்ந்து விட்டால் எப்படி?'' என்று, கைகளில் தலையைப் புதைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்த மனோஜின் தோளைத் தட்டினார் ஒருவர்.

கலங்கிய கண்களுடன் நிமிர்ந்தான். ''என்ன செய்யலாம் சார்?''

''என்ன இப்படிக் கேட்கிறே? போலீஸிலே கம்ப்ளெயிண்ட் கொடுத்து விடப்பா. விஷயம் ரொம்ப சீரியஸ் இல்லையா?''

மனோஜ் சடகோபனைப் பார்த்தான்.

அவர் தயங்கினார். ''எங்கேயாவது சினேகிதி வீட்டுக்குப் போயிருக்கிறாளோ என்னவோ... கொஞ்சம் பார்த்துக்கலாம்னு...''

''அழகுதான் போங்கள்! வயது வந்த பெண். கலாட்டா நடுவே காணாமல் போயிருக்கிறாள். நெருப்புன்னா வாய் வெந்துவிடுமா என்ன? சுபா வேறே எங்காவது போயிருந்து பத்திரமாய்த் திரும்பி விட்டால் நல்லதாப் போச்சு. கம்ப்ளெயிண்டை வாபஸ் வாங்கிக்கலாம். தாமதமாகப் போய்ச் சொன்னால், 'முதல்லேயே எங்ககிட்டே வர்றதுக்கென்ன?' என்று போலீசிலே கேட்பாங்களோ இல்லையோ?''

''போப்பா மனோஜ்... சார் சொல்ற மாதிரி போலீசில் சொல்லிவிடு,'' என்று அழுதுகொண்டே கோமளமும் கூறினாள்.

மனோஜ் புறப்பட்டான். எல்லாம் ஒரு பயங்கர சொப்பனமாக இருந்தது அவனுக்கு. தெருவில் பல பேர் கும்பலாகக் கூடி நின்று பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்தபடியே போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓட்டமும் நடையுமாக விரைந்தான். சின்னச் சின்னக் கஷ்டங்கள், சின்னச் சின்னப் பிரசினைகள் இருப்பது எல்லாக் குடும்பங்களுக்கும் சகஜம்தான். ஆனால் இப்படி ஒரு பெரும் ரகளை, கனவிலும் நினைத்திருக்க முடியாத நெருக்கடி இந்தக் குடும்பத்துக்கு மட்டும் ஏற்படுவானேன்? 'கடவுளே, சுபாவைக் காப்பாற்று. அவளுக்கு ஆபத்தில்லாமல் பண்ணு' என்று வேண்டிக்கொண்டே நடந்தபோது, பழனிமுத்து, பழனிமுத்து என்று பற்களைக் கடித்தபடியும் சொல்லிக் கொண்டான். இது தற்செயலாக நடந்திருக்க முடியாது. பழனிமுத்துவின் திட்டமிட்ட சதிதான்...

(தொடரும்)



# என்னைக் கவிர

## 11

அரைத் தூக்கத்திலிருந்த ட்யூட்டி கான்ஸ்டபிளைத் தாண்டிக் கொண்டு கவலையும் பரபரப்புமாகப் போலீஸ் ஸ்டேஷனுக்குள் நுழைந்தபோது மனோஜுக்கு ஆச்சரியம் காத்திருந்தது.

அவனுக்கு முன்பே பழனிமுத்து அங்கே வந்திருந்தார். இன்ஸ்பெக்டரோடு பேசிக் கொண்டிருந்தார்.

''இதோ தம்பியே வந்திட்டாரே? அவரையே வேணுமானாலும் கேளுங்க. ரொம்ப அக்கிரமம், இன்ஸ்பெக்டர்! இதை விடக் கூடாது!'' என்றார் மனோஜைக் கண்டதும்.

மனோஜ் இன்ஸ்பெக்டருக்கு வணக்கம் கூறிவிட்டு உட்கார்ந்தான். சிலீரென்ற குளிர்ச்சி அந்த மர நாற்காலியிலிருந்து வருகிறதா அல்லது தன் தேகத்திலிருந்து உற்பத்தியாகிறதா என்று அவனுக்குத் தெரியவில்லை.

''நான் சொன்னது புரிஞ்சுதில்லே, இன்ஸ்பெக்டர்?'' என்று பழனிமுத்து தொடர்ந்தார். ''என் குடும்ப விவகாரம் நாலு பேருக்குத் தெரிய வேண்டாம் என்றுதான் நானும் இத்தனை நாள் பேசாமல் இருந்தேன். இப்ப விஷயம் ரொம்ப தூரம் போயிட்டுது. என்ன ஒரு தைரியம் இருந்தால் நான் தலைமை தாங்கி நடத்துகிற விழாவை என் அண்ணன் கெடுத்து, எனக்குக் கெட்ட பெயர் ஏற்படும்படி பண்ணியிருப்பார்? இதை நீங்க சும்மா விடக் கூடாது....''

''பதற்றப்படாதீங்க. விசாரிக்கலாம்'' என்ற இன்ஸ்பெக்டர், மனோஜிடம், ''நீங்கள் வந்த காரியம்?'' என்று கேட்டார்.

பழனிமுத்துவின் முன்னிலையில் அவன் பேச விரும்பவில்லை. ஆனால் அவர் எழுந்து போவதாகக் காணோம். ஆகவே, அமளியின் நடுவே சுபா காணாமல் போனதைப் பற்றிச் சுருக்கமாகத் தெரிவித்தான்.

இன்ஸ்பெக்டர் அவன் சொன்ன விவரங்களைக் குறித்துக்கொண்டு, ''மிஸ் சுபாவின் போட்டோ இருந்தால் கொண்டு வந்து கொடுங்கள். எல்லா ஸ்டேஷன்களுக்கும் மெஸேஜ் அனுப்புகிறோம். கவலைப்படாதீர்கள்,'' என்றார். பிறகு, ''வேண்டுமென்றே இப்படிச் செய்திருப்பார்கள் என்று யார் மீதாவது உங்களுக்குச் சந்தேகம் இருக்கிறதா?'' என்று கேட்டார்.

சட்டென்று பழனிமுத்துவைத் திரும்பிப் பார்த்தான்.

அவர் புன்னகை செய்த வண்ணம் இருந்தார். இவர் பெயரைச் சொல்லலாமா என்று ஒரு வினாடி எண்ணி, மறு வினாடி காரியம் கெட்டுவிடும் என்று தீர்மானித்தான்.

''தெரியலியே சார்,'' என்றான்.

''சரி. இம்மீடியட்டா நான் ஆக்ஷன் எடுக்கிறேன்,'' என்றார் இன்ஸ்பெக்டர். பழனிமுத்துவைப் பார்த்து, ''உங்க விஷயமும் கவனிக்கிறேன். கலாட்டா யாரால் ஏற்பட்டது, ஏன் ஏற்பட்டதுன்னு விசாரிக்கிறேன்,'' என்றார்.

இருவரும் ஒன்றாகவே வெளியே வந்தார்கள்.

பழனிமுத்துவைச் சட்டையைப் பிடித்து உலுக்கி, ''சுபாவை என்னடா செய்தாய் பாவி! உண்மையை ஒப்புக் கொள்ளாவிட்டால் உன்னை இங்கேயே கொலை பண்ணிவிடுவேன்!' என்று கத்த வேண்டும் போலிருந்தது மனோஜுக்கு.

அதற்குள் அவன் தோளைத் தொட்ட பழனிமுத்து, ''நீங்க மனசிலே

கிருஷ்ணகுமார்

என்ன நினைக்கிறீங்கன்னு என்னுலே ஊகிக்க முடியுது தம்பி.'' என்ருர்.

மனோஜ் பதில் கூறவில்லை.

''உங்களைப் பழி வாங்கறதுக்[illegible]த்தான் உங்களோட காதலியை—நீங்க உயிருக்கு உயிராய் நினைக்கிறதா சொன்னீங்களே, அந்தப் பண்ணை—நான் கடத்திட்டுப் போயிருக்கேன்னு நினைக்கிறீங்க. நீங்க பாங்கிலே என் ஆட்களுக்குக் கடன் உதவி செய்து, என் கௌரவத்தைக் காப்பாத்தினீங்கன்னு அந்தப் பொண்ணைப் பத்திரமாய் திருப்பிக் கொண்டு வந்து ஒப்படைச்சிடுவேன்னு நினைக்கிறீங்க. இல்லையா?''

மனோஜ் சரேலென்று திரும்பி அவரை முறைத்தான். சாமாரியாய் அவர் முகத்தில் குத்துவிட வேண்டும் போலிருந்தது.

அவர் அவனுடைய கோபத்தையோ முறைப்பையோ லட்சியம் பண்ணவில்லை. ''[illegible] வேணுமானாலும் நினைச்சுக்குங்க, [illegible] புத்திசாலித்தனமாக பிழைக்குங்க. அந்தப் பொண்ணை [illegible]தான் எனக்கு ரொம்ப பரிதாபமாய் இருக்குது.''

''பழனிமுத்து! நான் கோபத்தை ரொம்பவும் அடக்கிக் கொண்டு பேசறேன். இல்லையானுல் இத்தனை நேரம் என் கை உங்க கழுத்தை முறிச்சிருக்கும்!'' மனோஜ், வெகு அலட்சியமாக நடந்து போய்க் கொண்டிருக்கும் அவரை வழி மறித்தாற்போல் நின்ருன். பின்னிரவு கழியத் தொடங்கிவிட்டதால் தெரு விளக்கின் வெளிச்சம் வெளிறிப் போய், அவருடைய திடீர்ப் புன்னகைக்குப் பயங்கரம் கூட்டியது.

''என்ன தம்பி நீ இப்படிக் கலாட்டா செய்யறே?'' என்று ஒருகையில் அன்புடன் சொல்லி அவன் தோளில் தட்டிக் கொடுத்தார். ''[illegible] சொல்லிட்டேன்! என்ன கெட்டுப் போயிட்டுது? உன் நன்மையையும் பார்க்கணும். இ[illegible] ஒரு [illegible] அவ்வளவு தானே? [illegible] ஆபீசரா இருக்கிறே. இது [illegible]யே?''

''[illegible] விஷயம் மட்டுமில்லை, [illegible] பழனிமுத்து! ஒரு பெண்ணை [illegible] வைத்திருக்கிறீர். அவளை [illegible] என்னைப் பிளாக் [illegible] இது எவ்வளவு [illegible] குற்றம்னு உமக்குத் தெரியுமா? [illegible]லிலிருந்து பத்துத் [illegible]திலேதான் நாம்ப இன்னும் [illegible] இதோ இப்பவே நான் திரும்பி [illegible] தனைச் சொன்னேனுனல் உம்ம கதை முடிஞ்சது. எட்டு வருஷமோ [illegible] வருஷமோ நீர் கம்பி எண்ண[illegible]யிருக்கும்! ஜாக்கிரதை!''

''கத்தாதே தம்பி, கத்தாதே! என் வீறாப்பச் சத்தம் போட்டு உன் தலையிலே நீயே மண்ணைப் போட்டுக்கறே!'' என்றார் பழனிமுத்து. ''கம்பி எண்ணறதெல்லாம் உன்னைப் போல [illegible] வீட்டுப் பிள்ளைகளுக்குத்தான் கஷ்டமான வேலை. எனக்கெல்லாம் எண்ணி [illegible] விரல்கள் காய்ச்சிப் போயிருக்குது [illegible] பார்,'' என்று தன் கறுத்த மு[illegible] கைளைப் பிரித்து அவன் முகத்[illegible] ஞர் அவர். ''அத்தோட [illegible] விஷயம் நீ மறந்துட்டே. கம்பி எண்ணி எண்ணிப் பழக்கப்பட்டு அனுபவப்பட்டுத்தான் நானும் என்னைப் போல பல [illegible] இன்னிக்கு இந்த மாதிரி பெரிய [illegible] அந்தஸ்துக்கு வந்திருக்கிறோம். [illegible] நாங்கதான் மத்தவங்களைக் கம்பி [illegible] அனுப்ப முடியுமே த[illegible] தண்டிக்க எவனும் வர மு[illegible] நீ போலீஸ்லே போய் என[illegible]



## அவர்தான் இவர்

64'ம் பக்க விடை:

பாலமுரளிகிருஷ்ணதான் மேக்கப்ல் அப்படி இருக்கிருர்.

—ஷே. ஹாஜா நஜீமுதீன்






தாலாட்டும் பாசமெனத் தவழும் மென்மை:
ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்

LINTAS J&J 22 1811 TM

# ஈகிள் பட்டாசுகள்

# EAGLE

## FIREWORKS & SPARKLERS

EAGLE TRADE MARK SIECO

BABY TRADE MARK

சென்னை, சிந்தாமணி சூப்பர் மார்க்கெட், அண்ணா நகர், அம்பத்தூர், & கே.கே. நகர் கிளைகள், சென்னை, காமதேனு சூப்பர் மார்க்கெட் & டி.யூ.ஸி.எஸ். கிளைகள், சென்னை, செங்கல்பட்டு மாவட்ட நுகர்வோர் கூட்டுறவு பண்டகசாலை & மாவட்ட கிளைகள், வேலூர் கற்பகம் சூப்பர் மார்க்கெட் & வட ஆற்காடு மாவட்ட கற்பகம் கிளைகள், கடலூர் சரவணபவ சூப்பர் மார்க்கெட் & தென் ஆற்காடு மாவட்ட சரவணபவ கிளைகள், மதுரை, பாண்டியன் சிறப்பங்காடி கிளைகள், ராமநாதபுரம் மாவட்ட நுகர்வோர் கூட்டுறவு மொத்த பண்டகசாலை & மாவட்டக் கிளைகள், கோயம்புத்தூர், சிந்தாமணி சூப்பர் மார்க்கெட் & மாவட்டக் கிளைகள், கோயம்புத்தூர் ஸ்டேட் பாங்க் தொழிலாளர் கூட்டுறவு ஸ்டோர்ஸ், பொள்ளாச்சி, சேரன் டிரான்ஸ்போர்ட் கார்ப்பரேசன் கூட்டுறவு ஸ்டோர் & ஊட்டி, கோயம்புத்தூர் கிளைகள், திருப்பூர், வளர்மதி சூப்பர் மார்க்கெட் & கிளைகள், கோபி செட்டி பாளையம், கோபிசெட்டி பாளையம் கூட்டுறவு ஸ்டோர்ஸ், மேட்டுப் பாளையம், மேட்டுப்பாளையம் கூட்டுறவு ஸ்டோர்ஸ், சங்ககிரி மேற்கு இந்தியா சிமெண்ட்ஸ் தொழிலாளர்கள் கூட்டுறவு ஸ்டோர்ஸ், சிறுமுகை சவுத் இந்தியா விஸ்கோஸ் கூட்டுறவு ஸ்டோர்ஸ், கும்பகோணம், சந்திரசேகரபுரம் கூட்டுறவு ஸ்டோர்ஸ், நாகர்கோயில், பகவதி சூப்பர் மார்க்கெட், புதுக்கோட்டை, புவனேஸ்வரி சூப்பர் மார்க்கெட் & புதுக்கோட்டை மாவட்ட புவனேஸ்வரி கிளைகள், சத்தியமங்கலம், சத்யமங்கலம் கூட்டுறவு ஸ்டோர்ஸ், மற்றும் பல கூட்டுறவு சிறப்பங்காடிகளிலும், சிற்றங்காடிகளிலும் பாரத நாட்டின் பட்டாஸ் வியாபாரிகள் எல்லோரிடமும் ''ஈகிள்'' டார்ஜான் பட்டாசுகளும், கம்பி, சக்கரம், சாட்டை, சட்டி மற்றும் நூதன வாண வகைகளும் ''பேபி'' சாதா & ரோல் கேப் வகைகளும், எல்லாத் தரப்பு மக்களின் ஆதரவைப் பெற்று ஜனரஞ்சகமாக விற்பனையாகிக் கொண்டிருக்கின்றன.

தயாரிப்பாளர்கள்:

**தி சதர்ன் இந்தியா எக்ஸ்போர்டிங் கம்பெனி,**

லார்டு பயர் ஒர்க்ஸ் இண்டஸ்டிரீஸ், லார்டு பேப்பர் கேப் பாக்டரி,

தபால் பெட்டி எண்: 69, 122, புதுரோட்டுத் தெரு, சிவகாசி–626 123.

PHONE: OFFICE: 94 & 1600; RES: 572; FACT: 21 & 1042

TELEX No. 0448-243 LORD IN

TELEGRAMS: "EXPORT"



கண்ணனின் ஆதரவைக் கேட்டு அவர் கால்மாட்டில் அர்ஜுனனும் தலைமாட்டில் துரியோதனனும் உட்கார்ந்திருந்தார்களாம். அனுராதாவின் ஆதரவு சத்யராஜுக்கா, ஜனகராஜுக்கா?

படம்: 'ஜனவரி ஒண்ணு'.

பண்ணினால், உத்தியோகத்துக்குப் பயந்த எந்தப் போலீஸ்காரனும் நடவடிக்கை எடுக்க மாட்டான். அவன் அப்படி எடுக்கிறதுக்கு ஆதாரம் வைக்கிற அளவுக்கு நானும் மடையன் இல்லை.''

காரில் ஏறிக் கொண்டார். போய்விட்டார்.

மனோஜ் வீட்டுக்குத் திரும்பிய போது, அக்கம்பக்கத்தாரின் கூட்டம் குறைந்துவிட்டிருந்தது.

அழுதழுது வீங்கிய கண்களுடன், ''என்னப்பா மனோஜ் சொன்னாங்க? போலீஸ் ஸ்டேஷனில் எல்லாத்தையும் சொன்னியா?'' என்று பதறிக் கொண்டு கோமளம் ஓடி வந்தாள்.

''தைரியமாய் இருங்க மாமி. ஒரே நாளில் கண்டுபிடிச்சு அழைச்சிட்டு வந்து ஒப்படைக்கிறோம்னு போலீஸ்லே உறுதி சொல்லியிருக்காங்க. நான் கமிஷனர் வரை போய்ப் பார்த்துவிட்டு வந்திருக்கிறேன்,'' என்று நெஞ்சாரக் கோமளத்திடம் பொய் சொல்லிவிட்டு, சடகோபனுக்குக் கண் ஜாடை காட்டினான்.

''அப்பாடா! நான் போய் இன்னொரு தடவை பெருமாள் சன்னிதியில் விளக்கேற்றிச் சேவித்துவிட்டு வருகிறேன்,'' என்றபடி கோமளம் உள்ளே திரும்பியதும், ''மாமா, இப்படி வாங்க!'' என்று சடகோபனை வாசல் பக்கம் இழுத்துக் கொண்டு போனான் அவன்.

''என்னப்பா மனோஜ்? என்ன, என்ன?''

''தைரியமாய் இருங்க. உண்மை தெரிஞ்சிட்டுது. இவ்வளவும் அந்தப் பழனி முத்து செய்திருக்கிற வேலைதான்!''

''என்னது!'' அவர் திடுக்கிட்டார். ''பைத்தியம் பிடிச்சிருக்கா என்ன உனக்கு? பழனிமுத்து எவ்வளவு பெரிய பெரிய மனுஷன். அவர் தலைமை தாங்கின விழாவிலே யாரோ சில பேர் கலாட்டா நடத்தி....''

''அதான் இல்லே மாமா. உங்களையெல்லாம் குடும்பத்தோட விழாவுக்கு வரணும்னு அவன் சொன்னது ஒரு நோக்கத்தோடதான். தானே ஆள் வைச்சுக் கலாட்டா பண்ணி அந்த அமளி நடுவிலே சுபாவைக் கடத்திட்டுப் போயிருக்கிறதும் அவன்தான்!''

''தெய்வமே, தெய்வமே! என் குழந்தையை.... வயசுப் பெண்ணை.....'' அவர் தலையில் அறைந்து கொண்டார்.

''அந்த மாதிரி அனாவசியமான பயமெல்லாம் உங்களுக்கு வேணும், மாமா. அவள் உடம்பில் துரும்புகூடப் படாமல் பார்த்துப்பான். சுபா மேலே அவனுக்குப் பகைமை கிடையாது. என்னைப் பழி தீர்த்துக்கணும்னு, என்னைப் பிளாக் மெயில் பண்றதுக்காக இதைச் செய்திருக்கான்....''

அவனைக் குழப்பத்துடன் பார்த்தார் அவர். "என்னப்பா சொல்றே நீ? எனக்கு ஒண்ணுமே புரியலியே?"

சுருக்கமாக விளக்கினான் மனோஜ். "அந்த ஆள் சிபாரிசு பண்ணின சில பினாமி ஆட்களுக்குப் பாங்க்கிலே கடன் கொடுக்கக் கூடாதுன்னு நான் சொன்னேன். அது அவனுக்குப் பெரிய ப்ரெஸ்டிஜ் இஷ்யூவாய்ப் போயிட்டுது. சுபா மேலே எனக்கு ஒரு இது.... உயிரே வைச்சிருக்கேன்னு அவனுக்குத் தெரியும். அதனாலே அவளைப் பிடிச்சு வைத்துக் கொண்டு என்னை மிரட்டறான்...."

"இதெல்லாம் உன் ஊகம் தானே?"

"இல்லே. போலீஸ் ஸ்டேஷனிலிருந்து வர்றப்போ பழனிமுத்துவே என்னை மடக்கிச் சொன்னான்."

"அப்பாடா! குழந்தை எங்கேயோ உயிரோடு பத்திரமாக இருக்கிறாள். தெய்வம் காப்பாத்திட்டுது!" என்று வானத்தை நோக்கிப் படபடவென்று கன்னத்தில் போட்டுக் கொண்டார் அவர். "சரி, நீ அவன்கிட்டே என்ன சொன்னே? அடுத்தாப்பலே என்ன செய்யப் போறே?"

"மாமிகிட்டே சொன்னேனே, கமிஷனர் வரை போய்ப் பார்த்துவிட்டேன்னு. அது போய். இனிமேல்தான் போகப் போகிறேன். பழனிமுத்துவின் பிளாக்மெயிலைச் சொல்லி, உடனே அவனை மடக்கி...."




"முட்டாள்!" என்று அவன் கையை இரும்புப் பிடியாகப் பிடித்தார் சடகோபன். "மூளை இருந்துதான் பேசுகிறாயா இவ்வளவும்? பிளாக் மெயில் பண்ணறவன், போலீஸ் துணையோடு நீ வருகிறவரையில் பூப்பறிச்சிட்டு உட்கார்ந்திருப்பானா என்ன? ஒரே நிமிஷத்தில் என் பெண்ணைத் தீர்த்துக் கட்டிவிட்டு மறு வேலை பார்ப்பான். போலீசுக்குப் போகிறானாம் போலீசுக்கு!"

"மாமா....."

"நிற்காதே ஒரு நிமிஷம்கூட இங்கே! ஓடு அந்தப் பழனிமுத்துகிட்டே. கையைக் காலைப் பிடிச்சு, அவன் கேட்ட உதவியைப் பாங்க்கிலே பண்ணித் தரேன்னு சொல்லி, சுபாவை விட்டுவிடச் சொல்லு. என் குழந்தை உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கிறாள் அங்கே. நீ பிரின்ஸிபிளா பார்க்கிறே, பிரின்ஸி..."

கோபத்திலும் அதிர்ச்சியிலும் அவர் உடம்பு தடதடவென்று ஆடிக் கொண்டிருந்தது.

மனோஜ் மெல்ல நடந்தான். பிறகு வேகமாய் நடந்தான். இத்தனை நாளில் சடகோபன் இவ்வளவு கடுமையாகப் பேசியது கிடையாது. அவர் இறுக்கிப் பிடித்த இடம் மணிக்கட்டில் விண்விண்ணென்று தெறித்துக் கொண்டிருந்தது. அவர் கேட்டது நியாயம்தானே? நான் பிரின்ஸிபிளோடு இருக்க முயற்சிக்கலாம். அதற்கு என்னைத்தான் பலி கொடுத்துக் கொள்ள வேண்டுமேயல்லாது எனக்கு எந்த விதத்திலும் சம்பந்தமில்லாத பெண்ணை ஆபத்தில் ஆழ்த்துவதாவது! அதற்கு எனக்கு என்ன உரிமை இருக்கிறது?

எதிரில் வந்து கொண்டிருந்த ஆட்டோவைக் கைகாட்டி நிறுத்தினான்.

"அட! இவ்வளவு சீக்கிரம் ஒரு நல்ல முடிவுக்கு வந்துட்டீங்களே!" என்று முக மலர்ச்சியுடன் அவனை வரவேற்றார் பழனிமுத்து.

மனோஜ் தன் ஆத்திரத்தை விழுங்கிக் கொண்டு, "சுபாவை உடனே என்னுடன் அனுப்ப ஏற்பாடு செய்யுங்கள்," என்றான் அமைதியாக.

"அந்த பாங்க் சமாசாரம்?"

"மணி இப்ப எட்டுதான் ஆகிறது. பத்து மணிக்குப் பாங்க் திறந்ததும் அங்கே வாருங்கள். மானேஜரிடம்


கண் ஒளி பெற வழி காட்டிடுவீர் !
நேத்ரகல்யாண்
சூப்பர் பம்பர்
சந்த் பரமானந்த் பிளைண்ட் ரிலீ:ப் மிஷின்
உதவி நிதிக்காக!
WIN Rs 7.40 CRORES
60 முதல் பரிசு ரூ 5 லட்சம் வீதம்
குலுக்கல் கடைசி 5 எண்களில்
120 இரண்டாவது பரிசு ரூ 1 லட்சம் வீதம்
குலுக்கல் கடைசி 5 எண்களில்
600 மூன்றாவது பரிசு ரூ. 10,000 வீதம்
குலுக்கல் கடைசி 4 எண்களில்
6,000 4வது பரிசுகள்
ரூ. 500/- வீதம்
(குலுக்கல் கடைசி 3 எண்களில்)
60,000 5வது பரிசுகள்
ரூ. 50/- வீதம்
(குலுக்கல் கடைசி 2 எண்களில்)
6 லட்சம் 6வது பரிசுகள்
ரூ. 20/- வீதம்
(குலுக்கல் கடைசி எண்ணில்)
மொத்த விற்பனையாளர்கள் :
ஜாஸ்மின் & கோ.
புது தில்லி-110 001.
ஆர்கனைஸிங் ஏஜெண்ட் :
ஸவஸ்திக் லாட்டரி ஏஜென்ஸீஸ்
15, ஹோட்டல் கான்டினென்டல் அனெக்ஸ்
கன்னாட் பிளேஸ், புது தில்லி-110 001
தொலைபேசி : 310374, 311208.
6 வரிசைகள்
டிக்கட்
ரூ. 20/-
மட்டுமே
60% பரிசாக
வழங்கப்படுகிறது
குலுக்கல் நாள் 22-11-84
சூப்பர் ஸ்டாக்கிஸ்டு: M/s பிரியா லாட்டரி ஏஜென்ஸீஸ், 160, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை—600 005. பாண்டிச்சேரி ஸ்டாக்கிஸ்ட் M/s D.R. ராஜசேகர், பெங்களூர் ஸ்டாக்கிஸ்ட்ஸ். M/s மஹாலெட்சுமி ஹால், M/s விஷ்ணு ஏஜென்ஸீஸ், M/s வாசுதேவ் ராஜாணி M/s பாலாஜி ஏஜென்ஸீஸ், M/s சுகால் லாட்டரி ஏஜென்ஸீஸ்.

அட்டையில: வனிதா, சரஸ்வதி
வண்ணப்படம்: பி.இ. ரமணன்



சொல்லி உங்கள் பேப்பர்களை க்ளியர் பண்ணச் சொல்றேன்.''

''அதை நான் எப்படி நம்புவது?'' என்றார் அவர்.

''நான் வார்த்தை தவறினேன்னு, மறுபடியும் இதே சுபாவை மறுபடியும் இதே மாதிரி கடத்திக்கிட்டுப் போக உங்களுக்கு அதிக நேரமாகாது என்று எனக்கும் தெரியும். உங்களுக்கும் தெரியும்.''

பழனிமுத்து தன் காவிப் பற்கள் தெரிய வாய்விட்டுச் சிரித்தார். ''நல்லாத் தான் பேசறீங்க. அப்ப நமக்குள்ளே ஒரு ஒப்பந்தத்துக்கு வருவோம். இப்ப என்னுடன் நீங்க வர்றீங்க. உங்க வீட்டுப் பொண்ணு பத்திரமாய் நல்லாத்தான் இருக்கிறாள்னு உங்க கண் முன்னலே காட்டறேன். பாங்கிலே காரியம் ஆனதும் பிற்பகல் மறுபடி என்னோடு வர்றீங்க. பொண்ணை அழைச்சிட்டுப் போறீங்க.''

''உங்க வார்த்தையை மட்டும் நான் நம்பணும் என்கிறீங்களா?''

''நம்பறதும் நம்பாததும் உங்க இஷ்டம். ஆனல் இந்தப் பழனிமுத்து யோக்கியனே அயோக்கியனே, சொன்னல் சொன்னபடி செய்கிறவன்னு யாரைக் கேட்டாலும் சொல்லுவாங்க.''

''சரி, புறப்படுங்க,'' என்றான்.

காரின் பின் சீட்டில் உட்கார்ந்ததும் அவனுக்கு இரண்டு பக்கமும் இரண்டு முரட்டு ஆட்கள் உட்கார்ந்து கொண்டார்கள். கறுப்புக் கண்ணடிக் கதவுகள் ஏற்றப்பட்டன.

''தம்பி அனுவசியக் காட்சிகளையெல்லாம் பார்த்துக் கண்ணைக் கெடுத்துக்கத் தேவையில்லை. அதனலே கண்ணுக்குக் கொஞ்சம் ரெஸ்ட்,'' என்ற பழனிமுத்து, ''கட்டி விடுங்கப்பா,'' என்றார்.

மனேஜ் ஆட்சேபிக்கு முன் அவனுடைய கண்கள் கெட்டியான கறுப்புத் துணியினல் கட்டப்பட்டன. முரண்டு பிடிக்காமல் இருப்பதே புத்திசாலித்தனம் என்று மனேஜ் புரிந்து கொண்டான்.

நிறையக் கார்களின் ஓசைகளும் பஸ்களின் சத்தங்களும் கேட்டதால் சந்தடி மிகுந்த பெரிய சாலையின் வழியே செல்கிறோம் என்று ஊகிக்க முடிந்தது. மெல்ல மெல்ல அத்தகைய ஓசைகள் குறைந்துவிட்டன. எப்போதோ ஒரு சைக்கிளின் ஓசை மட்டுமே கேட்டது.

காரின் வேகம் குறைந்து, நின்றது. கையைப் பிடித்து அவனை எழுப்பினர்கள். கண் கட்டை அவிழ்த்தார்கள்.

பார்த்த போது ஒரு சிறிய புதிய வீட்டின் முன்னே நிற்பதைக் கண்டான். பக்கத்தில் வீடு எதுவும் இல்லை. பிரதான சாலையிலிருந்து பிரிந்து வந்து ஒரு சிறு தெருவில் அந்த வீடு கட்டப்பட்டிருந்தது.

ஜிப்பா பையிலிருந்து சாவியை எடுத்துக் கதவைத் திறந்துவிட்டார் பழனிமுத்து. ''உள்ளே போய்ப் பார்த்துவிட்டு, இரண்டு நிமிடம் பேசிவிட்டு வா தம்பி,'' என்றார் மனேஜிடம்.

அவர் சொல்கிற வரையில் காத்திருக்காமல், ''சுபா!'' என்று கூவிக் கொண்டு உள்ளே பாய்ந்தான் அவன்.

எந்தப் பதிலும் வரவில்லை.

''சுபா! சுபா!'' என்று கத்திக் கொண்டே எங்கும் தேடினன்.

சின்ன வீடு. இரண்டே அறை. ஒரு சமையல்கட்டு. பின்புறம் கதவு கிடையாது.

''சுபா! சுபா!''

அவன் கூச்சலைக் கேட்டுப் பழனிமுத்து வேகமாய் உள்ளே வந்தார். ''என்ன! அந்தப் பெண் இல்லை?'' அதிர்ச்சியுடன் கேட்டவர் பாத்ரூம் கதவுகளையும் திறந்து பார்த்தார்.

இல்லை. சுபா எங்கேயுமே இல்லை.

(தொடரும்)

## வெடிகள்



பூஜை அறையிலே வந்து வெடிக்காதீங்கடா. சொன்னக் கேளுங்க.

## வாழ்த்து



என்னங்க இது! வாழ்த்து அட்டைன்னு வாங்கிட்டுப் போய்ப் பார்த்தால் எல்லா அட்டையிலும் 'வீழ்த்து'ன்னு அடிச்சு வெச்சிருக்கீங்க?

## இரும்



இப்படி வீசிப் போட்டால் எப்படி அவங்க பிடிச்சுப்பாங்க? பக்கத்திலே போய்க் கொடுப்பா.

இலர்கள் வீடுகளில்

# இப்படி ந
# தீபா

## எண்ணெய்க் குளியல்



மாப்பிள்ளை கார் மேலே உட்கார்ந்துகிட்டேதான் எண்ணெய் தேய்த்துக் குளிப்பாராம்.

# காவல் விழித்தது

டாக்டர் ஹண்டே மருத்துவ மனையிலிருந்து அனேகமாக வெளியே செல்லாமல், முதல்வரின் உடல் நிலை பற்றி அவ்வப்போது மருத்துவ அறிக்கைகளைத் தயார் செய்து கவர்னர் குரானாவிடம் ஒரு முறை படித்துக் காட்டுவிட்டு (டெலிபோனில்) வெளியிட்டுக் கொண்டிருக்கிறார்.

பிரதமர் இந்திரா காந்தி எம்.ஜி.ஆரைப் பார்த்துவிட்டுச் சென்றபிறகு சபாநாயகர் ராசாராம் சுறுசுறுப்பாக மருத்துவமனை ஏற்பாடுகளைக் கவனித்து வருகிறார். வர்த்தகப் பிரமுகர்கள், தொழிலதிபர்கள், மற்றும் முக்கிய புள்ளிகள் பலரும் முதல்வரின் உடல்நிலை நிலவரத்தைத் தெரிந்து கொள்வதில் ராசாராமுக்கே போன் செய்தோ, நேரிலோ வந்து கேட்டு அறிந்து விட்டுப் போகிறார்கள்.

பல ஆண்டுகளாக முதல்வருடன் நெருங்கிப் பழகி அவரின் அந்தரங்கமான நட்புக்கும், அன்புக்கும், பாசத்துக்கும் பழக்கமாகிவிட்ட ஆர்.எம். வீரப்பன் கனத்த சுமை நெஞ்சத்தோடு வளைய வருகிறார்.

அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனும் முதல்வரோடு நிர்வாக விஷயத்தில் தோளோடு தோள் நின்று மத்திய அரசு தொடர்பான எல்லா விஷயங்களிலும் கலந்து கொண்டு பணியாற்றியிருப்பதால், எவருடனும் அதிகமாகப் பேசுவது கூடக் கிடையாது.

அவரும், அமைச்சர் கே.ஏ. கிருஷ்ணசாமியும் நிருபர்கள் மருத்துவ மனைக்குள் அனுமதிக்கப்படாத சமயங்களில் தாங்களாகவே நேரிடையாகத் தலையிட்டு சலுகை பெற்றுத் தந்தனர்.

முதலமைச்சரின் நெருங்கிய தொண்டரும், எம்.ஜி.ஆர். மன்றங்களின் தலைவருமான முசிறிப்புத்தன் திடீரென்று நெஞ்சு வலி காரணமாக அதே அப்போலோ மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டிருப்பது, பல கழகப் புள்ளிகளுக்குக் கவலையை அளித்துள்ளது.

ராசாராம், நெடுஞ்செழியன், மாதவன், ப.உ. சண்முகம், பொன்னையன் ஆகியோர் முதல்வரின் மருத்துவ ஏற்பாடுகள் பற்றிய காரியங்களை இடைவிடாது கவனித்து வருகின்றனர்.

ஆர்.எம்.வீ., பண்ருட்டி, கே.ஏ.கே., காளிமுத்து, அரங்கநாயகம் ஆகியோர் முதல்வரைப் பார்க்க வரும் பிரமுகர்கள், அரசியல்வாதிகள், ஏனையோருக்கு அவ்வப்போது தகவல் சொல்வதிலும், ஒவ்வொரு கட்டத்திலும் முதல்வரின் உடல்நிலை எப்படியிருக்கிறது மேற்கொண்டு என்ன செய்யலாம் என்று மருத்துவர்களோடு ஆலோசனை நடத்துவதிலும் மும்முரமாக உள்ளனர்.

முன்னாள் கொ.ப.செ. மிகவும் கவலையோடு அவ்வப்போது மருத்துவ மனைக்கு வந்து விசாரித்துவிட்டுப் போய்க் கொண்டிருக்கிறார். அமைச்சர் ஆர். சௌந்தரராஜனும், அமைச்சர் திருநாவுக்கரசும், முன்னாள் கொ.ப.செ.க்கு ஆறுதலும், தகவலும் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

—ஒற்றைக் கண்ணாடி

ஆர்.எம்.வீ.



ராசாராம்

பண்ருட்டி ராமச்சந்திரன்




ஜி.டி. எக்ஸ்பிரஸ் போபாலைவிட்டுப் புறப்பட்டு
விட்டது. கால் மணி நேரமாக இருந்த
நெரிசலும் கூச்சலும் பின்னோக்கி வடியும் அலை
யைப்போலச் சிறிது சிறிதாகக் குறைந்தன.
வழியனுப்ப வந்திருந்
தவர்கள் டாடா காட்டிக்
கொண்டே புறப்பட்டார்
கள். ஏராளமான

முடிச்சுக்களுடன் வந்திருந்தவர்கள் போர்ட்டர்களிடம் பேரத்தை முடித்துக் கொண்டார்கள். கொஞ்ச நேரத்துக் கெல்லாம் பிளாட்பாரம் வெறிச்சோடியது.

தோளில் பையை மாட்டிக் கொண்டிருந்த ஒருவர் மட்டும் தன்னந் தனியே நின்றிருந்தார். பெட்டி படுக்கையோ குடும்பத்தினரோ யாரும் இல்லாததால் அவரை எந்தப் போர்ட்டரும் சீண்டவில்லை. அவரும் வெளியே போவதில் அப்படியொன்றும் ஆர்வம் காட்டக் காணோம். 'போபால் போபால் என்பார்களே, அது இதுதானா?' என்று சாதாரணமாக நினைப்பவர்போல் கண்களைச் சுழற்றினார். எந்த ஊரில் இறங்கினாலென்ன என்கிற விரக்தி அவருடைய முகத்தில் பரவியிருந்தது.

அவருக்கு நாற்பத்தைந்து வயது இருக்கும். பின்மண்டையில் ஏற்பட்டிருந்த வழுக்கை வயோதிகத்தையும் முன் மண்டையில் இருந்த நரையில்லாத கறுப்பு முடி அவருடைய இளமையையும் குறித்துக் கொண்டிருந்தன. வட்டமான முகத்தில் பத்து நாள் தாடி முளைத்திருந்தது. பல நாட்கள் பயணம் செய்துகொண்டிருக்கும் யாத்திரிகரைப்போல அவருடைய உடைகள் கசங்கி அழுக்கேறியிருந்தன. ஆனால் வசதி படைத்தவர்தானே தவிர ஏழையோ பிச்சைக்காரரோ அல்ல என்று அவருடைய முகத்தில் தென்பட்ட களை தெரிவித்தது.

டீ ஸ்டால் எங்கே இருக்கிறது என்று பார்த்துக்கொண்டே பிளாட் பாரத்தில் நடந்தார் அவர்.

அப்போதுதான் அந்தப் பெண்ணைக் கவனித்தார்.

நாகரிகமான பெரிய சூட்கேஸின் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள் அவள். யாரையும் தேடுபவளாகத் தெரியவில்லை. பெட்டியின்மீது முழங்கைகளை ஊன்றி, உள்ளங்கைகளில் முகத்தைப் புதைத்திருந் தாள். முகம் தெரியாவிட்டாலும் அது அழகானது என்று அவரால் ஊகிக்க முடிந்தது. அவளுடைய புடவையிலிருந்தும் கழுத்தில் காதில் அணிந்திருந்த நகைகளி லிருந்தும் அவள் ஒரு கௌரவமான குடும்பப் பெண் என்று தெரிந்தது. வயது இருபத்தைந்து இருக்கும் என்று எண்ணிக் கொண்டார். புடவைத் தலைப்பால் உடம்பை இழுத்துப் போர்த்துக் கொண்டிருந்தாள், குளிருக்கு மூடிக் கொள்வதுபோல.

எல்லாரும் போன பிறகும் ஏன் இவள் மட்டும் தனியே இப்படி உட்கார்ந் திருக்கிறாள்? இவளுடன் கூட யாரும் வர வில்லையா? அல்லது வந்தவர்கள் இவளை இருக்கச் சொல்லிவிட்டு டாக்ஸி ஏதேனும் அமர்த்துவதற்காகச் சென்றிருக்கிறார் களா?

அவளுக்கு அருகில் போய்த் தயங்கியதும், நிழலாடுவதைக் கவனித்து அவள் தலை நிமிர்ந்தாள்.

தலை நிமிர்ந்த அந்த விநாடியில் அவர் இரண்டு விஷயங்களைக் கவனித்தார்.

அவள் ஒரு தமிழ்ப் பெண்; கடும் காய்ச்சலில் அவதிப்பட்டுக் கொண்டிருக் கிறாள்.

அவளும் அவரைப் பார்த்ததுமே அவருடைய ஊரைப் புரிந்துகொண்டாள். ''சார்... நீங்க மதறாஸியா... தமிழரா?'' என்றாள்.

''ஆமாம்மா. உனக்கு என்ன வேண்டும்? ஏன் இப்படித் தனியா உட் கார்ந்திருக்கிறே? என்னால் ஏதாவது உதவி ஆகணும்னா சொல்லு,'' என்றார் அவர் கடகடவென்று. அவ்வளவு வார்த்தைகள் அவர் பேசியிருக்கத் தேவையில்லை. ஆனால் தான் அசல் தமிழர்தான் என்பதை அவளுக்கு நிரூபிக்க வேண்டி அவசியத்துக்கு மேலேயே பேசினார்.

''நீங்க... போபாலில்தான் இருக்கிறீர்களா?''

''எனக்கு இப்போது எந்த ஊரும் இல்லை. என்னவோ சொல்லுவாங்களே, யாதும் ஊரே யாரும் கேளிர்னு, அந்த மாதிரின்னு வைச்சுக்கயேன். என் பெயர் சுப்பிரமணியம். இப்படி ஊர் ஊராய் அலைஞ்சிட்டிருக்கிறதுதான் என் வேலை,'' என்று கசப்புடன் சிரித்தார் அவர். ''உனக்கு என்ன வேணும்னு கேட்டேன். அதைச் சொல்லாமல் என்னையே திருப்பிக் கேட்கிறியே?''

''நான் மெட்ராஸ்தான். திருவல்லிக்கேணி. என் பெயர் சாவித்திரி,'' என்று மெதுவாகச் சொன்னாள் அவள்.

''உன்னுடன் யாரும் வரலியா? ஜுரம் அடிக்கிறமாதிரி இருக்கே உன்னைப் பார்த்தால்.?'' என்றார் சுப்பிரமணியம்.

கிருஷ்ணகுமார்

ஜுரம்தான்... மெட்ராசில் என் அண்ணா வீட்டுக்குப் போயிருந்தேன், ஒரு மாசம் இருக்கலாமென்று. என் புருஷனைக் கொஞ்சம் இளப்பமாய்ப் பேசினார்கள் என் அண்ணாவும் மன்னியும். எனக்குப் பிடிக்க வில்லை. அவருக்கு ஒரு தந்தி கொடுத்துவிட்டு உடனே புறப்பட்டு விட்டேன். ரயிலில் திடீரென்று ஜுரம் வந்துவிட்டது...''

''உன் புருஷன் வரவில்லையா?''

''ஆமாம்... தந்தி கிடைக்க வில்லையோ என்னவோ... தனியாய் டாக்ஸியில் போகப் பயமாயிருக்கிறது... ஆபீஸ் திறந்த பிறகுதான் அவருக்குப் போன் பண்ண முடியும்... ஜுரம் வேறே. என்ன செய்வதென்று தெரியாமல் உட்கார்ந்திருக்கிறேன்...'' பேசும்போது ஜுர வேகம் தாங்காமல் அவள் உதடுகள் மெல்ல நடுங்கின. இனிமையான குரல், தொண்டை கட்டியிருந்ததால் கரகர வென்றிருந்தது.

''உனக்கு உன் வீட்டுக்கு வழி தெரியுமா?''

''தெரியும் சார். ஆனால் தனியாய் டாக்ஸியில் போகத் தயக்கமாயிருக்கிறது.''

''நான் கொண்டுபோய் விடுகிறேன்,'' என்றார் சுப்பிரமணியம். ''அதாவது, என்னை நீ நம்பினால்.''

''சார்... நீங்க... என் அப்பா மாதிரி... உங்களுக்குக் கஷ்டம் இல்லையென்றால்...'' தன் நிம்மதியையும் நன்றியையும் வார்த்தைகளில் விவரிக்க அவளுக்குத் தெரியவில்லை.

''சரி, எழுந்திரு,'' என்று அவளுடைய சூட்கேஸை எடுத்துக் கொண்டார் சுப்பிரமணியம். ''எனக்கு அதிகமாய் ஹிந்தி தெரியாது. உனக்குத் தெரியுமில்லையா? டாக்ஸிக்காரரிடம் பேசிக்கொள்வாய் இல்லையா?''

''ஓ, இங்கே ஆறு வருஷமாய் இருக்கிறேன் சார். நான் பேசிக்கொள்வேன்,'' என்று அவள் உறுதி சொன்னாள்.

சொன்னபடியே, ஸ்டேஷனுக்கு வெளியே வந்ததும் டாக்ஸிக்காரரிடம் காய்ச்சல் குரலில் திணறித் திணறிப் பேசினாள். தன் இடத்தைச் சொல்லி வாடகையைப் பேசி முடித்துக் கொண்டாள்.

சுப்பிரமணியம் டாக்ஸியோட்டிக்குப் பக்கத்தில் முன் ஸீட்டில் ஏறிக்கொண்டார். பின் ஸீட்டில் சாவித்திரி தன் சூட்கேஸைத் தலைக்குயர மாக வைத்துக்கொண்டு சுருண்டு படுத்து விட்டாள்.

அப்போது இரவு எட்டு மணி இருக்கும். முக்கிய கடை வீதிகள் மட்டும் தான் வெளிச்சமும் சலசலப்புமாய் இருந்தன. மற்றத் தெருக்கள் விளக்கு இல்லாமல் இருளில் மூழ்கிக் கிடந்தன. திடீரென்று சிலுசிலுவென்று குளிர் காற்று வீசியது. கடற்கரைப் பக்கமாகப் போவது போல் இருந்தது. இந்தியாவின் நட்ட நடுவில் இருக்கும் மத்தியப் பிரதேசத்தில், அதுவும் போபாலில் கடற்கரை ஏது என்று யோசித்தபோது, டாக்ஸியோட்டி வெளியே கையைக் காட்டி ஏதோ சொன்னான். அவருக்குத் தெரிந்த அரை குறை இந்தியில் அதைப் புரிந்து—கொண்டார்— போபால் நகரத்தின் புகழ் பெற்ற ஏரி வழியாக டாக்ஸி சென்று கொண்டிருக்கிறது என்று. பிறகு நீண்ட மதில் சுவர்கள் தெரிந்தன. அப்போதும் டாக்ஸியோட்டி ஏதோ சொன்னான். பட்டோடி நவாபின் அரண்மனை என்றும்

## பழனியில் இட்லிக்குப் பஞ்சமா?



சமீபத்தில் ஒரு திருமணத்திற்காகப் பழனி சென்றோம். ஒருநாள் மாலை பசியும் களைப்புமாக டிபன் சாப்பிட பழனி அருள்மிகு தண்டாயுதபாணி தேவஸ்தான கேன்டீனுக்குச் சென்றோம். ஆளுக்கு இரண்டு இட்லியைச் சாப்பிட்டுவிட்டு, மேலும் இரண்டு இட்லி கொண்டு வரச் சொன்னோம்.

அதிர்ச்சி! அந்தத் தேவஸ்தான கேன்டீனில் ஆளுக்கு இரண்டு இட்லிகளுக்கு மேல் வழங்குவதில்லையாம். போர்டையும் சர்வர் காட்டினர்.

—துரை




# வாழ்க்கையை அனுபவிக்க வாழும் வீட்டில் வசதிகளும் வேண்டும்

இன்றைய நிலவரத்தில் வீட்டில் ஒரு மிக்ஸி, ஒரு டி.வி. அல்லது ஒரு ரெ.:.பிரிஜிரேட்டர் இல்லாவிட்டால் ஒரு குறைதானே. இவைகளை நீங்கள் சுலபமாக வாங்கி நிரப்ப இதோ எங்கள் டபுள் பென்.:.பிட் டெபாசிட் திட்டம்.

மாதம் ரூ. 50 – அல்லது அதன் ஓரிரு மடங்குகள் வீதம் 1, 2, 3, 5, 7 அல்லது 10 ஆண்டுகள் மேற்படி திட்டத்தில் சேமியுங்கள். சேமித்த தொகையுடன் அதற்குக் கிட்டத்தட்ட இணையான தொகையையும் எங்களிடமிருந்து கடனாகப் பெறுங்கள். எங்கள் டபுள் பெனா.:.பிட் டெபாசிட் திட்டம் உங்களுக்கு அளிக்கும் நன்மைகள் இதோ கண்கூடு.

| மாதச சேமிப்புத் தொகை ரூ. | சேமிக்கும மாதங்கள் | மொத்த சேமிப்புத் தொகை வட்டியுடன் ரூ. - பை. | சேமிப்புக கெடுவில நாங்கள் அளிக்கும் கடன் ரூ. | உங்களுக்கு கிடைக்கும் மொத்தத் தொகை ரூ. – பை. |
|---|---|---|---|---|
| 50-00 | 12 | 626-50 | 500-00 | 1.126-50 |
| 100-00 | 24 | 2,637-00 | 2.500-00 | 5.137-00 |
| 200-00 | 36 | 8.416-00 | 8,000-00 | 16,416-00 |

மேலும் விவரங்களுக்கு உங்கள் அருகாமையிலுள்ள கிளையை நாடுங்கள்.



**தி வைஸ்யா பாங்க் லி.**

பதிவு அலுவலகம் : அவென்யூ ரோடு, பெங்களூர்-560 002.
நிர்வாக அலுவலகம்: 72, செண்ட் மார்க்ஸ ரோடு, பெங்களூர்-560 001.
சேர்மன்: ரமேஷ் கெல்லி

கூட்டு சேர்ந்து நன்கு வளர்வோம்.

# டாபர் ச்யவன்ப்ராஷ்

## 3000 ஆண்டுகால முனிவர்களின் ரகஸ்ய பக்குவ முறை-மீண்டும் படைக்கப்பட்டுள்ளது !



நமது பழைய கால ரிஷிகள் இயற்கையின் பல ரகஸ்யங்களை அறிந்திருந்தார்கள். அவை மனித உடலுக்கு எவ்வாறு நன்மை செய்யும் என்றும் அவர்களுக்குத் தெரியும். அவற்றில் ஒன்று ச்யவன்ப்பிராஷ் என்னும் விசேஷத் தயாரிப்பு.

சுமார் 3000 ஆண்டுகளுக்குப் பிறகு டாபர் இந்தத் தயாரிப்பை டாபர் ச்யவன்ப்பிராஷில் மீண்டும் படைத்தது.

பச்சை நெல்லிக்காய், தசமூலம், அஷ்டவர்க்கம் போன்ற 40க்கும் அதிகமான இயற்கை மூலப் பொருள்களிலிருந்து தயாரிக்கப்பட்ட டாபர் ச்யவன்ப்பிராஷ் பல வியாதிகளுக்கு உங்கள் குடும்பத்தின் எதிர்ப்பு சக்தியை வளர்த்து அவர்களை ஆரோக்கியமாக வைக்கிறது.




டாபர்

**ச்யவன்ப்ராஷ்**

**உங்கள் குடும்பத்தின்**
**இயற்கை ஆரோக்கிய டானிக்**

மலேசியாவில் கீழ்கண்ட முகவரியில் கிடைக்கும்

மெஸர்ஸ் சிரியாகத் டி. எம். ஷபி
156, L-6, ஜலான் பாகேலிஜிங்,
கோலாலம்பூர்-02-17, மலேசியா.

OBM/9487

ஷர்மிளா டாகூர் இப்போது ஊருக்கு வந்திருப்பதாகச் சொல்கிறுனென்றும் சுப்பிரமணியம் ஊகித்துக் கொண்டார்.

பின்ஸீட்டில் சாவித்திரி ஏதோ முனகுவது கேட்டது.

''என்னம்மா?'' என்றுர்.

''ஒண்ணுமில்லே... என் அப்பா மாதிரி துணைக்கு வந்தீர்களே என்று சொன்னேன்...''

''நீ சொல்வது ரொம்பக் கரெக்ட் அம்மா. எனக்கும் உன்னைப் போலவே ஒரு பெண்...''

''என்ன செய்கிறுள்? படிக்கிறுளா? அல்லது கல்யாணமாகி விட்டதா?'' என்று அவள் எழுந்து உட்கார்ந்து கொண்டு கேட்டாள்.

''ஒண்ணும் செய்யவில்லே,'' சுப்பிரமணியம் பெருமூச்சு விட்டார். ''அவள் இல்லே. போய்விட்டாள்.''

''ஐயோ! ஏன்?''

சுப்பிரமணியம் எதுவும் சொல்லவில்லே.

ஏன்? ஏன் போய்விட்டாள்?

ரொம்ப நாளாக அவரும் அந்தக் குரூரமான விதியிடம் அதைக் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறுர். அதுவும் பதில் சொல்லாமல் சிரித்துக் கொண்டுதான் இருக்கிறது.

ஏன்? ஏன் திடீரென்று போக வேண்டும் பச்சைப் பசுங்கொடியாய் இருபது வயதுவரை வளர்ந்த ஒரு பெண்! ஏன் போக வேண்டும் படிப்பிலும் பாட்டிலும் விளையாட்டிலும் முதன்மையாய் நின்ற ஒரு பெண்? ஏன் போக வேண்டும், விளையாட்டும் வேடிக்கையும் துருதுருப்பும் குறும்புத்தனமுமாய் வீட்டை இரண்டு பண்ணிக்கொண்டிருந்த ஒரு குழந்தை?

ஏன் மூளை ஜுரம் என்று ஒன்று திடீரென்று புயலாய் வந்து அவளைச் சாய்க்க வேண்டும்? ஏன் மூன்றே நாளில் அந்தப் புஷ்பம் போன்ற இதயத்தின் துடிப்பு நின்று போக வேண்டும்?

சுப்பிரமணியம் கண்களைத் துடைத்துக் கொண்டார். சட்டைப் பையிலிருந்து பர்ஸை எடுத்தார். அதற்குள்ளிருந்து ஒரு புகைப்படத்தை வெளியெடுத்தார். இருபது வயதுப் பெண்ணொருத்தி அதிலே சிரித்துக் கொண்டிருந்தாள்.

'சுலோசனு... சுலோசனு... என் கண்ணே!' என்று அவர் உதடுகள் முணுமுணுத்தன.

ஆஸ்பத்திரிக் கட்டிலில் அவளுடைய உயிர் மெல்ல மெல்லப் பிரிந்த காட்சி, இதோ இப்போது அவர் கண்ணெதிரே நடக்கிற மாதிரி இருந்தது.

''அப்பா... எனக்குப் பயமா இருக்கு அப்பா...''

''சீசீ அசடு. பயப்படறதுக்கு என்ன இருக்கு? சாதாரண ஜுரம்தான். நாளைக்கே எழுந்துகொண்டு விடுவாய்...''

''இல்லேப்பா... நான் பிழைக்க மாட்டேன் என்று தோன்றுகிறது...''

''சுலோசனு... அப்படியெல்லாம் பேசாதேம்மா... உனக்கு ஒன்றும் நேராது...''

''நான் ஒரு பெரிய தப்புப் பண்ணிட்டேம்பா... அதனுல் தான் கடவுள் எனக்கு இந்தத் தண்டனையைக் கொடுத்திருக்கார்...''



''நான் கத்தறேன், கத்தறேன், பேசாமலே இருக்கீங்களே? இதுக்கு என்ன அர்த்தம்?

''உனக்குத் தொண்டை கட்டட்டும்னு அர்த்தம்.''



''ரொம்பத் திமிர் பிடிச்சவங்க அந்தக் கம்பெனி! எவ்வளவு கெஞ்சியும் எனக்கு வேலே கொடுக்க மாட்டேன்னிட்டான்.''

''என்ன கம்பெனி?''

''அப்படியொண்ணும் பெரிய கம்பெனி இல்லே. வெறும் பிளேடு கம்பெனி தான்!''

''நீயா? அசடு. ஈ எறும்புக்குக் கெடுதல் பண்ணுதவளாச்சே நீ...''

''இல்லேப்பா... என் சினேகிதி சுபா இல்லே?...''

''ஆமாம்? உன்னேடு பரீட்சைக்குப் படிக்கிறதுக்காக இரண்டு மூனு நாள் ராத்திரி நம் வீட்டில் கூடத் தங்கினுளே? என்ன அவளுக்கு? அவளேப் பார்க்கணும் போலிருக்கா?''

''ஆமாம்பா... அவளுக்கு நான் ஒரு பெரிய தப்புப் பண்ணிட்டேன். அவள்கிட்டே மன்னிப்புக் கேட்டுக் கணும்...''

''என்னம்மா சுலோசஞ, என்னவோ பெரிய பெரிய வார்த்தையெல்லாம் சொல்லுகிருய்?''

''உங்களுக்குத் தெரியாதுப்பா. அவளே உடனே அழைச்சிட்டு வாங்க... அப்புறம் சொல்றேன்...'' அதற்கு மேல் பேச முடியாமல் அவள் களேத்துப் போய்க் கண்களே மூடிக்கொண்டாள்.

சுபாவின் வீடு எங்கே இருக்கிறது என்று சுப்பிரமணியத்துக்குத் தெரியாது. மகளின் கைப்பை, பர்ஸ், நோட்டுப் புத்தகம் முதலியவற்றைக் குடைந்து விலாசத்தைக் கண்டுபிடித்தார்.

ஓட்டமாய் ஓடி, சுபாவைக் கண்டுபிடித்து, அவள் அப்பாவிடம் சொல்லி, ஆஸ்பத்திரிக்கு அழைத்து வந்தபோது—

சுலோசஞவின் கதை முடிந்து விட்டிருந்தது.

''ஐயோ, சுபாவைப் பார்த்தாகணும் என்று சொன்னுயேம்மா? இதோ அழைச்சிட்டு வந்திருக்கேனே?'' என்று மட்டுமே சுப்பிரமணியம் கதறினுர்.

ஏதோ தப்புப் பண்ணிவிட்டேன் என்ருள் — அது என்னவென்று தெரியவில்லே. இந்தச் சுபா என்கிற பெண்ணும் அப்படி எதுவும் நினேப்பதாகத் தெரியவில்லே. தோழியின் சடலத்தின்மீது விழுந்து கதறு கதறென்று கதறுகிருள். 'சுலோசஞ உனக்கு ஏதோ தப்பு செய்தாளாமே,' என்று சொல்லி, இந்தப் பிரியத்தைக் கெடுக்க அவர் விரும்பவில்லே.

ஆனல் அந்த உறுத்தல் மட்டும் அவர் நெஞ்சை விட்டு அகலவில்லே.

இரண்டு முறை சுபாவின் வீட்டுக்குத் தற்செயலாகப் போகிற மாதிரி போனுர். பேச்சுக் கொடுத்தார். சுபா தன் சினேகிதியைப் பற்றிப் புலம்பிப் புலம்பி அழுதாளேயொழிய, வேறெதுவும் வித்தியாசமாகச் சொல்லவில்லே.

அதன்பின் அதிக நாள் அவர் சென்னேயில் தங்கியிருக்கவில்லே. நோயாளியாகிவிட்ட மனேவியைக் கிராமத்தில் அவளுடைய தாய் வீட்டில் ஒப்படைத்தார். கையில் பணம் இருந்தது. மனத்தில் நிம்மதி இருக்கவில்லே. எந்த ஊரில் வேண்டுமானுலும் ரயிலேறுவது, எந்த ஊரில் வேண்டுமானுலும் இறங்குவது என்று சுற்றிக்கொண்டிருந்த போதுதான் இப்போது போபாலுக்கு வந்தார்...

''அதோ அந்த வீடு...'' என்று சாவித்திரி அடையாளம் காட்டினுள் டாக்ஸிக்காரனுக்கு.

டாக்ஸி நின்றது. வீட்டுக்குள்ளிருந்து வந்த இளேஞனுக்கு ஒரே திகைப்பு, மகிழ்ச்சி.

''சாவித்திரி! என்ன இப்படித் திடீர்னு? யாரோடு வந்தாய்?''

அவள் சுருக்கமாய் விஷயத்தைச் சொல்ல, ''ரொம்ப நன்றி சார்... தெய்வம் மாதிரி வந்தீங்க... உள்ளே வாங்க,'' என்று சுப்பிரமணியத்தை அழைத்தான்.

அன்று இரவு அவர் அங்கே சாப்பிட்டுவிட்டுத் தூங்கினுர். மறுநாள் காலேயில் அவர் புறப்பட்டபோது சாவித்திரியின் கணவன் சொன்னுன்:

''எனக்கு ஒரு யோசனே, மிஸ்டர் சுப்பிரமணியம். நானும் என் சினேகிதர்கள் சிலருமாய் ஒரு டூரிஸ்ட் பஸ்ஸில் சுற்றுலா கிளம்ப இருந்தோம். இங்கே இந்தோர், மாண்டு, உஜ்ஜயினி என்று பல ஊர்கள் ரொம்ப நன்ருயிருக்கும். ஒரு வாரம் டூர் போவதாக இருந்தேன். சாவித்திரி திடீரென்று வந்துவிட்டதால் போக முடியாது. உடம்பு சரியில்லாததால் இவளே அழைத்துக் கொண்டும் போக முடியாது. டிக்கெட் வீணுகிறது. ரீஃபண்ட் பண்ண மாட்டார்கள். எனக்குப் பதில் நீங்கள் போய் விடுங்களேன்?''

சுப்பிரமணியம் சிறிது யோசித்தார். பிறகு சரி என்ருர்.

இந்தப் பயணம், தன் மகள் சொல்லாமலே இறந்துவிட்ட ஒரு ரகசியத்தைச் சொல்லப் போகிறது என்று அப்போது அவருக்குத் தெரியாது.

(தொடரும்)



# வைதேகி காத்திருந்தாள்

உதிரி உதிரியாய், சம்பந்தா சம்பந்தமில்லாமல் வெவ்வேறு சூழ்நிலையில் வெவ்வேறு ஆட்களைக் காட்டுகிறார்கள். அவர்கள் எல்லாம் யார் எவர் என்று நிதானிப்பதற்குள் பாதிக் கதை ஓடிவிடுகிறது.

தாடி மீசையுடன் அழுக்கு விஜய்காந்த், அவருக்குண்டான அடிதடிகளில் இறங்காததால், ஒரு வித்தியாசமான வீண். ஆனல் தா.மீ.மு.கா. (தாடி மீசைக்கு முற்பட்ட காதல்) தேவலாம்.

விஜய்காந்த் கரம் பிடிக்கவிருந்த புதுமுகம் வைதேகியின் கதையில் சரக்கு இருக்கிறது. கல்யாணத்துக்கென்று நிச்சயிக்கப்பட்ட காதலனின் புகைப் படத்தைப் பார்க்காமல் அவசர புத்தியுடன் நச்சுத் தழையை அரைத்துக் குடித்த பின், தன் காதலனும் தன்னை மணக்கவிருந்த நபரும் ஒருத்தரே என்று புகைப் படத்தைப் பார்த்தவுடன் அறிந்து துடிப்பதும், அண்டா குண்டா தண்ணீரையெல்லாம் உருட்டிக் கொண்டு விழுந்து மரணப் போராட்டம் நடத்துவதும், ஓடிவந்த விஜய்காந்த் காதலியைக் காப்பாற்ற ஒரு டம்ளர் தண்ணீர் சமயத்துக்குக் கிடைக்காமல் தவிப்பதும் பரபரப்பான—சுவையான இடம்.

தண்ணீரில்லாமல் இவர் காதலியை இழந்தது போலவே, அதிகத் தண்ணீர் இருந்ததால் ரேவதி தன் கணவனை இழக்க நேரிட்டதாக அமைத்திருப்பது நயமான கதையம்சம்.

மண நிகழ்ச்சியின் போதும் அதற்கப்புறம் குளத்தங்கரைக் கோலாகலங்களிலும், பரிசல் பயணத்தின் போதும் கணவனது முகத்தை ஒரு தரம் கூட நிமிர்ந்து பார்க்காமல் அவ்வளவு நாணமும் வெட்கமும் சிரிப்புமாக ரேவதியால் தான் முகம் பொத்திக் கொள்ள முடியும்.

வீட்டில் குடியிருக்கும் வாலிபன் தன்னைத் தனியே சந்திக்கும்படி அழைத்ததும் புளகித்துப் போய், அவர் காதலிக்கும் பெண் வேறு என்று அறிந்தவுடன் அவர் கண்ணில் படாமல் ஏமாற்றத்தையும் கண்ணீரையும் ஒரே சமயத்தில் குபுக்கென்று வெளிப்படுத்துகிறாரே, மனசைத் தொடுகிறது.

வெண்ணிற ஆடை ரேவதி தோன்றும் போதெல்லாம் மட்டும் டைரக்டருக்கு 'ஆர்ட்' உணர்வு தலைதூக்கிவிடுகிறது போலும். வித்தியாசமான குளோசப்கள். பின்னணியில் ராக ஸ்வரங்கள். பாராட்டலாம்.

இறந்து போன விஜய்காந்தின் கையில் வெட்டரிவாளைக் கொடுத்து ஊர்க் காவல் தெய்வம் மாதிரி நிற்க வைத்துக் காதலர்களின் திருமணத்தை ரேவதி முடிப்பது ஓரளவு விறுவிறுப்பு. ஆனல் வில்லன் (ராதா ரவி) கைச் சொடுக்கும் நேரத்தில் மனம் மாறி, 'நான் தப்புப் பண்ணிட்டேன். என்னை மன்னிச்சிடுங்க,' என்பது பொருத்தமில்லை—அதுவும் ஒரு கொலையைச் செய்துவிட்டு!

கணவனை இழந்த ரேவதியின் மனத்தில் காதலியை இழந்த விஜய்காந்த்துக்கு என்ன இடம், காதலியை இழந்த விஜய்காந்த் ரேவதியைக் காதலிக்கிறாரா, இவர் நினைவில் அவர் வந்து ஆடுகிறாரா, அவர் நினைவில் இவர் ஆடுகிறாரா—இதெல்லாம் டைரக்டருக்கே புரிந்த சமாசாரங்கள்.

# என்னைத் தவிர

**13**

இந்தோரில் ஓட்டல் மிகவும் வசதியாக இருந்தது. சொகுசு பஸ்ஸில் ஊருக்குள் நுழைந்தபோது சுப்பிரமணியத்துக்கு அந்த நெரிசல் தெருக்களையும், பிரயாணிகளைக் கண்ட இடத்தில் ஏற்றிக் கண்ட இடத்தில் இறக்கிக் கொண்டிருந்த டெம்போ வாகனங்களையும் கண்டபோது முதலில் எரிச்சலாகத்தான் இருந்தது. பிறகு நகரத்துக்கு வெளியே அமைதியான சூழ்நிலையில் அமைந்திருந்த விஸ்தாரமான லாட்ஜில் சௌகரியமான அறையைக் கொடுத்துத் தங்கச் சொன்னதும் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டார்.

சாவித்திரி என்ற அந்தப் பெண்ணின் கணவன் மத்திய அரசில் பெரிய அதிகாரியாக இருக்கிறவன். ஆகவே அவனையொத்த அதிகாரிகள்தான் டூருக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். மத்திய அரசு அலுவலகமாகையால் பல ஊர்க்காரர்கள் மொத்தம் முப்பத்தைந்து பேர் இருந்தார்கள். மூன்று பேர் பெண் அதிகாரிகள். சுற்றுப் பயணத்துக்காக, தலை தெறிக்கும் வேகத்தில் ஓடினால்கூட ஆட்டம் தெரியாத சொகுசு பஸ்ஸை அமர்த்தியிருந்தார்கள்.

இந்தோரில் முதல் நாள்.

ஓட்டலில் சாப்பிட்டு முடிந்ததும் அவரவர் தங்கள் தங்கள் அறைக்குத் திரும்ப வேண்டியதுதானே என்று நினைத்தார் சுப்பிரமணியம். ஆனால் மற்றவர்கள் அப்படி நினைக்கவில்லை. எல்லாரும் அரட்டை அடிக்கவும் சீட்டு ஆடவும் ஆர்வமாயிருந்தார்கள்.

''என்ன மிஸ்டர் சுப்பிரமணியம்? எங்கே புறப்பட்டு விட்டீர்கள்?'' என்று முதுகில் தட்டினார் குழுவின் தலைவர் விஷ்ணுதாஸ்.

''இல்லை.... எனக்குக் களைப்பாயிருக்கிறது. படுத்துக் கொள்ளலாம் என்று நினைக்கிறேன்,'' என்றார் சுப்பிரமணியம் தயக்கத்துடன்.

''நல்ல வேலை செய்தீர்கள்! இங்கே முப்பத்திரண்டு பேர் பேசிக் கொண்டு உட்கார்ந்திருக்கப் போகிறோம். நீங்கள் மாத்திரம் போனால் எப்படி?'' என்று சுப்பிரமணியத்தின் கையை இறுக்கிப் பிடித்து ஹாலுக்கு இழுத்தார் விஷ்ணுதாஸ்.

வேறு வழியில்லாமல் அவரைப் பின்தொடர்ந்து சென்றபோது, ஹாலில் நீள் வட்டமாக நாற்காலியைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்து சிரித்துப் பேசிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள் எல்லாரும்.

மூன்று பெண்களில் ஒருத்தி, ''வெல்கம் மிஸ்டர் சுப்பிரமணியம்! இப்படி வாருங்கள்,'' என்று தனக்குப் பக்கத்து நாற்காலியைக் காட்டினாள். அவளுக்கு நாற்பது வயது இருக்கும். ஆனால் இருபது வயதுப் பெண் போல மேக்கப் போட்டுக் கொண்டிருந்தாள். உதட்டுக்குப் பூசியிருந்த சிவப்புச் சாயம் பயங்கரமாகப் பளபளத்தது.

''தாங்ஸ் ஷாலினி,'' என்று சொல்லிவிட்டு அவளருகே அமர்ந்தார் சுப்பிரமணியம்.

சுவரிலிருந்த கடியாரம் மணி பதினொன்றைக் காட்டிக் கொண்டிருந்தது. பேச்சுக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து கொண்டிருந்தது.

திடீரென்று விஷ்ணுதாஸ் எழுந்தார். ''எனக்கு ஒரு ஐடியா தோன்றுகிறது,'' என்றார்.

''அவுட் வித் இட்!'' என்று யாரோ ஒருவர் சத்தமிட, எல்லாரும் கை தட்டினார்கள்.

''நாம் இங்கே பல மொழிக்காரர்கள் இருக்கிறோம். ஏன் அவரவர் மொழியில் ஒரு பாட்டுப் பாடக் கூடாது? பாட்டுத் தெரியாவிட்டால் கதை, டிராமா—ஏதாவது ஒன்று!'' என்றார் விஷ்ணுதாஸ்.

கிருஷ்ணகுமார்

''பிரமாதம்! அருமையான ஐடியா!'' என்று கைதட்டினர்கள் அத்தனை பேரும். சுப்பிரமணியம் பேசாமலிருந்தார். அவருக்கு அலுப்பாயிருந்தது.

''முதலில் நானே ஆரம்பிக்கிறேன்,'' என்ற விஷ்ணுதாஸ் இந்தியில் ஒரு கவிதையைச் சொன்னர். வேறு மொழிக்காரர்கள் என்று பெயர்தானே ஒழிய எல்லாருக்கும் இந்தி தெரிந்திருந்தது. ''ஆகா! வாஹ்ர வா!'' என்று ரசித்துப் பாராட்டினர்கள்.

வங்காளிக்காரர் ஒருவர் தாகூரின் பாட்டை ராகத்தோடு பாடினர். குஜராத்திக்காரர், ''எனக்குப் பாடத் தெரியாது. எங்கள் கிராமப் புறத்தில் நடைபெறும் நாடகத்திலிருந்து ஒரு காட்சியை நடித்துக் காட்டுகிறேன்,'' என்று சொல்லி மோனே ஆக்டிங் அட்டகாசமாகச் செய்தார். இன்னெருவர்—தனக்குப் பூர்வீகம் கேரளம் என்பதைத் தெரிவித்து, தன் பாட்டி சொல்லும் பாட்டு என்று கூறி ஒரு பாட்டைப் பாடினர். கையில் சம்பகப் பூவை வைத்துக் கொண்டு ஒரு காதலன் தன் காதலியைத் தேடிக் கொண்டு போகிருன் என்பது அந்தப் பாட்டின் கருத்து. அவருக்கு வயது ஐம்பது இருக்கும். ''இந்த வயதில் உமக்குக் காதல் பாட்டா?'' என்று எல்லோரும் அவரைக் கலாட்டா செய்தார்கள்.

என்ன சாக்குச் சொல்லிச் சமாளிக்கலாம் என்ற யோசனையில் மூழ்கியிருந்தார் சுப்பிரமணியம். தனக்குப் பக்கத்திலிருந்த ஷாலினி எழுந்து ஒரு பாட்டைப் பாடிய போது தான் விழித்துக் கொண்டார். இவ்வளவு சீக்கிரத்தில் தன் முறை வருமென்று நினைக்கவில்லை. என்ன செய்யலாம் என்று தீர்மானிப்பதற்குள் ஷாலினி ஏதோ ஒரு பாட்டைப் பாடி முடித்துவிட்டு உட்கார்ந்துவிட்டாள்.

சுப்பிரமணியம் தானுகவே எழுந்து பாடுவார் என்று எதிர்பார்த்து எல்லோரும் காத்திருந்தார்கள். ஆனல் அவரோ முகத்தில் ஒரு தயக்கமான சிரிப்புடன் பேசாமலே உட்கார்ந்திருந்தார்.

''எஸ் மிஸ்டர் சுப்பிரமணியம்! யுவர் டர்ன்!'' என்ருர் விஷ்ணுதாஸ்.

''நோ நோ. மன்னிக்கணும். எனக்குப் பாடத் தெரியாது.''

''பரவாயில்லை. சும்மா ஏதாவது பாடுங்கள்!'' என்று மூன்று நாலு பேர் சேர்ந்து சொன்னர்கள்.

''ஊகூம்.... எனக்குப் பாட்டுப் பாடவும் தெரியாது. குரலும் நன்ருயிருக்காது.''

''இங்கே மட்டும் எல்லோரும் சங்கீத வித்வான்களா என்ன?'' என்று விஷ்ணுதாஸ் கடிந்து கொண்டார். ''சும்மா ஏதோ கம்பெனிக்காகப் பாடுகிறோம். அவ்வளவுதான். ஊம் ஊம். கம் ஆன்!''

சுப்பிரமணியம் தன் இருக்கையில் நெளிந்தார். அருகிலிருந்த ஷாலினி, ''என்ன மிஸ்டர் சுப்பிரமணியம். நீங்கள் தமிழர்தானே? ஒரு பாரதியார் பாட்டைப் பாடுங்களேன்?'' என்ருள்.

''பாரதி....''

''கொஞ்ச நாள் முன்பு நூற்றுண்டு விழா கொண்டாடி, ஸ்டாம்ப்பெல்லாம் கூடப் போட்டார்களே! பாரதியைப் பற்றி உங்களுக்கு நான் சொல்ல வேண்டியிருக்கிறதே!'' என்று சிரித்தாள் ஷாலினி...

பாரதி....

மின்னலடிக்கிற மாதிரி அவருக்குத் தன் மகள் சுலோசனவின் ஞாபகம் வந்தது.

கல்லூரிப் பேச்சுப் போட்டி, பாட்டுப் போட்டி எல்லாவற்றிலும் கலந்து கொள்வாள் அவள். அவள் வாங்கிய கோப்பைகளும் பதக்கங்களும் இன்னும் கூட வீட்டில் அலமாரியில் இருக்கின்றன.

மூன்று வருடத்துக்கு முன்னல் சுலோசன ஒரு பாட்டுப் போட்டியில் கலந்து கொண்டாள். பாரதியார் பாடல் போட்டி. தெரிந்த ஒரு சங்கீத வித்வானைப் பிடித்து, சில பாடல்களுக்கு மெட்டுப் போட்டுத் தரச் சொல்லி, தினம் தினம் பாடிப் பயிற்சி செய்து வந்தாள்.

அன்று அவர் அலுவலகத்திலிருந்து திரும்பி, டிபன் சாப்பிட்டுவிட்டு, அலுப்புடன் ஈஸி சேரில் சாய்ந்த சமயம், ''அப்பா, ஒரு ஹெல்ப்,'' என்றவாறு சுலோசன வந்தாள்.

''என்னம்மா?''

அவள் அவர் கையில் ஒரு புத்தகத்தை நீட்டி, ஒரு பக்கத்தைப் பிரித்துத் தந்து, ''இந்தப் பாட்டை நான் சரியாகச் சொல்கிறேன என்று பாருங்கள்,'' என்ருள்.

''என்னம்மா நீ,'' என்று மகளைச் செல்லமாய்க் கோபித்த போதிலும், அவள் பாட ஆரம்பித்ததும் அந்தக்

குரலின் இனிமையில் எல்லா அலுப்பையும் சலிப்பையும் மறந்தார்.

சோபாவின் நுனியில் உட்கார்ந்து கொண்டு பாடும் மகளின் முகத்தையும் புத்தகத்தின் வரிகளையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தார். மூன்று நான்கு முறை அவள் திரும்பத் திரும்பப் பாடியதாலும், பாட்டின் அழுத்தமான கருத்தினாலும் அந்த வரிகள் அவருக்குள் ஆழப் பதிந்துவிட்டன.

... தேடிச் சோறு நிதம் தின்று —பல
சின்னஞ்சிறு கதைகள் பேசி—மனம்
வாடித் துன்பமிக உழன்று—பிறர்
வாடப் பல செயல்கள் செய்து—நரை
கூடிக் கிழப் பருவமெய்தி—கொடுங்
கூற்றுக்கிரையெனப் பின்மாயும்—பல
வேடிக்கை மனிதரைப் போல—நான்
வீழ்வேனென்று நினைத்தாயோ?.....

''சுப்பிரமணியம்! வீ ஆர் ஆல் வெயிட்டிங்!'' என்றார் விஷ்ணுதாஸ்.

சுப்பிரமணியத்துக்கு அந்த வரிகள் அப்படியே நினைவு வந்தன. அன்று சுலோசனா பாடிய மெட்டும் அப்படியே ஞாபகம் வந்தது.

தொண்டையைக் கனைத்துக் கொண்டு, மெல்லிய குரலில் பாடி முடித்தார்.

கைதட்டல்கள் பலமாய் எழுந்தன. விஷ்ணுதாஸ், ''சுப்பிரமணியம், ஒரு கோரிக்கை,'' என்றார்.

''இன்னொரு பாட்டா! ஐயோ! என்னால் முடியாது,'' என்று கண்டிப்பாக மறுத்தார் அவர்.

''இல்லையில்லை. இப்போது பாடினீர்களே, இந்தப் பாட்டுக்கு இங்கிலீஷில் அர்த்தம் சொல்லுங்கள்.''

நல்ல வேளை, பாடச் சொல்லவில்லை என்று அவருக்கு ஆறுதலாய் இருந்தது. ஆனால் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துச் சொல்வதும் அவ்வளவு சுலபமாயிருக்கவில்லை. முடிந்தவரையில் சொல்லிச் சமாளித்தார்.

மறுபடியும் கைதட்டினார்கள்.

''படுத்துக்கொள்ளப் போகலாமில்லையா?'' என்று எழுந்திருக்க முயன்றார் அவர்.

''சரிதான்! இனிமேல்தானே பார்ட்டி ஆரம்பம்!'' என்று அவர் காதோடு கூறிச் சிரித்தாள் ஷாலினி.

''என்ன பார்ட்டி?'' என்று அவர் நிமிர்ந்த அதே சமயம் வெயிட்டர்கள் மேஜை மீது மதுபான வகைகளைப் புட்டி புட்டியாய்க் கொண்டு வந்து வைத்தார்கள்.

திடுக்கிட்டார் சுப்பிரமணியம். ''எனக்குப் பழக்கமில்லை. நான் போகிறேன்.''

''சும்மா கொஞ்சம் ருசியுங்கள். ஒன்றும் ஆகிவிடாது. நீங்கள் லிமிட்டை மீறுகிற மாதிரி தோன்றினால் நானே தடுத்து விடுகிறேன்,'' என்றாள் ஷாலினி.

''ஊகூம். ஒரு சொட்டுக்கூடச் சாப்பிட மாட்டேன்,'' என்று சுப்பிரமணியம் மறுத்துக் கொண்டிருந்த போதே, விஷ்ணுதாசும் அவருடைய நெருங்கிய நண்பர்களும் சிலரும், ஒவ்வொருவரையும் அணுகி, அவர்கள் விருப்பத்தை அறிந்து கொண்டு, அதற்கேற்ப மதுவைக் கலந்து தர ஆரம்பித்தார்கள்.

''உங்களுக்கு எப்படி?'' என்றார் விஷ்ணுதாஸ் சுப்பிரமணியத்தை நெருங்கியதும்.

''மன்னிக்கணும். எனக்குப் பழக்கமில்லை.''

''ஆல் ரைட், ஆல்ரைட்,'' என்றார் விஷ்ணுதாஸ். ''பழக்கமில்லாத வரை வற்புறுத்தக் கூடாது. ஏதாவது ஸாஃப்ட் ட்ரிங்க் சாப்பிடுங்கள்.''

சுப்பிரமணியம் ஒரு கிளாஸ் ஆரஞ்சு ஜூஸை உறிஞ்சிக் கொண்டே

---

''வீட்டைவிட்டு ஓடிப்போன என்னோட பையன் ஒரு லட்ச ரூபாய் கையிலே வச்சிருக்கேன்னு தபால் போட்டிருக்கான். ராஸ்கல்!''

''அப்படீன்னா அவனைப் பாராட்டாமே எதுக்குத் திட்டறீங்க?''

''அவன் வீட்டை விட்டுப் போனப்போ, ரெண்டு லட்ச ரூபாயை ரொக்கமாத் தூக்கிட்டுப் போனவனுங்க!''

—ஜா. ரவி.



சுற்றியிருந்தவர்களைப் பார்த்தார். மது உள்ளே இறங்க இறங்க, பேச்சும் சிரிப்பும் அட்டகாசமாகப் புறப்பட்டன. பெண்கள் கூட மது அருந்துவதைப் பார்த்து அவருக்குக் கோபமாகவும் அருவருப்பாகவும் இருந்தது. ஆனால் ஒரு மரியாதைக்காக, அளவோடு குடித்து நிறுத்திக் கொண்டார்கள். ஆண்கள்தான் அதிக ஆர்ப்பாட்டம். குறிப்பாக, இரண்டு வங்காளிகள் கிளாசுக்கு மேல் கிளாசாகச் சாப்பிட்டுவிட்டு, ஒருவர் கழுத்தை ஒருவர் கட்டிக் கொண்டு தள்ளாடித் தள்ளாடி டான்ஸ் ஆட ஆரம்பித்தார்கள்.

அவர்களில் வயதில் இளைஞனாக இருந்தவன் சுப்பிரமணியத்திடம், கையில் பிடித்த கிளாசுடன் வந்தான். "சுப்பிரமணியம், உம்ம பாட்டு ரொம்ப நன்றாயிருந்தது," என்றான்.

"தாங்ஸ்," என்றார் அவர். அவனிடமிருந்து வீசும் வாடையைத் தாங்க முடியவில்லை.

"ரொம்ப நன்றாயிருந்தது," என்றான் அவன் மறுபடியும்.

"தாங்ஸ்," என்று மறுபடியும் சொல்லிவிட்டு அவனிடமிருந்து நழுவ முயன்றார் அவர்.

"ரொம்ப நன்றாயிருந்தது என்கிறேன். பேசாமல் போகிறீரே?" என்றான் அவன் கோபமாக.

"நான்தான் தாங்ஸ் சொன்னேனே? வழியை விடு."

"பாட்டு ரொம்ப நன்றாயிருந்தது இல்லையா? அதற்கு நான் பரிசு தர வேண்டாமா? இந்தாருங்கள்," என்று மது கிளாஸை அவர் முகத்தெதிரே நீட்டினான் அவன்.

"வேண்டாம்," என்று மரியாதையாக மறுத்தார் சுப்பிரமணியம்.

"என்ன வேண்டாம்? நான் சொல்கிறேன்—குடிக்கப் போகிறீரா இல்லையா?" என்று கிளாஸை அவர் உதட்டில் வைத்தான் அவன்.

சுப்பிரமணியத்துக்குக் கோபம் வந்துவிட்டது. "சீ!" என்று அவனைப் பிடித்துத் தள்ளினார். கிளாஸ் தரையில் விழுந்து உடைந்தது. செக்கச் செவேலென்ற மது தரையெங்கும் பரவியது.

விஷ்ணுதாஸ் ஓடி வந்தார். வங்காளிக்காரன் பெரும் போதையில் இருப்பதைக் கண்டுகொண்டு, அவனைத் திட்டி அனுப்பிவிட்டு, சுப்பிரமணியத்திடம், "ஐம் ஸாரி, சுப்பிரமணியம். இந்த ஆள் எப்போதும் இப்படித்தான். பெரிய தொல்லை இவனால். நீங்கள் மனசில் வைத்துக் கொள்ளாதீர்கள்," என்றார்.

"பரவாயில்லை," என்று சொல்லிவிட்டுத் தன் அறைக்குச் சென்றார் சுப்பிரமணியம்.

அவர் ஒரு தீர்மானத்துக்கு வந்துவிட்டார்.

ஏதோ மனத்துக்கு ஆறுதலாக இருக்குமென்று எண்ணி இந்த உல்லாசப் பயணக்காரர்களுடன் சேர்ந்தது தவறு. இவர்களுடைய போக்குக்கும் நமக்கும் ஏணி வைத்தாலும் எட்டாது. அனாவசியமாக நம் நிம்மதியும் கெட்டு, அவர்களுடைய சந்தோஷத்தையும் கெடுத்துக் கொண்டிருப்பானேன்?

## ஆறுதல் தந்தது மட்டுமல்ல...



காதில் விழுந்த செய்தி எல்லாம் சரிதான். (குமுதம் 1.11.84 இதழ்.)

ஆனால் அதில் குறிப்பிட்டிருப்பது போல அமைச்சர் திருநாவுக்கரசும் அமைச்சர் சௌந்தரராஜனும் கொ.ப.செ.வுக்கு ஆறுதலும் தகவலும் மட்டும் தந்து கொண்டிருக்கவில்லை.

அமைச்சர் திருநாவுக்கரசு அப்பல்லோ மருத்துவமனையில் இரவு பகல் பாராமல், கண் விழித்து முகச் சவரம் கூடச் செய்து கொள்ளாமல் முதல்வரின் உடல் நலம் தெளிவு பெறக் கவலையுடன் காத்திருந்தார்.

அதேபோல அமைச்சர் சௌந்தரராஜனும் (உள்ளாட்சித் துறை) திருப்பதி, மூகாம்பிகை (குன்றத்தூர்) கோவில்களுக்கெல்லாம் சென்ற வண்ணம் ஓயாது பிரார்த்தனை செய்து கண்ணீர் மல்கப் பிரசாதங்கள் கொண்டு வந்து குவித்த வண்ணம் இருந்தார்.

—ரா. ராமச்சந்திரன், சென்னை.

எங்கேயிருந்தோ வந்தோம். எங்கேயோ போய்க் கொண்டிருந்தோம். நடுவிலே இந்தக் கோஷ்டியில் வந்து சேர்ந்து கொண்டது முட்டாள்தனம். இந்த முட்டாள்தனத்தை மேலும் நீடிக்க வேண்டாம். சத்தம் போடாமல் கிளம்பி விடலாம்.

படுக்கையிலும் கொடியிலும் கிடந்த தன் துணிமணிகளை எடுத்துப் பெட்டிக்குள் அடைத்துக் கொண்டார். குளியலறை ஸ்டாண்டில் இருந்த ஷேவிங் செட்டையும் சீப்பையும் சோப்பையும் எடுத்துக் கொண்டார்.

திரும்பியபோது ஷாலினி நின்றிருந்தாள்.

''நிம்மதியாகத் தூங்குங்கள் மிஸ்டர் சுப்பிரமணியம். அந்த மடையன் கிடக்கிறான். அவன் அநாகரிகமாக நடந்து கொண்டதையெல்லாம் மறந்துவிடுங்கள். காலையில் போதை தெளிந்தும் அவனே உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்வான்,'' என்றாள்.

நாளைக் காலை அவன் மன்னிப்புக் கேட்க வரும்போது நான் இங்கே இருக்க மாட்டேன் என்று எண்ணிக் கொண்டார் அவர்.

''உங்களுக்கு ஒரு விஷயம் சொல்லட்டுமா?'' என்றாள் அவள்.

''என்ன?''

''நான் இந்த டூரில் வருவதாக இல்லை. கூப்பிட்ட போது வரவில்லை என்று கூடச் சொல்லிவிட்டேன். பிறகுதான் இந்தோர் மஹந்த்தைப் பார்க்கலாமென்று சேர்ந்து கொண்டேன்.''

''யார்?''

''இந்தோர் மஹந்த். பெரிய சாமியார். அவர் இந்த வட்டாரத்தில்தான் எங்கோ இருக்கிறார். சரியான விலாசம் தெரியவில்லை. அவரைப் பார்த்து ஆசிர்வாதம் வாங்கிக் கொண்டால் எல்லாக் கஷ்டங்களும் தீருமென்று சொல்வார்கள். இந்த டூரில் கலந்து கொண்டால் எங்கேயாவது அவரைப் பார்க்கலாமென்றுதான் வந்திருக்கிறேன்...''

சுப்பிரமணியத்துக்கு அவள் பேச்சில் புத்தி செல்லவில்லை.

''இந்தோர் மஹந்த்.... இந்தோர் மஹந்த்....

எங்கேயோ இந்தப் பெயரைக் கேள்விப்பட்டிருக்கிறோமே... எங்கே?... எப்போது?

சட்டென்று ஞாபகம் வந்தது.

ஒரு நாள் சுலோசனா, ''இந்தோர் மஹந்த் என்று ஒரு பெரியவர் வந்திருக்கிறாராம், அப்பா. நான் போய்ப் பார்க்கப் போகிறேன்,'' என்று சொன்னதும்....

''உனக்கு ஏனம்மா இந்த வயசிலே சாமியார் சமாசாரங்கள்?'' என்று அவர் சிரித்ததும்....

''ஒரு சொந்தப் பிரசினை இருக்கிறது, அப்பா,'' என்று அவள் பதிலளித்ததும்....

பிறகு அவளிடம் அதைப் பற்றி அவர் கேட்க மறந்துவிட்டதும்....

சில நாளைக்கெல்லாம் விஷக் காய்ச்சலில் அவள் இறந்து போனதும்...

எல்லாம் அடுக்கடுக்காய் அவருக்கு நினைவு வந்தன.

''நான் வருகிறேன் சுப்பிரமணியம். எல்லாவற்றையும் மறந்துவிட்டுத் தூங்குங்கள்,'' என்று சொல்லிவிட்டு ஷாலினி போய் விட்டாள்.

சுப்பிரமணியம் பெட்டியைத் திறந்தார். உள்ளேயிருந்த துணிமணிகளை மறுபடி ஸ்டாண்டில் போட்டார். ஷேவிங் செட்டையும் சோப்பையும் சீப்பையும் கொண்டு போய் வைத்தார்.

அந்த இந்தோர் மஹந்த்தைப் பார்த்தாக வேண்டும்.... பார்த்தாக வேண்டும்....

கட்டிலில் படுத்தார்.

(தொடரும்)

அவர்: வம்சவிருத்தி இல்லாத வீடு ஒண்ணு வாடகைக்கு இருந்தால் சொல்லுங்களேன்.

தரகர்: எதுக்குங்க?

அவர்: எட்டே வருஷத்திலே ஆறு குழந்தைகளைப் பெற்ற என் மாப்பிள்ளையைக் குடிவைக்கத்தான்.

—பி.ஆர். ராஜகோபால்.



# ஒரு மிட்டாய் கூடவா கொடுக்கக் கூடாது?

வழும் குழந்தைகளுக்குப் போட்டி வைத்துவிட்டு, ஒரு மிட்டாய்கூடக் கொடுக்காத கஞ்சன் நீங்கள். அந்தக் குழந்தைகளில் இரண்டு குழந்தைகள் அழும் சத்தம் எங்களுக்கே கேட்கிறதே!

மன்னார்குடி. டி.எஸ். பிரகாசர்.

பழமொழிக்குத் தப்பு மொழி

'லேட்ஸ் ஆன்' பகுதியில் அம்பிகா சொன்னதாக ஒரு பழமொழி கூறி அதற்கு அர்த்தம் 'இனிப்பாயிருக்கிறதென்று முழுங்கவும் முடியவில்லை. கசப்பாயிருக்கிறதென்று துப்பவும் முடியவில்லை' என்று குறிப்பிட்டிருந்தீர்கள். ஆனல் அம்பிகா கூறிய பழமொழியின்படி, 'இனிப்பாயிருக்கிறதென்று துப்பவும் முடியவில்லை, கசப்பாயிருக்கிறதென்று முழுங்கவும் முடியவில்லை' என்பதே சரியான மொழிபெயர்ப்பு ஆகும்.

ஈரோடு—1 ப. ஜேக்கப் ஜான்

இட்டிலிக்கு ஏன் பஞ்சம்?

பழனியில் இரண்டு இட்டிலிக்கு மேல் தருவதில்லை என்று செய்தி படித்தேன். இட்லியையே கொடுத்தால், விலை காரணமாக மற்றப் பல காரங்கள் விலையாவதில்லையாம்.

பறங்கிப்பேட்டை ஹேமா பாபு

ஓசி கிடைக்கவில்லையா?

பெற்றல் இரட்டைப் பிள்ளை இல்லாவிட்டால் மலடி என்பது போல, தீபாவளிக்கு இவ்வளவு படங்கள் வந்திருக்கையில் எந்தப் படத்திற்கும் விமரிசனம் தரவில்லையே, ஏன்? யாரும் ஓசிப் பாஸ் தரவில்லையா?

கோவை—2 சுந்தர் சுந்தரி

ஐந்து நிமிடக் கதை

'அந்த ஐந்து நிமிடம்' கதை உண்மையில் நல்ல கதை. மிகவும் சஸ்பென்ஸாக இருந்தது.

பட்டிவீரன்பட்டி சுப. மாரிமுத்து

கதாநாயகி இருட்டில் நின்ற தோற்றம் ஓவியர் கண்ணுக்கு மட்டும் எப்படித் தெரிந்தது? உம்முடைய வக்ர புத்தியைச் சாட எத்தனை தூர்வாசர் வந்தாலும் போதாது.

தர்மபுரி லலிதா செல்லப்பா

சில்லறைச் சந்தோஷம்

ஹம்ஸாவின் சில்லறை சிறுகதை அருமை.

சின்னசேலம்—1 எம்.ஏ. பாஷா

ஒரு அசடு அப்பா. அவருக்கு ஒரு இளம் பெண். அவள் ஒரு இளைஞனைக் காதலித்திருப்பாள்... இந்தத் 'தீமை' வைத்து ஹம்ஸா என்னும் ஹாக்ஸாவிடம் இன்னும் எத்தனை நாள் அறுபடுவது?

வீதிவிடங்கம் ஆனந்த்

தடி எங்கிருந்து வந்தது?

ஆந்திர முதல்வர் என்.டி. ராமராவ் அவர்கள்தான் எப்போதோ கைத்தடியை வீசி எறிந்து விட்டாரே! கார்ட்டூனில் ராமராவைக் கைத் தடியுடன் போட்டிருக்கிறீரே!

காரமடை சு. ஆறுமுகம்

சாந்தி ஆடியிருக்கிறர்

'டிஸ்கோ சாந்தி' இதுவரை எந்தத் தமிழ்ப் படத்திலும் வரவில்லை என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனல் 'காதுல பூ' என்ற படத்தில் மேல் லோகத்தில் நடனமாடியிருக்கிறர் அவர்.

பொள்ளாச்சி பூ.ப. ஆறுமுகம்

எந்தச் சங்கிலி ய

அணிந்திருக்கிறார் கி



(விடை)

விஜயகாந்த்:

நண்பர்களுக்கு உதவுவதற்காக அடிக்கடி கழற்றித் தந்துவிட்டுப் பிறகு என் வீட்டிலிருந்து பணம் வாங்கிக் கொள்வேன். வீட்டில் கண்டிக்க ஆரம்பித்தார்கள். இனி நானாக, சுயமாக, சம்பாதித்து நல்ல நிலைமைக்கு வந்த பிறகே செயின் அணிந்து கொள்வேன் என்று உறுதி பூண்டேன். ஐந்து, ஆறு மாதங்களுக்கு முன் செய்து போட்டுக் கொண்டதுதான் இந்தச் செயின்.

எஸ்.வி. சேகர்:

முன்பின் எனக்கு அறிமுகமில்லாத ஒரு பெண் ரசிகை ஒரு தினம் டெலிபோன் செய்தார்—கழுத்தில் புலி நகம் போட்ட செயின் அணிந்து கொண்டு நான் கார் ஓட்டிச் சென்றதைப் பார்த்ததாக. ''காரில் போனது வாஸ்தவம். ஆனால் நான் செயின் அணிகிற வழக்கம் கிடையாது,'' என்றேன். அந்த ரசிகை இந்தச் செயினைத் தன் அன்பளிப்பாக எனக்கு அனுப்பி வைத்து விட்டார். அந்த ரசிகையை நான் இதுவரை பார்த்தது கிடையாது.''

வெ.ஆ. மூர்த்தி:

பல வருடங்களாக அணிந்து கொண்டிருந்த தங்கச் சங்கிலி காலப் போக்கில், மிகவும் சின்னதாகி விட்டதால் (உடம்பு ஊதிப் போனதால்) அதை என் பையனுக்குக் கொடுத்து விட்டு இப்போது சற்றுப் பெரிய சங்கிலி போட்டுக் கொண்டிருக்கிறேன்.

பாண்டியன்:

மதுரையில் இருக்கும் போது, வீட்டில் எல்லோருக்கும் செயின் செய்து கொடுத்தார்கள். என் பெயர் பாண்டியன் என்று இருப்பதால் மீன் உருவம் பதித்த செயின் போட்டுக்கொண்டேன்.

...லி முருகன்:

சொந்தமாக நாடகக் குழு நடத்தி வந்த சமயங்களில் கை கடிக்கும் போதெல்லாம் இந்தச் செயின்தான் கை கொடுத்து உதவியது.

...போகராஜன்:

அலைகள் ஓய்வதில்லை படத்திற்காகச் சிலுவையுடன் கூடிய சங்கிலி அணிந்து ...ண்டேன். இது வேறு செயின்.



# என்னைத் தவிர

**14**

"இதுதான் சுல்தான் பாஸ் பகதூரின் அரண்மனை," என்று விவரித்தபடி முன்னால் சென்று கொண்டிருந்தார் விஷ்ணுதாஸ்.

எல்லாருக்கும் பின்னால் சுப்பிரமணியம் கடைசியாகப் போனார்.

இடிந்த கோட்டைகளும் பாழடைந்த அரண்மனைகளும் நிறைந்திருந்தது மாண்டு. குன்றுகள் பச்சைப் பசேலென்று கண்களை இதமாக வருடிக் கொடுத்தது. ஆனாலும் சுப்பிரமணியத்தின் மனம் அதிலெல்லாம் செல்லவில்லை.

இன்று காலை சொகுசு பஸ்ஸில் இந்தோருக்குப் புறப்பட்டது முதல் அவர் மனத்தில் ஒரு கேள்விதான் நிறைந்திருந்தது. 'இந்தோர் மஹந்த்தைத்தான் நானும் பார்க்கத் துடித்துக் கொண்டிருக்கிறேன் என்பதை அந்தப் பெண் ஷாலினியிடம் சொல்வதா வேண்டாமா?'

யோசித்துக் கொண்டே அன்றிரவு தூங்கிவிட்டார். மறுநாள் காலை மாண்டுவுக்குப் புறப்படவே சரியாகிவிட்டது.

சுமார் நூறு கிலோ மீட்டர் பயணம். வெய்யில் இல்லாத அருமையான பருவ நிலை.

பஸ் பூராவும் சிரிப்பும் கும்மாளமுமாக இருந்தது. ஒரு குஜராத்திக்காரர் இங்கிலீஷில் வேடிக்கைக் கவிதைகள் எழுதுகிறவராம். குழுவின் தலைவர் விஷ்ணுதாசின் மீது அவர் ஒரு பாட்டு எழுதிப் படிக்க, மகாராட்டியப் பெண்மணி அதற்கு எதிர்ப் பாட்டு பாட, கைத்தட்டல்கள் பிய்த்துக் கொண்டு கிளம்பின.

சுப்பிரமணியம் பஸ்ஸில் கடைசி சீட்டில் உட்கார்ந்திருந்தார். முன்னும் பின்னும் பக்கத்திலும் யாரும் இருக்கவில்லை. அந்த வெறுமை அவருடைய உள்ளத்திலும் இடம் பிடித்திருந்தது.

"என்ன சுப்பிரமணியம் சார், இப்படித் தனியாக உட்கார்ந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டபடி ஷாலினி அவரருகே வந்து உட்கார்ந்து கொண்டாள். அவரை உற்சாகப்படுத்த வேண்டியது தனது கடமை என்று நேற்றே அவள் தீர்மானித்துவிட்டாள் போலும். "அந்த வங்காளிக்காரன் சமாசாரத்தை இன்னுமா மனசில் போட்டு உழப்பிக் கொண்டிருக்கிறீர்கள்?" என்றாள்.

"சே, சே. அதெல்லாம் இல்லை," என்று நகர்ந்து அவளுக்கு இடம் கொடுத்தார். இவளுடைய தோற்றத்தையும் அலங்காரத்தையும் பார்த்து முதலில் மோசமாக நினைத்தோமே என்று எண்ணிக் கொண்டார். உள்ளுக்குள் கருணையும் மென்மையும் கொண்டவள் என்பது இப்போதல்லவா புரிகிறது?

"நீங்கள் எனக்கு ஒரு உதவி செய்ய வேண்டும்," என்றார்.

"என்ன மிஸ்டர் சுப்பிரமணியம்?"

"இந்தோர் மஹந்த்தைப் பார்க்க வேண்டுமென்று சொன்னீர்கள் இல்லையா? நானும் அவரைப் பார்த்தாக வேண்டும். அதற்கு நீங்கள் உதவி செய்ய வேண்டும்."

"கட்டாயம் மிஸ்டர் சுப்பிரமணியம், கட்டாயம்," என்றாள் அவள். "அவர் என்றைக்கு எந்த ஊரில் இருப்பார் என்று சொல்ல முடியாது. ஊர் தெரிந்தாலும் அவர் வசிக்கிற இடத்தைக் கண்டுபிடிக்க முடியாது. எங்கே வேண்டுமானாலும் இருப்பார். கவலைப்படாதீர்கள். நாம்

கிருஷ்ணகுமார்

இரண்டு பேருமாய்ச் சேர்ந்து கண்டுபிடிக்கலாம்.''

சுப்பிரமணியத்துக்கு மனத்திலிருந்து சற்றுப் பாரம் இறங்கியது.

மாண்டுவில் டூரிஸ்டுகளுக்கான பங்களாவில் இறங்கி, வசதியாகக் குளித்துச் சாப்பிட்டபின், இங்கே இடிந்த அரண்மனைகளையும் சரிந்த கோட்டைகளையும் பார்க்க வந்திருந்தார்கள்.

பாஸ் பகதூரின் அரண்மனையில் படிகளேறி மேல் மட்டத்தை அடைந்தார்கள். ஒரு பக்கத்தில் ரேவா குண்ட் என்ற நீர்த்தேக்கம் தென்பட்டது. விர்விர்ரென்று காற்று வீசியது. பசுமையான பள்ளத்தாக்கு விரிந்து பரந்து தெரிந்தது.

''அதோ அந்த உப்பரிகைதான் சுல்தான் பாஸ் பகதூர் தன் ராணி ரூப்மதிக்காகக் கட்டிக் கொடுத்தது. தினம் நர்மதை நதியைக் கண்ணால் கண்ட பிறகுதான் உணவருந்துவேன் என்று ஹிந்து ராணியான ரூப்மதி பிடிவாதம் பிடித்தாள். அதற்காகவே சுல்தான் இந்த இடத்தைக் கட்டித் தந்தார். அதோ பாருங்கள் — நர்மதை தெரிகிறது.....''

விஷ்ணுதாஸ் சுட்டிக் காட்டிய திசையில் சுப்பிரமணியம் பார்த்தார். மெல்லிய கோடாக நர்மதை நதி தென்பட்டது.

ஊர் சுற்றலில் பொழுது ஓடியது. ஒவ்வொரு தூணுக்கும் ஒவ்வொரு கல்லுக்கும் ஒரு கதை சொல்லிக் கொண்டிருந்தார் விஷ்ணுதாஸ்.

அன்று இரவு உல்லாசப் பயணிகளுக்காக ஒரு நாட்டிய நிகழ்ச்சி ஏற்பாடு செய்திருந்தார்கள்.

பாழடைந்த அரண்மனையின் விஸ்தாரமான முற்றத்தில் கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. சேட்டுக் கடைகளில் இருப்பது போல நீளமான வெள்ளைத் திண்டுகள் வட்டமாகப் போடப்பட்டிருந்தன. மின்சார விளக்குக் கிடையாது. வெளிச்சத்துக்காகப் பெரிய பெரிய லாந்தர் விளக்குகளை ஏற்றியிருந்தார்கள். ஆனால் மேலே மாட்ட முடியாதபடி விதானங்கள் மிக உயரத்தில் இருந்தன. லாந்தர்களைத் தரையிலேயே வைத்திருந்தார்கள்.

எல்லாரும் உட்கார்ந்தார்கள்.

மகள் சுலோசனாவையும் அவள் பார்க்கச் சென்ற இந்தோர் மஹந்த்தையும் சற்று நேரத்துக்குச் சுப்பிரமணியம் மறந்தார். இந்த விசித்திரமான சூழ்நிலையையும் வினோதமான அனுபவத்தையும் ரசிக்க முயன்றார்.

அது ஏதோ ஒரு கிராமத்துக் கூத்து என்று விஷ்ணுதாஸ் அறிவித்தார்.

முதலில் ஒரு பெண் தலையில் ஒரு சிறிய பானையுடன் வந்தாள். பாவாடைக்கு மேலாகச் சிவப்புத் தாவணி அணிந்திருந்தாள். தலை முக்காட்டை முகத்தின் பாதிக்கு இழுத்து விட்டிருந்தாள். தாவணியின் ஓரங்களில் இருந்த வெகு அகலமான வெள்ளைச் சரிகைகள் லாந்தர்களின் வெளிச்சத்தில் மின்னின. தலையில் வைத்திருந்த பானையைக் கீழே வைத்துவிட்டு, இந்தியில் மெதுவே பாடிக்கொண்டே அந்தப் பானையைச் சுற்றிச் சுற்றி வந்து கும்மியடித்தாள். அவள் குரல் மிக மிருதுவாக இருந்தது.

கொஞ்சம் கொஞ்சமாக அவளுடைய பாட்டில் வேகம் அதிகரித்தது. இப்போது நீள ஜிப்பா அணிந்த ஓர் இளைஞன் பிரவேசித்தான். குல்லாய் போட்டுக் கொண்டு, வேட்டியைக் கச்சமாகக் கட்டியிருந்தான் இவன். பின்னாலேயே ஒரு சிறுமி பூ வேலை செய்த குடையுடன் நுழைந்து பெரிய பெண்ணின் தலைக்கு மேலே பிடித்தாள். மூவருமாகப் பாடிக் கொண்டே ஆடினார்கள்.

தாவணி அணிந்த பெரிய பெண் இளமையான உடல் கட்டும் செக்கச் செவேலென்ற உருண்டையான முகமும் கொண்டவளாக இருப்பதைச் சுப்பிரமணியம் கவனித்தார். எல்லாரையும் போலக் கால்களை மடக்கிக் கொண்டு, திண்டில்



''அவனவன் மனைவி ஊருக்குப் போனால் சந்தோஷப்படுவான். நீங்க கவலைப்படறீங்களே?

அவள் சாப்பாட்டுக்கு என்ன செய்வாளோன்னு நினைத்தால்தான் கஷ்டமாக இருக்கிறது!''

# அந்த டிரைவருக்கு என்ன அக்கறை?

சமீபத்தில் பேருந்தில் திருநெல்வேலி சென்று கொண்டிருந்தேன். என் அருகில் அமர்ந்திருந்தவர் ஒரு பைண்ட் செய்த நாவலைப் படித்துக் கொண்டே வந்தார். திடீரென்று காற்றில் அந்தப் புத்தகத்திலிருந்து இரண்டு பக்கம் கிழிந்து ஜன்னல் வழியாகப் பறந்தது. அவர் டிரைவரிடம் போய்ச் சொல்ல உடனே டிரைவர் வண்டியை நிறுத்தினர். பறந்து சென்ற பக்கங்களை எடுத்துக்கொண்டு வந்தார். 'நல்ல டிரைவர்' என்று பிரயாணிகள் பாராட்டினர்கள். புத்தகம் படித்துக் கொண்டு வந்தவரிடம் நான், ''நல்ல டிரைவர். அதனால்தான் அந்த இரண்டு பக்கத்துக்காகப் பஸ்ஸை நிறுத்தினர்,'' என்றேன்.

''இல்லே சார். அந்தப் புத்தகம் டிரைவரோட புத்தகம்தான். பஸ்ஸில் ஏறும் போது அவர் கிட்டே படிக்கக் கேட்டேன். கொடுத்தாரு,'' என்றார் அவர்.

—சி. எல். ரவிச்சந்திரன்

---

இடது முழங்கையை ஊன்றி, பாதி படுத்த நிலையில் அவரும் இருந்தார். வெளியே ரேவா நீர்த் தேக்கத்தின் கருமையான நீர் சலசலத்துக் கொண்டிருப்பதையும், ரூப்மதியின் அரண்மனையிலிருந்து வருகின்ற காற்று ஈரத்தைச் சுமந்திருப்பதையும், பிறை நிலவின் மங்கலான உருவம் நீரிலே பிரதிபலித்து ஆடிக் கொண்டிருப்பதையும் அனுபவிக்க அனுபவிக்க, அவருக்குக் கொஞ்ச நேரத்துக்குத் தன் சொந்தக் கவலைகள் மறந்து போயின. இப்படியோர் அனுபவம் தன் நிஜ வாழ்க்கையில் கிடைக்கும் என்று அவர் எதிர்பார்த்திருக்கவில்லை. பிரம்மாண்ட பிரம்மாண்டமான வளைவு வாசல்களுக்கு வெளியே அங்கொன்று இங்கொன்றாக நட்சத்திரம் கண் சிமிட்டும் வானத்தை நோக்கிய போது, எல்லாமே ஏதோ கனவுகள் என்று தோன்றியது.

லாந்தரின் வெளிச்சத்தில் பாதி தெரிந்தும் பாதி தெரியாமலுமாகத் தபேலாக்காரரும் ஆர்மோனியக்காரரும் இசைத்துக் கொண்டிருந்தார்கள். அந்தப் பெரிய பெண் குனிந்து, காலில் குத்திய முள்ளை எடுக்க முயல்வது போல் அபிநயம் செய்ய, அந்த இளைஞன் அதற்கு உதவுகிறவன் போலத் தானும் குனிந்தான். அவள் நாணத்துடன் அவனை விட்டு ஒதுங்கிக் கொண்டாள்.

படபடவென்று எல்லோரும் கைதட்டிய போதுதான் சுப்பிரமணியத்துக்கு விழிப்பு ஏற்பட்டது. நாட்டியக்காரரையும் மற்றவர்களையும் பாராட்டிய வண்ணம் ஒவ்வொருவரும் எழுந்து கொண்டார்கள்.

''மிஸ்டர் விஷ்ணுதாஸ், ஒரு சின்ன வேண்டுகோள்,'' என்றான் அந்த வங்காளி இளைஞன்.

''என்ன?'' என்று சந்தேகத்துடன் கேட்டார் விஷ்ணுதாஸ். இந்தோரில் சுப்பிரமணியத்துடன் அவன் தகராறு செய்தது முதல் எல்லோருமே அவனிடமிருந்து நாலடி தள்ளித்தான் நடந்தார்கள்.

''ஒன்றுமில்லை. நான் ஒரு ஜர்னலிஸ்ட்—பத்திரிகை நிருபர் என்று உங்களுக்குத் தெரியுமில்லையா?'' என்றான் அவன்.

விஷ்ணுதாசுக்குக் கவலை அதிகரித்தது. ''தெரியாது.''

''கல்கத்தாவிலிருந்து வெளியாகும் ஒரு வார இதழுக்கு நான் அவ்வப்போது கட்டுரைகள், பேட்டிகள் அனுப்புவது உண்டு.''

''அப்படியா? சரி, அதற்கென்ன இப்போது? வாருங்கள், போகலாம்.''

''ஒரு வேண்டுகோள் என்றுதான் ஆரம்பத்திலேயே சொன்னேனே?'' என்று வங்காளி சிரித்தான். ''அந்த நாட்டியப் பெண்ணிடம் ஒரு சின்னப் பேட்டி எடுக்கலாம் என்று.....''

''ஓ, நோ!'' என்று விஷ்ணுதாஸ் மட்டுமல்ல, மற்றவர்களும் ஒரே குரலாக மறுத்தார்கள். இந்தக் குடிகாரன் பொதுவாகவே வம்பு பண்ணுகிறவன். அழகான இளம் பெண், அதிலும் ஒரு நாட்டியக்காரி, அகப்பட்டால் என்னவெல்லாம் அநாகரிகமாக நடந்து கொள்வானோ என்று அத்தனை பேருக்கும் அச்சம் ஏற்பட்டது.

வங்காளி அதைப் புரிந்து கொண்டு சிரித்தான். ''பயப்படாதீர்கள். நான் மதுவைத் தொட்டு இருபது மணி நேரத்துக்கு மேலாகிறது. இப்போது நல்ல சுய நினைவில்தான் இருக்கிறேன்.

கொஞ்சம் கூடப் போதை கிடையாது. வேண்டுமானால் பாருங்கள்,'' என்று கூறி, விஷ்ணுதாசை நெருங்கி வாயைத் திறந்து 'ஹா' என்று மூச்சு விட்டான்.

அந்த நாட்டியக்காரர்கள் இன்னும் செல்லவில்லை. எதைப் பற்றி விவாதம் நடந்து கொண்டிருக்கிறது என்பதை அறிய அவர்களுக்கும் ஆவல் ஏற்பட்டது. அருகில் வந்து கவனித்தார்கள்.

பத்திரிகையில் பேட்டி வருவதற்காகத்தான் வங்காளி கேட்கிறான் என்று தெரிந்ததுமே அவர்களுக்கு முகம் மலர்ந்ததுபோல் ஆகிவிட்டது. அந்த இளம் பெண்ணுக்கோ காலோடு தலை பரவசம். பேட்டியை ஏன் தடுக்கிறார் என்று விஷ்ணுதாசிடம் கோபம் ஏற்பட, ''பேட்டி கொடுக்க எனக்கொன்றும் ஆட்சேபம் இல்லை, சார்,'' என்றாள்.

விஷ்ணுதாசினால் ஒன்றும் செய்ய முடியவில்லை. ''ஓ.கே, ஓ.கே,'' என்று சொல்லிவிட்டு, எதற்கும் பாதுகாப்பாக அவர்களுக்குப் பக்கத்திலேயே நின்று கொண்டார். மற்றவர்களும் சூழ்ந்து நின்று கொண்டார்கள்.

வங்காளி இளைஞன் குடிகாரன் என்றாலும் விஷயம் தெரிந்தவன். நாட்டியம், கூத்து வகைகளைப் பற்றி அறிந்து வைத்திருந்தான். ஆகவே இது எப்படி, அது ஏன், இதற்கென்ன அர்த்தம் என்று அந்தப் பெண்ணிடம் கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டு, தன் பாக்கெட் நோட்டுப் புத்தகத்தில் குறித்துக் கொள்ளலானான்.

எதிர்பார்த்த ஆபத்து எதுவும் நேரவில்லை. இனியும் நேராது என்று தெரிந்ததும் ஒவ்வொருவராக விலகி, பெரிய வாசல்களின் அருகே நின்று ரேவா நீர்த் தேக்கத்தின் அழகை ரசிக்கத் தொடங்கினார்கள்.

சுப்பிரமணியமும் சென்றிருக்க வேண்டியவர்தான். அந்த இந்தி உரையாடல்களை அவரால் அதிகம் புரிந்து கொள்ளவும் முடியவில்லை. ஓரடி நகர்ந்தவர், அந்தப் பேச்சைக் கேட்டுச் சட்டென்று நின்றார்.

''உங்களுக்கு குரு யார்?'' என்று வங்காளி கேட்டான்.

''யாருமில்லை. எல்லாம் நானாகவே பார்த்துப் பார்த்துத் தெரிந்து கொண்டதுதான்.''

''அதெப்படி சாத்தியம்? இவ்வளவு தெரிந்து வைத்திருக்கிறீர்களே?''

''எல்லாம் இந்தோர் மஹந்தின் அருள்தான்.''

சரேலென்று சுப்பிரமணியம் நிமிர்ந்து நோக்க, அதே சமயம் ஷாலினியின் பார்வையும் அவரைச் சந்தித்தது. 'பொறுங்கள், நான் கேட்கிறேன்,' என்று ஷாலினி அவருக்குச் சாடை காட்டினாள்.

வங்காளி தன் பேட்டியை முடித்துக் கொண்டு நோட்டுப் புத்தகத்தைப் பையில் செருகிக் கொண்டு கிளம்பினான்.

ஷாலினி அந்த இளம் பெண்ணை அணுகினாள். ''ஏனம்மா, இந்தோர் மஹந்த் என்று சொன்னாயே, அவரை உனக்குத் தெரியுமா?''

''எனக்கு மட்டுமா அம்மா, இந்தப் பக்கத்திலே எல்லோருக்கும் தெரிந்தவராயிற்றே அந்த மகான்?'' என்றாள் அவள்.

சுப்பிரமணியம் அவசரமாக, 'அவர் எங்கேயிருக்கிறார் என்று கேளுங்கள்,' என்றார் ஷாலினியிடம்.

'பொறுங்கள்,' என்று மறுபடியும் அவருக்குச் சாடை காட்டிவிட்டு, ''அந்த இந்தோர் மஹந்த் இந்தப் பக்கத்திலே தான் இருக்கிறாரா?'' என்று கேட்டாள்.

''ஆமாம். இப்போது இதே ஊரில்தான் இருக்கிறாராம்.''

''எங்கே?''

''நீங்கள் தங்கியிருக்கிறீர்களே, அந்த டூரிஸ்ட் பங்களாவுக்குப் பக்கத்தில் தான். அதே சாலையில் தெற்காக ஒரு மைல் சென்றால், லால் ராம் என்ற ஒருவரின் வீடு வரும். வயசான இஞ்சினியர். அவர் வீட்டிற்கு வந்து தங்கியிருப்பதாகச் சொன்னார்கள். கட்டாயம் போய்ப் பாருங்கள், அம்மா. உங்களுக்கு எல்லா

ங்கள் விரும்பும் ஆரோக்கியம்
ன்பு கண்டிராத புதிய சத்து

# புதிய நெஸ்டோமால்ட்

## தனின் இனிமை! வைட்டமின் வலிமை!
## நாடியில் கரைவது! சுவை மிகுந்தது!

இன்றைய குடும்பம் எல்லாவற்றிலும்
றந்ததை எதிர்பார்க்கிறது. அதிலும்,
றிப்பாக ஆரோக்கிய பானத்தில். நெஸ்லே
ன் நெஸ்டோமால்ட் ஓர் உதாரணம்.
ன்றைய குடும்பத்திற்காக விசேஷமான
றையில் தயாரிக்கப்பட்ட ஆரோக்கிய
ானம்.

போஷாக்குமிக்க பால், மால்ட், பலம்
ரும் தேன் மற்றும் முக்கிய A, $D_3$ $B_1$
வட்டமின்கள் கொண்ட சுவைமிக்க
ரோக்கிய பானம் நெஸ்டோமால்ட்.

ருசி மாறாமல் காக்கும் விசேஷ 500 கி.
நஸ்டோமால்ட் டின்னில் அள்ளக்குறையா
ரோக்கியம். பாலிலோ, குளிர்ந்த நீரிலோ,
வன்னீரிலோ நெஸ்டோமால்ட் உடனே
ரைகிறது. குழைக்கத் தேவை இல்லை.
டி ஆவது இல்லை. வீணாவது இல்லை.
ரமம் இல்லை.

தேன்சுவை மிகுந்த பொன்னிற
நஸ்டோமால்ட் அள்ளிக் கலக்குங்கள்.
முமையான மால்ட் ருசியை குடும்பம்
முதுமே சப்புக்கொட்டி சுவைக்கக் காண்பீர்.
ம்... சுவையோ சுவை.

**விசேஷ போனஸ்!**

ஒவ்வொரு லேபலின்
கீழும் கவர்ச்சியான டின்.
உங்கள் சமையலறைக்கு
சேகரிப்பீர்!




stlé

## ஸ்டோமால்ட்

றைய குடும்பத்திற்கு சிறப்பான ஆரோக்கிய பானம்

நன்மைகளும் கிடைக்கும்.''

ஆவலே உருவாகச் சுப்பிரமணி யம் ஷாலினியின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். அந்தப் பெண் வேக மாகப் பேசியதால் எதுவுமே அவருக்குப் புரியவில்லை.

ஷாலினி அந்தப் பெண் சொன்னதை அவரிடம் விவரித்தாள். ''இப்போது மணி பன்னிரண்டாகி விட்டது. நாளைக் காலை போய்ப் பார்க்க லாம்,'' என்றாள்.

''நாளைக் காலை நாம் மாண்டுவை விட்டுப் புறப்பட்டு விடுகிறோமே? இங்கே இந்த ஒரு நாள்தானே தங்குவதாகத் திட்டம்?'' என்றார் சுப்பிரமணியம் கவலை யுடன்.

''அதை நான் பார்த்துக் கொள் கிறேன்,'' என்றாள் அவள்.

இரவு முழுதும் அவர் தூங்க வில்லை. அந்த இந்தோர் மஹந்த் எப்படி இருப்பார்? அவரிடம் என்ன கேட்பது? கேட்பதற்கெல்லாம் பதில் சொல்வாரோ மாட்டாரோ?

அருமையான மெத்தை தலை யணைகள் இருந்தும் அவர் புரண்டு புரண்டு தவித்தார்.

விடிந்தது.

ஷாலினி புன்சிரிப்புடன், ''ஹலோ மிஸ்டர் சுப்பிரமணியம்!'' என்று கூப்பிட்ட வண்ணம் உள்ளே வந்தாள். ''கெட் ரெடி. நாம் இந்தோர் மஹந்த் தைப் பார்க்கப் போகிறோம்.''

''எப்படி? அதற்கு அவகாசம்...''

''விஷ்ணுதாசைக் கேட்டு விட் டேன். ஏழு மணிக்குப் புறப்படுவதாக இருந்தது. நமக்காக ஒன்பது மணிக்குப் புறப்படுவோம் என்று சொல்லிவிட்டார். அதற்குள் நாம் போய்விட்டு வந்துவிட லாம். கெட் அப்! கெட் அப்!''

சுப்பிரமணியத்திடம் ஒரு புதுத் தெம்பு பிறந்தது. உற்சாகத்துடன் கால் மணியில் தயாராகி, ஷாலினியுடன் கிளம்பிவிட்டார்.

இருபுறமும் பச்சைப் பசே லென்ற மரங்கள் அணி வகுத்து நிற்க, தூரத்துக் குன்றுகளிலிருந்து வந்த காலைக் காற்று சில்லென்று உடலைக் குத்த, பட்சி களின் விதவிதமான கூவல்களைக் கேட்ட




—நித்ய

வண்ணம், நாட்டியப் பெண் சொன் வீட்டை அடைந்தார்கள்.

தாழ்வான கூரையுள்ள சின் வீடு. முன்பக்கம் கரடு முரடான தரையு ஒரு பழைய சாய்வு நாற்காலியும் இரா டொரு பிரம்பு பிய்ந்த மோடாக்களு இருந்தன.

ஓய்வு பெற்ற அந்த இஞ்சினிய உள்ளேயிருந்து வந்தார். அவருடை கோட்டும் தலைப்பாகையும் மெலிந்த உ லும் விசுவேசுவரய்யாவை ஞாபகப்படு தின. காதுக்கு மெஷின் வைத்த கொண்டிருந்தார்.

''இந்தோர் மஹந்த்தா? உள்ளே பூஜை பண்ணிக் கொண்டிருக்கிறா இதோ வந்துவிடுவார். உட்காருங்கள் என்றார்.

பத்து நிமிடம் சென்றது.

இந்தோர் மஹந்த் வெளியே வ தார்.

(தொடரு

ஸெரிலாக் ஐந்து வகை ஊட்டச் சத்துக்களையும்
ஒருங்கே பெற்றுள்ளது- புரோட்டீன்கள்,
கொழுப்புச் சத்துக்கள, கார்போஹைட்ரேட்டுகள்,
தாதுச்சத்துக்கள் மற்றும் வைட்டமின்கள்.
உங்கள் குழந்தைக்கு ஒவ்வொரு முறை ஸெரிலாக்
அளிக்கப்படும்போதும், இந்த எல்லா ஊட்டச்
சத்துக்களும் மிகவும் சரியான விகிதத்தில்
கிடைக்கின்றன.

எல்லா ஊட்டச் சத்துக்களும் ஒருங்கிணைந்து செயல்படுவதால்
இவையெல்லாமே மிகவும் இன்றியமையாதவை. இதனால்
தான் எல்லா ஊட்டச்சத்துக்களையும் பெற்ற ஒரு 'முழுமையான'
தானிய உணவு உங்கள் குழந்தையின் ஆரோக்கியத்திற்குத்
தேவை. உங்கள் குழந்தைக்கு ஒவ்வொரு முறை ஸெரிலாக்
அளிக்கும்போது அது, அதனுடைய தினசரி ஊட்டச் சத்துத்
தேவையில் கால் பாகம் அளிக்கிறது. ஊட்டத்திற்காக நீங்கள்
மற்றுமொரு உணவைக் கொடுக்கத் தேவை இல்லை.

உங்கள் குழந்தைக்குத் தாய்ப்பால் மிகவும் சிறந்தது. ஆனால்
அது நான்கு மாதங்களாகி திட உணவு சாப்பிடத்
தயாராகும்போது, உங்கள் டாக்டரைக் கலந்தாலோசியுங்கள்.
குழந்தைக்கு ஸெரிலாக் கொடுக்க ஆரம்பியுங்கள்.




# ஸெரிலாக்®

## இதில் ஏற்கனவே பால் அடங்கியுள்ளது



ஸெரிலாக்கைத் தயாரிப்பது மிக எளிது.
கொதிக்க வைத்து இளஞ் சூட்டுடன் இருக்கும் நீருடன் ஸெரிலாக்கைச் சேர்க்கவும்.
நன்றாகக் கலந்து, உண்பதற்குக் கொடுக்கவும்.

**இலவசம்** ஸெரிலாக்
குழந்தையின் வளர்ச்சி குறிப்பேடு

எடை அட்டவணை, நோய் தடுப்பு முறைகள்,
குழந்தை உணவுக் குறிப்புகள் மற்றும் பல
கொண்டுள்ளது.

உங்களின் பிரதிக்கு எழுதுங்கள்:

ஸெரிலாக்
போஸ்ட் பேக் நம்பர்-3 புதுடில்லி 110 008

NESTLÉ.

# [illegible] தவிர

**15**

இன்று மூன்றுவது நாள் சுபா ாணுமல் போய்.

மஞேஜுக்குக் கிட்டத்தட்டப் பத்தியமே பிடித்துவிட்டது.

பாங்க்குக்குப் போனுல் ப்போது வீடு திரும்புவோம் ன்றிருந்தது. வீட்டுக்கு வந்தால் ப்போது பாங்க்குக்குப் போவோம் ன்றிருந்தது.

தெருவில் இறங்கினுல் க்கம்பக்கத்தில் அத்தனை பேரும் ன்னேயே உற்றுப் பார்க்கிறமாதிரி, ற்றம் சாட்டுகிற மாதிரி இருந்தது. த்திரிகைகளில் செய்தி போட வண்டாமென்று சடகோபன் கேட்டுக் காண்டிருந்ததால் இன்னும் ஊர் முக்கத் தெரியவில்லே. போலீஸ் திகாரிகூட, "பத்திரிகைகளில் செய்தி ந்தால்தான் எவராவது தகவல் காடுப்பார்கள்," என்று சொன்னுர். வேண்டவே வேண்டாம். வயதுப் பண்ணெருத்தி காணுமல் போனுள் ன்ருல் பிறகு அந்த அவமானத்தைத் டைக்கவே முடியாது," என்று டகோபன் கண்டிப்பாகச் சொல்லி ிட்டார்.

வீடு நரகமாக இருந்தது ஞேஜுக்கு.

கோமளத்துக்கு, 'என் ண்ணம்மா, என் செல்லம்மா, ங்கேடிம்மா போயிட்டே?' என்று கதறிக் தறிப் புரண்டு அழவே நேரம் சரியாக ருந்ததால் சமையலே செய்வதில்லே. டகோபன் நடுநடுவே காப்பி மட்டும் பாட்டு மனேவிக்கும் மஞேஜுக்கும் காடுத்தார். அதை வாங்கிப் ருகும்போது பழுக்கக் காய்ச்சிய ட்டாரியை விழுங்குகிற மாதிரி ஞேஜுக்குச் சித்திரவதை ஏற்பட்டது.

சுபா காணுமற்போன அந்த முதல் தினம்—அந்த அடுக்கடுக்கான நிகழ்ச்சிகள்—பயங்கரக் கனவுகளாக அவனுடைய தூக்கத்திலும் விழிப்பிலும் வந்து வந்து போயின.

சடகோபன் அவனே உலுக்கி யெடுத்தது ஞாபகம் வந்தது. "பாங்க் கடனுவது, ஒன்ருவது! 'பிரின்ஸிபிளாம் பிரின்ஸிபிள்! உன்னுடைய கொள்கைக்காகப் பழனிமுத்துவை விரோதித்துக்கொண்டு, என் மகளேப் பலி கொடுக்கப் பார்க்கிருயே?' என்று அவர் வெடித்ததும், உடனே பழனிமுத்துவிடம் போய்ச் சரணுகதி செய்ததும், அவருடன் சுபாவை அவர் பிடித்து வைத்திருந்த வீட்டுக்குச் சென்றதும், அங்கே அவள் இல்லாததும்—

"இல்லே? இங்கேதானே அழைத்து வந்து வைத்தேன்?" என்று பழனிமுத்துவே பதறிப் போனுர். உள்ளேயும் வெளியேயுமாகப் புகுந்து புகுந்து தேடிப் பார்த்து முகம் வெளிறிப் போனுர். காரில் அவருடன் வந்த அடியாட்களும் அங்குமிங்கும் ஓடிப் பார்த்தார்கள்.

மஞேஜுக்குக் கொலே வெறி ஏற்பட்டுவிட்டது. அவருடைய சட்டைக் காலரைப் பிடித்துக் கழுத்தோடு நெரித்து, "பழனிமுத்து! என்ன விளேயாட்டு இதெல்லாம்? உண்மையைச் சொல்லா விட்டால் உம்மை இங்கேயே கொலே செய்துவிடுவேன்," என்று கத்தினுன்.

பழனிமுத்து அவன் கையை ஒரே தட்டில் உதறிவிட்டார். "இரப்பா, நீ ஒரு பக்கம்! இதெல்லாம் என் அண்ணன் சொர்ணமுத்துவின் வேலே. சொன்னுல் உனக்குப் புரியாது. என்னே மாட்ட விடணும்னு திட்டமிட்டுச் சதி பண்ணி யிருக்கிருன் அயோக்கிய ராஸ்கல்! எவ்வளவோ ரகசியமாக, எவ்வளவோ

கிருஷ்ணகுமார்

ந்தோபஸ்தாக நான் ஏற்பாடுகள் செய்திருக்கும் போது என்னிடம் ாலாட்ட வேறு எந்தப் பயலுக்கும் துணிச்சல் வராது!''

மனோஜ் பொடிப் பொடியாகிக் கொண்டிருந்தான். பழனிமுத்துவின் காலில் விழுந்தால் எல்லாம் சரியாகிவிடும் என்று ரொம்பச் சுலபமாய் அவன் நினைத்திருந்ததென்ன, இப்போது பழனி முத்துவுக்கும் மேலே இன்னொரு எத்தன் ளெம்பி, சுபாவை இன்னும் பெரிய அபாயத்துக்குக் கொண்டு போய் விட்டதென்ன?

ஒருவேளை பழனிமுத்து சும்மா பொய் சொல்கிறாரோ? அவருடைய பதைப்பைப் பார்த்தால் அசலாக இருந்தது. நடிக்கிற மாதிரி தெரியவில்லை. அத்துடன் அவருடைய பேரத்துக்குத்தான் இவன் ஒப்புக்கொண்டாயிற்றே? இன்னும் ஏன் இவர் நாடகமாட வேண்டும்?

''அந்தக் கிழவி எங்கே போனாள்?'' என்று பழனிமுத்து கத்தினார்.

''எந்தக் கிழவி?''

''காவலுக்கு ஒரு கிழவி போட்டிருந்தேன். வேளா வேளைக்கு அந்தப் பொண்ணைக் கவனிச்சுக்கன்னு சொல்லியிருந்தேன்,'' என்று அவர் கூறிக் கொண்டிருந்த சமயம், ஆட்களில் ஒருவன் ஒரு பாட்டியம்மாளைப் பிடித்துத் தள்ளிக் கொண்டு வந்து அவர் முன்னே நிறுத்தினான்.

''ஏய் சனியனே! கதவெல்லாம் திறந்து கிடக்குதே! எங்கே அந்தப் பொண்ணு!'' என்று பழனிமுத்து அவளைக் குதறுகிற மாதிரி பாய்ந்தார்.

பாட்டியம்மா அதிர்ச்சி யடைந்தாள். ''என்னது... திறந்திருக்குதா... இல்லீங்களே... நான் போறப்போ பூட்டித்தானே இருந்திச்சு. போய் ஒரு டீ குடிச்சிட்டு வந்தேன்...''

தாங்கள் வந்தபோதும் கதவு பூட்டித்தானிருந்தது என்பது பழனி முத்துவுக்கு ஞாபகம் வந்தது. ''உன்னைத் தொலைச்சிடுவேன் தொலைச்சு. நெசத்தைச் சொல்லு. இங்கே வேறே யாராச்சும் வந்தாங்களா?''

''யாரும் வரலீங்க. நான் வெளியவே உட்கார்ந்திருந்தேன். ஒரு பையன்தான் வந்து கடைக்காரர் கொடுத்தாருன்னு சொல்லி ஒரு டீ கொடுத்தான். குடிச்சப்போ கொஞ்சம் கண்ணைச் செருகுகிற மாதிரி இருந்திச்சு. படுத்திட்டேன். கொஞ்ச நேரத்திலே விழிச்சிட்டேன். கதவெல்லாம் அப்படியே பூட்டினது பூட்டியபடிதான் இருந்திச்சு.'' அதான் வெளியே போனேன்.

அவளை மயக்கத்துக்காளாக்கி, மயங்கியிருந்த சில நிமிடங்களில் கதவைத் திறந்து சுபாவை அழைத்துச் சென்று, கிழவிக்குச் சந்தேகம் வராமலிருப்பதற்காக மறுபடியும் பூட்டியிருக்க வேண்டும்...

நிமிடத்துக்கு நிமிடம் மனோஜின் தவிப்பு அதிகமாகிக் கொண்டிருந்தது.

''உங்கள் அண்ணன்தான் இதைச் செய்திருக்கணும் என்றால் உடனே கிளம்புங்கள். போய்க் கேட்கலாம்,'' என்றான்.

பழனிமுத்துவும் பரபரப்புடன், ''விடறதில்லே அவனை! வா,'' என்று



பாண்டிச்சேரிக்குக் கிறித்தவர்கள் மாநாட்டிற்காகப் பெங்களூரிலிருந்து சகோதரர் குருஸ் திவாகரன் வந்திருந்தார். அவர் பேசும்போது, இன்று மக்கள் தொகை பெருக ஒரு வகையில் ஏசுநாதர்தான் காரணம் என்றார். பின்னர் அவர் விளக்கினார்.

''ஆண்டவர் நமக்கு எத்தனையோ கட்டளைகளைச் சொல்லி அவற்றையெல்லாம் கடைப்பிடிக்கச் சொல்லியிருக்கிறார். அதையெல்லாம் நாம் காற்றில் பறக்க விட்டுவிட்டோம். ஆனால் அதே ஆண்டவர், 'நீங்கள் கடல் மணலைப் போல் பல்கிப் பெருகுவீர்கள்,' என்றார்.

இந்தக் கட்டளையை மட்டும் நாம் சிரமேற் கொண்டு முழு மனத்துடன் உற்சாகமாக நிறைவேற்றி வருகிறோம்!''

—டி. வெண்ணிலா பெர்னார்டு

குழந்தைகள் தினம்—நவம்பர் 14

# உச்சியிலிருந்து ஓர் காட்சி



உலகமனைத்தும் தன்னைவிட
உயரமானதென்றே அவன்
நினைத்திருந்தான்

அவனது தந்தை குனிந்து
அவனை உயரத்தூக்கி வளர்ந்த
பெரியவர்களின் பிரமிக்கும்
கண்ணோட்டத்தைக் காட்டும்
வரை.

என்றோ ஒருநாள் அங்கு
தான் அவனது இடம். தன்
காலின் பலத்திலே அங்கு
நிற்பான் அவன்.

அந்த நினைப்புக்கும்
கண்ணோட்டத்திற்கும் அவனை
தயாராக்குங்கள் — அவன்
ஆட்டங்கண்டு உதவிக்கு
அழுது தவிக்காது இருக்கச்
செய்யுங்கள்.

அதற்குத் தக்க வழி
ஆயுள் இன்ஷூரன்ஸ் தான்

- எல்.ஐ.ஸியின் பாலிசித் திட்டங்கள்
- சிறு குழந்தைகளுக்காகவே அமைக்கப்பட்ட திட்டங்கள் அவனுக்கு தோன்றவிருக்கும் சுமைகளையும் பொறுப்புகளையும் உங்களை உணரச் செய்கின்றன.

— கல்வி
— சீரிய வாழ்க்கையை துவக்க மூலதனம்
— உத்தியோக எதிர்காலம்

இவையெல்லாம் உங்கள்
பொறுப்புதான் —
இப்போதைக்கு —
சற்று காலத்திற்கு.
பின் எங்களுடையதும் கூட.
நாம் ஏன் சேர்ந்து செயல்படக்
கூடாது?? சிந்தியுங்கள்!!

லைப் இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா

daCunha-LIC/162

மனோஜைக் காருக்குள் தள்ளித் தானும் ஏறிக் கொண்டார்.

பழனிமுத்துவைப் போல இரண்டத்தனை பரிமாணம் இருந்தார் சொர்ணமுத்து. புசுபுசுவென்று மார்பில் அடர்ந்திருக்கும் ரோமத்தைப் போதும் போதாமலுமிருந்த துண்டினால் போர்த்துக் கொண்டு உள்ளேயிருந்து வந்தவர், ''அடடே! தம்பியா? வா வா வா!'' என்று வெகு உற்சாகமாக வரவேற்று, உள்பக்கம் திரும்பி, ''இந்தா, உன்னைத்தானே? இங்கே யார் வந்திருக்குதுன்னு பார்!'' என்று குரலும் கொடுத்தார். ஓர் இரட்டை நாடி அம்மாள் எட்டிப் பார்த்து, ''வாங்க,'' என்று சொல்லிவிட்டுப் போய் விட்டாள்.

அவள் போவதற்காகவே காத்திருந்த மாதிரி, பழனிமுத்து படபடவென்று அண்ணனிடம் பேசினார். ''இதோ பாருங்க, எத்தினியோ வகையில் என் வழியில் குறுக்கிட்டுக்கிட்டிருக்கீங்க. நானும் பொறுத்துக்கிட்டிருக்கேன். ஆனால் இந்த வாட்டி பொறுக்க மாட்டேன்.''

சொர்ணமுத்து வெகு அமைதியாக, மேல் துண்டினால் முகத்தைத் துடைத்துக் கொண்டார். மார்பில் மெல்லிய தங்கச் சங்கிலி பளபளத்தது. அதன் முகப்பில் ஒரு சின்ன விநாயகர் உருவம் பதித்த பதக்கம் தொங்கிக் கொண்டிருந்தது. அதைப் பாலிஷ் செய்தபடி ''என்ன சொல்றே, பழனி? யார் இவர்?'' என்றார்.

''இவர்தான் அந்தப் பெண்ணோட உறவுப் பையன்.''

''எந்தப் பெண்ணோட?''

''அண்ணே, அனாவசியமாக என் கோபத்தைக் கிளறாதீங்க.''

''நீதான் என் கோபத்தைக் கிளறுகிறே. பொண்ணாவது மண்ணாவது! என்ன தெரியும் எனக்கு?''

''பொய் சொல்லாதீங்க. இந்தப் பையனை ஒரு விவகாரத்துக்காக மடக்கணும்னு இவரோட உறவுப் பெண்ணை நான் பிடிச்சு வைச்சிருந்தேன். அவளை நீங்க கடத்திட்டுப் போய் என்னை மாட்ட வைக்கப் பார்க்கறீங்க!''

சொர்ணமுத்து கடகடவென்று சிரித்தார். ''கிரிமினல் வேலைகள் உனக்கு ரொம்பப் பழக்கமான சமாசாரம். எனக்கு அதெல்லாம் தெரியாது. சரி, விடு. காப்பி சாப்பிடறியா? டீ சாப்பிடறியா?'' என்றவர், மனோஜின் பக்கம் திரும்பி, ''தம்பி, நீங்க என்ன சாப்பிடறீங்க?'' என்று கேட்டார்.

பழனிமுத்துவின் கண்களில் தீப்பொறி பறந்தது. ''சரி, அவ்வளவு தானே? உன்னை எப்படி வழிக்குக் கொண்டு வரணும்னு எனக்குத் தெரியும். பார்த்துக்கிறேன்,'' என்று சீறிவிட்டு, ''வாங்க போகலாம்,'' என்று மனோஜின் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு வெளியேறினார்.

''பழனி, இரு,'' என்று பின்னாலிருந்து சொர்ணமுத்து கூப்பிட்டார். ''ஒரு பெண்ணைக் கடத்திப் போய் வைச்சிருந்ததாக நீயே உன் வாயாலே சொன்னியே! அது என் ரூமிலே இருக்கிற டேப் ரெகார்டரில் டேப்பாகியிருக்குது. ஆகையாலே எது செய்தாலும் ஜாக்கிரதையாய்ச் செய்!'' என்றார் புன்னகையுடன்.

''அடச் சீ!'' என்று தெருவில் காறித் துப்பிவிட்டு நடந்தார் பழனிமுத்து. ''கட்சியிலே வட்டச் செயலாளர் பதவிக்கு நான் போட்டியிடக் கூடாதுன்னு பார்க்கிறான். சில ஏஜென்ஸியும் நான் அவனுக்காக விட்டுக் கொடுக்கணும்னு எதிர்பார்க்கிறான். இருக்கட்டும், இருக்கட்டும். இவனை வேறே வழியிலே மடக்கறேன்!''

மனோஜுக்குக் காலோடு தலை பதறியது. ''சார், உங்கள் போட்டிச் சண்டைகள் இருக்கட்டும். சுபா—அவள் கதி என்ன ஆவது? அவள் எங்கே இருக்கிறாளோ தெரியவில்லையே?''

''கொஞ்சம் கூடக் கவலைப் படாதே தம்பி. சொர்ணமுத்து ஒரு கோழை. கண்டபடி ஏதாச்சும் செய்திட்டு மாட்டிக்க மாட்டான். உங்க சுபாவை



திருடன் (பஸ்ஸில்): டேய், எடுடா பர்ஸை!

வாலிபன்: ஐயய்யோ! பஸ்ஸில் நடக்கும் இந்த அக்கிரமத்தை கேட்கப் பெண்கள் யாருமே இல்லையா?

—தி. சுந்தரேசன்



அட்டையில்: வி. சுதா
வண்ணப்படம்: ஆர். அழகப்பன்

ரொம்பப் பத்திரமாய் எங்காவது வைத்திருப்பான். நானுச்சு, அதைக் கண்டுபிடிக்க! பொறுமையாயிருங்க!''

பழனிமுத்து போய்விட்டார்.

வீட்டுக்குத் திரும்பி நடந்ததையெல்லாம் சடகோபனிடமும் கோமளத்திடமும் சொல்வதற்குள் அவன் பட்ட பாடு!

இருவரும் இந்த இரண்டு நாளாக விழுந்து விழுந்து அழுகிற காட்சி!

பழனிமுத்து அவருடைய அண்ணனை மடக்கும் வரை காத்திருப்பதில் புண்ணியமில்லை. நாமே முயற்சி எடுத்துக்கொண்டு இறங்க வேண்டும் என்று தீர்மானித்தான்.

டெலிபோன் டைரக்டரியைத் துருவித் துருவி, சொர்ணமுத்து பிஸினஸ் நடத்தும் கடையைக் கண்டுபிடித்தான்.

மண்ணடியில் ஒரு சிறிய தெருவில் அது இருந்தது.

'சொர்ணமுத்து ஏஜென்ஸீஸ்' என்ற பலகை அழுக்கடைந்து பழசாகியிருந்தது. எப்போதோ ஆயுத பூசையின்போது அதன் மீது போடப்பட்டிருந்த செவந்தி மாலைகள் உலர்ந்து சருகாகி உதிர்ந்து, கயிறுகள் மட்டும் காற்றில் ஆடிக்கொண்டிருந்தன.

சொர்ணமுத்து, தானொரு ஏழைதான் என்று காட்டிக் கொள்ள நினைப்பவர் என்று தோன்றியது. முக்கியமாக வருமான வரி இலாகாக்காரர்களுக்கு அப்படிக் காட்டிக் கொள்வதற்காகவே தனது அலுவலகத்தை அப்படித் தூசியும் பழசுமாக வைத்திருந்தார். அவர் என்ன வியாபாரம் செய்கிறார், எதற்கு ஏஜென்ஸி எடுத்திருக்கிறார் என்பதை லேசில் கண்டுபிடிக்க முடியாது. அந்த அலுவலகத்துக்குள் வேலை பார்க்கும் பத்துப் பன்னிரண்டு ஊழியர்களுக்கேகூட அது அவ்வளவு விவரமாய்த் தெரியாது. ஏதாவது கேட்டால் அவர்களும் ஏதோ சொப்பனத்தில் நடக்கிற மாதிரி ஒரு தினுசாக விழித்துக்கொண்டு போய்விடுவார்கள்.

மனோஜ் அங்கே போய்த்தான் நின்றுகொண்டிருந்தான், ஸ்கூட்டரை ஓர் ஓரமாக நிறுத்திவிட்டு.

அலுவலகத்துக்கு உள்ளே போய், சிப்பந்திகளை விசாரிப்பதால் அப்படி புண்ணியம்கூடக் கிடைக்காது என்று அவனுக்குத் தெரியும். ஆகவே, அந்தத் தெருவில், எதிர்ச் சாரியில், நாலைந்து கட்டிடம் தள்ளி நின்றுகொண்டிருந்தான்.

அங்கே ஒரு வெற்றிலைப்பாக்குக் கடை இருந்தது. அவனுக்குச் சிகரெட் பிடித்துப் பழக்கமில்லாததால் வெற்றிலை பாக்கு வாங்கிப் போட்டுக் கொண்டான். அது கூடப் பழக்கமில்லாததால் மார்பை அடைத்தது. ஒரு சோடா வாங்கிக் குடித்தான். காலைத் தினசரியை வாங்கிப் படிக்கிற மாதிரி பாசாங்கு செய்தான்.

அவன் கண் சொர்ணமுத்து ஏஜென்ஸீஸ் மீதே படிந்திருந்தது.

யார் வருகிறார்கள், யார் போகிறார்கள் என்பதைக் கவனிக்கலானான்.

என்ன கண்டுபிடிக்கப் போகிறோம் என்று அவனுக்கே தெரியவில்லை. ஆனால் நிச்சயமாய் ஏதோ பலன் கிடைக்கப் போகிறது என்று அவனுடைய உள்மனம் சொல்லிக்கொண்டேயிருந்தது.

மாடியில்லாத, இரண்டு மூன்று அறைகள் மட்டுமே கொண்ட சாதாரணமான கட்டிடம் அது. எப்போதேனும் ஒரு மணி நேரத்துக்கு ஒரு முறை ஒருவர் வெளியே வருவார். அல்லது ஒருவர் உள்ளே செல்வார். இளைஞனை ஒருவன் அடிக்கடி வெளியே வந்து, வாசல்படிக்குத் தள்ளி நின்று ஒரு சிகரெட் பிடித்துவிட்டு உள்ளே திரும்பிவிடுவான். பியூன் போலத்

வாசலில் நின்று தெருவை வேடிக்கை பார்த்துவிட்டு, சலிப்புடன் திரும்பிச் சென்றான்.

அப்போது காலை மணி பதினொன்று இருக்கும். எப்படியும் சொர்ணமுத்து அலுவலகத்துக்கு வருவார், திரும்பிச் செல்வார். அவரைப் பின்தொடர்ந்து சென்றால் சுபா அடைக்கப்பட்டிருக்கும் இடத்தைக் கண்டு பிடித்துவிடலாம் என்பது அவன் நம்பிக்கை. ஆனால் அவ்வளவு பகிரங்கமாக, அசட்டுத்தனமாகச் சொர்ணமுத்து தன்னைச் சிக்க வைத்துக் கொள்வாரா என்ற அவநம்பிக்கையும் அவன் மனத்தின் இன்னொரு மூலையில் எழுந்துகொண்டுதானிருந்தது.

பதினொன்றரை இருக்கும்.

காரில் வந்திறங்கினார் சொர்ண முத்து. உள்ளேயிருந்து ஒரு பியூன் ஓடி வந்து, சல்யூட் அடித்து, காரின் கதவைத் திறந்து சாத்தி, அவருடைய கைப்பெட்டி யைப் பயபக்தியுடன் எடுத்துக்கொள்ள, சுற்றுப்புறச் சூழ்நிலைகளை ஒரு வினாடி கம்பீரமாகக் கண்காணித்த பின் சொர்ணமுத்து உள்ளே சென்றார். திரும்பி நின்று டிரைவரிடம் அவர் ஏதோ சொல்ல, கார் சென்றுவிட்டது.

சொர்ணமுத்து இனிமேல் எப்போது வெளியே வருவார் என்பது மனோஜுக்குத் தெரியவில்லை. எப்படியும் சாப்பாட்டு வேளைக்குப் புறப்படுவார் என்று நம்பிக்கொண்டு காத்திருந்தான்.

ஒரே கடை வாசலில் நிற்பது சந்தேகத்தை எழுப்புமென்று தோன்றியது. ஆகவே அடுத்த கடைக்குச் சென்று ஒரு ஸ்ட்ராங் மிட்டாய் வாங்கி வாயில் அடக்கிக் கொண்டான்.

அவனுடைய ஸ்கூட்டர் சற்று எட்டத்தில் நின்றிருந்தது. பிச்சைக்காரன் போல் தோற்றமளித்த ஒரு சிறுவன் ஸீட்டின் மீது ஏறியமர முயலுவது தெரிந்தது. அவனிடம் சென்று அதட்டி அவனை விரட்டிவிட்டுத் திரும்பிய பிறகு தான் கவனித்தான்—

சொர்ணமுத்து ஏஜென்ஸீஸின் வாசலிலிருந்து ஓர் ஆட்டோ கிளம்புவதை. அது எப்போது அங்கே வந்தது என்று அவனுக்குத் தெரியவில்லை. அதனுள் குனிந்து ஏறிக்கொண்டிருந்த நபரின் முதுகும் முகத்தின் ஒரு பகுதியும் மட்டுமே

அணிந்து, தாடி மீசையுடன் இருந்தான். கண்ணுக்குக் கறுப்புக் கண்ணாடி மாட்டிக் கொண்டிருந்தான்.

யாரோ வியாபார விஷயமாக வந்துவிட்டுப் போகிருர்கள் என்று மனோஜ் முதலில் எண்ணினுன். அதே சமயம் அந்த ஆட்டோ அவனைத் தாண்டிக்கொண்டு சென்றது.

உள்ளே இருந்த நபர் வேறு புறமாக முகத்தைத் திருப்பிக் கொண்டிருந்தான். ஆனல் பழக்கத்தின் காரணமாகவோ என்னவோ—

ஜிப்பாவுக்குள் கையை விட்டு, அந்தச் சங்கிலியை எடுத்து ஜிப்பாவுக்கு வெளியே போட்டுக் கொண்டான்.

கால் விஞடிகூட இருக்காதென்ருலும் அந்தச் சங்கிலியின் முகப்பில் இருந்த விஞயகர் பதக்கம் மனோஜின் கண்ணில் பட்டுவிட்டது.

சரேலென்று மின்னல்போல் எல்லாம் புரிந்தது.

அவர் சொர்ணமுத்துதான். வரும்போதே அவன் இங்கு நிற்பதைக் அவன் அடையாளம் ... காகத் தன் வேடத்தை மாற்றிக்கொண்டு கிளம்பியிருக்கிருர்.

அவனை ஏமாற்றிவிட்டுச் செல்வது அவருடைய நோக்கமென்ருல், நிச்சயமாக அவர் செல்வது சுபாவை பிடித்து வைத்திருக்கும் இடத்துக்குத் தான்.

அவன் ஸ்கூட்டரை ஒரே உதையில் ஸ்டார்ட் செய்து தாவி ஏறினுன். ஆட்டோ சென்ற திசையில் பறந்தான்.

அது சின்னத் தெரு. வளைவில் திரும்பியபோது மூன்று வீதிகள் அங்கிருந்து பிரிந்தன. ஆட்டோவை அங்கே காணவில்லை. அது எந்த வீதி வழியே சென்று மறைந்தது என்பதும் தெரியவில்லை.

அந்த ஆட்டோவின் எண்ணை ஞாபகப்படுத்திக் கொள்ள முயன்ருன். அதில் மூன்று 8 இருந்தது என்று மட்டுமே நினைவு வந்தது.

(தொடரும்)

---

கஷ்டப்பட வேண்டாம்

# கண்டுபிடியுங்கள்

விடை இங்கேயே

## யார் முகமூடித் திருடன்? யார் ஜலதோஷக்காரர்?



வலது பக்கம் ஜலதோஷக்காரர். (காதில் பொடி மட்டை காண்க)

## எது ஓட்டுப் பெட்டி? எது உண்டிப் பெட்டி?



இடது புறம் உண்டிப் பெட்டி. எடுத்துக் கொண்டு ஓடிவிடாத படி பட்டை அடித்திருப்பதைக் காண்க.

## கட்சி மாறத் தயாராய் இருப்பவர் யார்?



சட்டை போடாதிருப்பவர்: எந்த வினாடியும் மாற்றுக் கட்சிச் சட்டையை அணியத் தயாராக இருக்கிறார்.

## எது கலர் டி.வி? எது கறுப்பு டி.வி?



மனைவியும் மாமியாரும் பார்ப்பது கலர் டி.வி. புருஷன் பார்ப்பது கறுப்பு டி.வி.

## கல்யாணமாகி ஒரு வாரம் ஆன புது மாப்பிள்ளை யார்?



தாடி மீசையுடன் இருப்பவர். (ஷேவ் செய்து கொள்ளக்கூட முடியாமல் மனைவியோடு ஜாலியான சுற்றல்.)

16

# என்னைக் கவிர

கிருஷ்ணகுமார்

இந்தோர் மஹந்த்! இவரா!

ஷாலினியும் சுப்பிரமணியமும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

இளைஞராக இருந்த இவர் தாங்கள் தேடிவந்த இந்தோர் மஹந்த்தாக இருக்க முடியாது என்பது, பார்த்த மாத்திரத்திலேயே அவர்களுக்கு விளங்கி விட்டது.

கழுத்தில் துளசி மாலைகளுடன் இருந்தார். தலை நடுவில் வகிடெடுத்துப் பளபளவென்று சீவப்பட்டிருந்தது. காவி ஜிப்பாவும், தட்டுச் சுற்றாகக் கட்டியிருந்த காவி வேட்டியும் மடிப்புக் கலையாமல் பளபளவென்றிருந்தன. முப்பது வயதுக் குட்டபட்ட இளைஞராக இருந்தார்.

சுப்பிரமணியம் சந்தேகத்துடன் ''தாங்கள்..... மதுரைக்கு வந்திருக்கிறீர்களா?'' என்றார்.

''மதுரைக்கா? இல்லையே?'' என்றவர், சட்டென்று சிரித்தார். ''நீங்கள் என் தலைமையனாரைத் தேடுகிறீர்கள் என்று நினைக்கிறேன்.''

''தலைமையனாரா?''

''ஆமாம். எங்கள் இரண்டு பேரையுமே இந்தோர் மஹந்த் என்றுதான் அழைப்பார்கள். ஆனால் அவர்தான் ஊர் ஊராகச் சுற்றுகிறவர். நான் இங்கேயே இருப்பவன். அவர் ரொம்பப் பெரியவர். பல சக்திகள் கொண்டவர்.....''

ஷாலினி குறுக்கிட்டு, ''அவர் இப்போது எங்கே இருக்கிறார்?'' என்றாள்.

''எனக்குத் தெரியவில்லை. ஓங்காரேஷ்வருக்குப் போக வேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்தார்.''

சுப்பிரமணியத்தின் ஏமாற்றம் நிமிடத்துக்கு நிமிடம் அதிகரித்துக் கொண்டிருந்தது. ''ஓங்காரேஷ்வரா? அது எங்கே இருக்கிறது?''

''நான் சொல்கிறேன், வாருங்கள்,'' என்ற ஷாலினி, ''நமஸ்தே சுவாமிஜி. நாங்கள் வருகிறோம்,'' என்று அவரிடம் விடை பெற்றுக் கொண்டாள்.

இருவரும் மறுபடி வீதிக்கு வந்தார்கள்.

''நமது சுற்றுலாவில் ஓங்காரேஷ்வர் இருக்கிறது. நாம் அங்கே தான் அடுத்தபடி போகப் போகிறோம். ஆனால்.....'' என்று நிறுத்தினாள் ஷாலினி.

''ஆனால்?''

''அங்கே போக வேண்டும் என்று நாமாகச் சொல்லக் கூடாது. நம்முடன் வந்திருக்கும் மொத்தப் பேருக்கும் என்னைக் கண்டால் பிடிக்கவில்லை. நான் ஒன்று சொன்னால் வேண்டுமென்றே எதிராகச் சொல்வார்கள். ஓங்காரேஷ்வருக்குப் போக வேண்டும் என்று நான் சொன்னால், உடனே உஜ்ஜயினிதான் முக்கியம், காளிதாசரின் பிறந்த ஊரைப் பார்க்க வேண்டாமா என்று ஆரம்பிப்பார்கள். ஆகையால் பேசாமலே இருப்போம்.''

ஓங்காரேஷ்வராவது, உஜ்ஜயினியாவது! சுப்பிரமணியத்தின் நம்பிக்கைகளும் எதிர்பார்ப்புகளும் பொடிப் பொடியாகிக் கொண்டிருந்தன. இனிமேல் அந்த இந்தோர் மஹந்த் அகப்படுவாரென்று அவருக்குத் தோன்றவில்லை.

அவர்கள் திரும்ப மாண்டு ஓட்டலை அடைந்த போது பஸ் அவர்களுக்காகவே காத்திருந்தது. விஷ்ணுதாசும் மற்றவர்களும் லக்கேஜ்களை கொண்டிருந்தார்கள். ''மகேஷ்வருக்குக் கிளம்பணும். நேரமாகிறது,'' என்றார் விஷ்ணுதாஸ்.

சுப்பிரமணியம் ஏமாற்றத்துடன் தாழ்ந்த குரலில், ''என்னவோ ஓங்காரேஷ்வர் போவோம் என்றீர்களே!'' என்று ஷாலினியிடம் உதட்டைப் பிதுக்கினார்.

ஷாலினி புன்னகையுடன், ''கவலை வேண்டாம். மகேஷ்வர் என்றால் ஓங்காரேஷ்வர் நிச்சயம் என்று அர்த்தம். இது நர்மதைக்கு இக்கரை. அது அக்கரை,'' என்றாள்.

இருந்தாலும் சுப்பிரமணியத்துக்கு நம்பிக்கை பிறக்கவில்லை.

மஹேஷ்வர் என்பது சிறிய ஊர். நெருக்கமான தெருக்கள். அடை அடையான கடைகள். பஸ்ஸைத் திருப்பி நிறுத்துவதே பெரும்பாடாக இருந்தது.

''இங்கே ராணி அகல்யா பாயின் அரண்மனையும் அவள் கட்டிய கோவில்களும் புகழ் பெற்றவை,'' என்று விஷ்ணு தாஸ் கூறியபடி முன்னே நடக்க, அவரை எல்லோரும் பின்தொடர்ந்தார்கள்.

நர்மதையின் கரையில் உயரமான இடத்தில் கட்டப்பட்டிருந்தன அரண்மனையும் கோவிலும். சின்னச் சின்னக் கோவில்களையே இதுவரை பார்த்துச் சலித்திருந்த சுப்பிரமணியத்துக்கு, தமிழ்நாட்டுக் கோவில்களைப் போல விஸ்தாரமான மண்டபங்களையும் பெரிய பெரிய வாசல்களையும் கண்டு மகிழ்ச்சி ஏற்பட்டது. எட்டிப் பார்த்த போது நீண்டு அகன்ற படிகள் நர்மதைக் கரைக்குச் செல்வது தெரிந்தது. தண்ணீர் மிகவும் கலங்கியிருந்தது. வெகு தூரத்திலே ஒரு பாலமும் கண்ணில் பட்டது. எதிர்க் கரையில் ஒரு பழைய அரண்மனையும் வட இந்தியக் கோவில்களுக்கு உரிய தும்பங்களும் தெரிந்தன. ஆற்றில் குறுக்கும் நெடுக்குமாகப் பல பெரிய படகுகள் மெல்ல அசைந்தபடியே மிதந்து கொண்டிருந்தன.

''வாருங்கள் ஓங்காரேஷ்வர் போகலாம்,'' என்று அழைத்தார் விஷ்ணு தாஸ்.

சிறிய பாய்மரம் கட்டிய நீண்ட படகுகள் தயாராக இருந்தன. படகுக்குப் பதினைந்து பேர் என்று இரண்டு பிரிவாக ஏறிக் கொண்டார்கள். பாய் மரத்தைச் சுருட்டிக் கட்டிவிட்டு, துடுப்பினாலேயே வலித்தார்கள் இரண்டு படகுக்காரர்கள்.

ஓங்காரேஷ்வரின் கரையை அடைந்தார்கள். எங்கு பார்த்தாலும் பிச்சைக்காரர்கள் கூட்டம். கால் வைத்து நிற்க முடியாதபடி ஈக்களின் தொல்லை. பூஜைத் திரவியங்கள் விற்கும் கடைக்காரர்களின் கூச்சல் காதைச் செவிடாக்கியது.

குன்றின் மீது கோவில் இருந்தது. குறுகலான பாதை.

''பிரசித்தி பெற்ற பன்னிரண்டு ஜோதி லிங்கங்களில் ஒன்று இந்த ஓங்காரேஷ்வர் கோவிலில் இருக்கிறது,'' என்று விளக்கிய வண்ணம் அழைத்துச் சென்றார் விஷ்ணுதாஸ்.

கோவிலின் சுவர்கள் நேர் செங்குத்தாக நர்மதை நீரைத் தொட்டுக் கொண்டு உயர்ந்திருந்தன. நதியின் நடுவேயே கோவில் கட்டப்பட்ட மாதிரி இருந்தது. கோவிலுக்குள்ளும் குறுகிய வழிகள்தான். மாடி போல ஏறிச் சென்றார்கள்.

சிறிய லிங்கத்துக்குப் பூஜை செய்து கொண்டிருந்தார் குருக்கள். ஒவ்வொருவரிடமும் தீர்த்தம் கொடுத்து, அவர்களையே லிங்கத்துக்கு அபிஷேகம் செய்யச் சொன்னார். வில்வ இலைகளைத்





29'ம் பக்க விடை: பின்னால் இருப்பவர் ரேவதி

ங்கள் விரும்பும் ஆரோக்கியம்
ன்பு கண்டிராத புதிய சத்து

# புதிய நெஸ்டோமால்ட்

## தனின் இனிமை! வைட்டமின் வலிமை!
## நாடியில் கரைவது! சுவை மிகுந்தது!

இன்றைய குடும்பம் எல்லாவற்றிலும் சிறந்ததை எதிர்பார்க்கிறது. அதிலும், குறிப்பாக ஆரோக்கிய பானத்தில். நெஸ்லேயின் நெஸ்டோமால்ட் ஓர் உதாரணம். இன்றைய குடும்பத்திற்காக விசேஷமான முறையில் தயாரிக்கப்பட்ட ஆரோக்கிய பானம்.

போஷாக்குமிக்க பால், மால்ட், பலம் தரும் தேன் மற்றும் முக்கிய A, $D_3$ $B_1$. வைட்டமின்கள் கொண்ட சுவைமிக்க ஆரோக்கிய பானம் நெஸ்டோமால்ட்.

ருசி மாறுமல் காக்கும் விசேஷ 500 கி. நெஸ்டோமால்ட் டின்னில் அள்ளக்குறையா ஆரோக்கியம். பாலிலோ, குளிர்ந்த நீரிலோ, வென்னீரிலோ நெஸ்டோமால்ட் உடனே கரைகிறது. குழைக்கத் தேவை இல்லை. கட்டி ஆவது இல்லை. வீணுவது இல்லை. சிரமம் இல்லை.

தேன்சுவை மிகுந்த பொன்னிற நெஸ்டோமால்ட் அள்ளிக் கலக்குங்கள். செழுமையான மால்ட் ருசியை குடும்பம் முழுதுமே சப்புக்கொட்டி சுவைக்கக் காண்பீர். ம்ம்... சுவையோ சுவை.

**விசேஷ போனஸ்!**

ஒவ்வொரு லேபலின் கீழும் கவர்ச்சியான டின். உங்கள் சமையலறைக்கு சேகரிப்பீர்!




estlé

## நஸ்டோமால்ட்

ன்றைய குடும்பத்திற்கு சிறப்பான ஆரோக்கிய பானம்

தந்து அவர்களை அர்ச்சனை செய்யச் சொன்னார். தூபம் காட்டி மணியடிக்கச் சொன்னார்.

எல்லாரும் போகட்டும் என்று காத்திருந்தார்கள் ஷாலினியும் சுப்பிரமணியமும்.

அவர்கள் முறை வந்தது. அபிஷேகமும் அர்ச்சனையும் செய்து முடித்த பின், அந்தக் குருக்களிடம் ஷாலினி கேட்டாள்: "ஐயா, இந்தோர் மஹந்த் இங்கே வந்திருப்பதாகச் சொன்னார்கள். அவரை எங்கே பார்க்க முடியும்?"

"அடடா! நேற்று வரை இங்கே தான் இருந்தார்."

"இப்போது?"

"எங்கே போனாரோ? யாரிடம் சொல்லிக் கொண்டு போகிறார்? சொல்லிக் கொண்டு புறப்பட்டால் அப்புறம் அவர் என்ன துறவி?" என்று சிரித்தார் குருக்கள்.

ஷாலினி ஒரு பெருமூச்சு விட்டாள். "சுப்பிரமணியம், இத்துடன் நம் முயற்சியை விட்டுவிட வேண்டியது தான்."

இருவரும் எதுவும் பேசாமல் கோவிலிலிருந்து இறங்கினார்கள்.

"மிஸ்டர் சுப்பிரமணியம், உங்களை எங்கெல்லாம் தேடுவது?" என்று கூப்பிட்டுக் கொண்டே எதிரில் வந்தார் உல்லாசக் குழுவைச் சேர்ந்த ஒருவர்.

"ஏன் தேடுகிறீர்கள்? நான் வந்து கொண்டுதானே இருக்கிறேன்?"

"நீங்கள் ஒரு துப்பறியும் வேலையைச் செய்ய வேண்டியிருக்கிறது. எல்லோரும் காத்திருக்கிறார்கள்," என்றார் அவர் ஒரு மர்மப் புன்னகையுடன்.

ஏதும் விளங்காமல் அவருடன் தடதடவென்று படியிறங்கிக் கீழே வந்தார் சுப்பிரமணியம். படகில் ஏற வேண்டிய இடத்தில் அவருடைய தோழர்கள் ஒரு சிறு கும்பலாக, வட்டமாய்க் கூடி நின்றிருந்தார்கள்.

"சுப்பிரமணியம் வந்துவிட்டார். வழி விடுங்கள்," என்றார் அவரை அழைத்துச் சென்றவர்.

கும்பல் நகர்ந்த போது, நடுவே இருப்பது ஓர் ஏழெட்டு வயதுச் சிறுமி என்பது தெரிந்தது. பிச்சைக்காரப் பெண். எண்ணெய் கண்டு பல மாதங்களாகியிருந்த முடியை அள்ளி முடிச்சுப் போட்டிருந்தாள். பாவாடையிலும் சட்டையிலும் கணக்கற்ற கிழிசல்கள். முகம் அகலமாய், செம்பட்டையாய் இருந்தது. அழுதழுது கன்னங்களில் உவர்க் கோடுகள் உலர்ந்திருந்தன. கண்கள் சிவந்திருந்தன.

"பாவம், எங்கிருந்து வந்தது, என்ன சொல்கிறது என்று எதுவும் புரியவில்லை. இவள் தமிழ் பேசுகிறாள் என்று நினைக்கிறேன். இங்குள்ள பிச்சைக்காரர்கள் இதைக் கேலி செய்து அடித்து இம்சை பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இதனுடன் பேசிப் பாருங்கள்," என்றார் விஷ்ணுதாஸ்.

சுப்பிரமணியத்துக்கு, அத்தனை கவலைகளுக்கும் நடுவில், இது ஒரு பெருமையான பதவியாக இருந்தது. தன் ஊர்க்காரப் பெண் இங்கே பிச்சைக்காரியாகத் திரிகிறதே என்ற அவமானம் ஒரு பக்கம் இருந்தாலும், மறுபக்கம் ஒரு தமிழ்ச் சிறுமியைச் சந்தித்த சந்தோஷமும் ஏற்பட்டது.

"என்னம்மா, நீ மெட்ராஸா?" என்று அதனிடம் குனிந்து விசாரித்தார்.

"ஆமாங்க," என்று கண்ணைக்

## கோபமா? கையைப் பிசைந்து கொள்ளுங்கள்



'உங்களுக்குக் கோபம் வரும்போது, வேகமாக உள்ளங்கையை ஐந்து முறை திறந்து மூடுங்கள். உங்களுடைய கோபம் கரைந்து போய்விடும். எவ்வளவு இறுக்கத்துடன் உள்ளங்கையை மூட முடியுமோ மூடி, முழு வலிமையையும் செலுத்தித் திறவுங்கள். திரும்பவும் மூடித் திறக்கவும். சிறிது நேரத்தில் உங்கள் கோபம் எங்கு போயிற்று என்று நீங்களே ஆச்சரியமடைவீர்கள்.

—ஆசார்ய ரஜனீஷ்.

கசக்கினாள் அவள்.

''மெட்ராசிலிருந்து இவ்வளவு தூரம் எப்படி வந்தே?''

அவள் தொலைவில் கையைக் காட்டினாள். ''கல் உடைக்கிறோங்க. என் அப்பா அம்மாவோட வந்தேன். அங்கே தான் இருக்கிறோம். சும்மா இப்படி வந்தேன். வழி தவறிப் போச்சுங்க. இங்கே இருக்கிற பிச்சைக்காரங்க என்னை அடிக்கிறாங்க.''

எல்லாரும் அவர்களுடைய சம்பாஷணையைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள் ஆவலுடன்.

சுப்பிரமணியம் விஷ்ணுதாசிடம் திரும்பி, ''இங்கே குவாரி ஏதாவது இருக்கிறதா என்ன? கல்லுடைக்கிற குவாரி?''

''ஆமாம். அதோ அந்தச் சாலை வழியே ஒரு மைல் போனால், ஒரு காண்ட்ராக்டர் ஆட்களை வைத்து வேலை பார்க்கிறார். எல்லாம் கொத்தடிமை—பாண்டட் லேபர்,'' என்றார் விஷ்ணுதாஸ்.

சுப்பிரமணியத்துக்குத் தன் ஊர்ப் பெண்ணை இப்படி அனாதையாக விட்டுவிட்டுப் போக மனம் வரவில்லை. ''இதே பாதைதானே? நான் கொண்டு போய் விட்டுவிட்டு வருகிறேன்,'' என்றார்.

''சீக்கிரம் வாருங்கள். நாங்கள் இங்கே உட்கார்ந்திருக்கிறோம்,'' என்று கையைக் கழுவி விட்டார் விஷ்ணுதா[illegible]

குன்றுப் பாதைகளில் மேலும் கீழும் இறங்கி அவர்கள் நடந்தார்கள். கல்லும் முள்ளுமான சாலை. கூடவே நர்மதை சலசலத்து வந்து கொண்டிருந்தது தான் கண்ணுக்கு ரம்மியமான ஒரே இயற்கைக் காட்சி. அந்தச் சிறுமி வளவளவென்று பேசிக் கொண்டே வந்தாள்.

நடக்க, நடக்க, கல் உடைக்கும் சத்தங்கள் மெல்லியதாகக் கேட்கத் தொடங்கின. ''எங்க இடம் வந்திட்டது,'' என்று குதித்துக் கொண்டு புறப்பட்டாள்.

''இனிமேல் நீயே போயிடுவியா?''

''ஓ!''

அவர் பார்த்துக் கொண்டு நின்றார்.

அந்தச் சிறுமி நேரே போகாமல், பக்கத்து வளைவில் திரும்பினாள்.

''ஏய், அங்கே எங்கே போகிறே?''

''சாமியாரைப் பார்த்துக் கும்பிட்டுவிட்டுப் போகிறேன்,'' என்ருள் அவள்.

''சாமியாரா?''

''ஆமாங்க. நல்ல சாமியார். நாங்க தினம் தினம் பார்த்துக் கும்பிடுவோம். தொண்ணூறு கொடுப்பாரு.''

மனத்துக்குள் ஏதோ ஓர் உந்ததுதல் உதிக்க, அவள் பின்னுலேயே சுப்பிரமணியமும் நடந்தார்.

இரண்டு குன்றுகளுக்கு நடுவே ஓர் ஒற்றையடித் தடம் சென்றது. அதன் வழியே அந்தச் சிறுமி நடக்க, அவரும் பின் தொடர்ந்தார். ஒரு சிறிய மரத்தின் கீழ் உட்கார்ந்திருந்த அந்தச் சாமியாரைக் கண்டார்.

யாரும் சொல்லவில்லை. எந்தச் சான்றும் இல்லை. ஆனுலும் அவர் மனத்துக்குத் திட்டவட்டமாகத் தெரிந்துவிட்டது. இவர்தான் அந்த இந்தோர் மஹந்த் என்று.

''வாம்மா,'' என்று இந்தியில் அவளை வரவேற்று, ஒரு சுருக்குப் பையிலிருந்த திருநீறு எடுத்துக் கொடுத்தார் அவர். அவள் அதை நெற்றியில் பூசிக்கொண்டு ஓட்டம் பிடித்தாள்.

சுப்பிரமணியம் அவரையே பார்த்தபடி நின்ருர்.

புராணப் படங்களில் அவர் பார்த்திருக்கும் பழைய காலத்து முனிவரைப் போல் அவர் இருந்தார். வெள்ளை வெளேரென்ற தாடி. நீண்டு இருபுறமும் தொங்கும் வெள்ளை முடி. அகன்ற முகம். நெற்றி நிறைய விபூதி பூசிக் கொண்டு, பெரிய குங்குமப் பொட்டு வைத்திருந்தார். இடையில் சிவப்புச் சாயமுள்ள வேட்டியைக் கச்சமாக அணிந்திருந்தார். இரண்டு புஜங்களிலும் செம்புத் தாயத்தைக் கறுப்புக் கயிற்றில் கட்டியிருந்தார். வயது ஐம்பதைத் தாண்டியிருந்த போதிலும் தோளும் மார்பும் இரும்பில் செய்த மாதிரி கட்டுடன் விளங்கின. கண்களிலிருந்து புறப்பட்டு வரும் ஒரு தீட்சண்ணியம், கூர்ந்து பார்ப்போரைச் சுட்டெரித்து விடுவது போல இருந்தது.

தன்னையறியாமல் பய பக்தியுடன் விழுந்து விழுந்து நமஸ்காரம் செய்தார் சுப்பிரமணியம்.

''எங்கேயிருந்து வருகிருய்?'' என்று சுத்தமான ஆங்கிலத்தில் கேட்டார்

அவர்.

''தாங்கள்தான்..... இந்தோர் மஹந்த் என்று.....''

''ஆமாம். உட்கார்.''

''உங்கள் தம்பி, சுவாமிஜி. மாண்டுவுக்குப் போயிருந்தேன். ஓங்காரேஷ்வர் வட்டாரத்தில் நீங்கள் இருப்பதாகச் சொன்னர். ஆனல் எங்கே உங்களைப் பார்ப்பது என்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தேன். அந்தச் சிறுமி தற்செயலாய் என்னை இங்கே அழைத்து வந்தாள்.

இந்தோர் மஹந்த் புன்னகை செய்தார். ''எதற்காக என்னைத் தேடிக் கொண்டிருக்கிறாய்?''

''சுவாமிஜி, தாங்கள் மெட்ருஸ் வந்திருக்கிறீர்களா?''

''இந்தியாவில் நான் போகாத இடம் கிடையாது. உனக்கு என்ன வேண்டும்?''

''சுலோசனு என்ற பெண்ணின் தந்தை நான். சென்னைக்கு நீங்கள் வந்திருந்த போது அவள் உங்களை ஏதோ பிரசினைக்காகப் பார்க்கச் சென்றிருந்தாள்....''

''சுலோசனு?'' இந்தோர் மஹந்த்தின் புருவங்கள் நெற்றிக்கு ஏறின.

''ஆமாம் சுவாமிஜி. கல்லூரி மாணவி. இப்போது அவள் உயிருடன் இல்லை. ஜுரத்தில் இறந்து விட்டாள் திடீரென்று.''

இந்தோர் மஹந்த் யோசனையில் ஆழ்ந்தார்.

''என் பெண் என்ன பிரசினைக்காகத் தங்களைப் பார்க்க வந்தாள் என்று தெரிந்து கொள்ள வேண்டும். அவள் அந்த விஷயத்தைச் சொல்லாமலேயே இறந்து போய்விட்டாள்,'' என்றார் சுப்பிரமணியம்.

இந்தோர் மஹந்த் நீண்ட நேரம் மௌனமாக இருந்தார். அவருடைய கண்கள் மூடியபடி இருந்தன. அங்கொன்று இங்கொன்றாக வளர்ந்திருந்த மரங்கள் மெல்லிய கிளைகளை மெதுவே அசைத்தவாறிருந்தன. சில்லிப்பு ஏறத் தொடங்கியது. ஆனல் இன்னும் இருட்டவில்லை. நல்ல வெளிச்சம் பரவியிருந்தது.

பல நிமிடங்களுக்குப் பிறகு இந்தோர் மஹந்த் கண்ணைத் திறந்தார். அவருடைய உதட்டிலிருந்த புன்சிரிப்பு மறைந்தது, ஆழ்ந்த அனுதாபம் தெரிந்தது. கண்களில் ஒரு கனிவு தென்பட்டது.

''சுலோசனு.... ஆமாம்.... நினைவிருக்கிறது... அந்தக் குழந்தை, தான் செய்துவிட்ட ஒரு தவறுக்காக என்னிடம் வருத்தப்பட்டாள். அதற்கு நான் ஏதாவது வழி செய்ய வேண்டுமென்று வேண்டிக் கொண்டாள்....''

''என்ன தவறு சுவாமிஜி?''

அவர் மறுபடியும் ஒரு விநாடி கண்களை மூடிக் கொண்டு யோசித்தார். பிறகு சுப்பிரமணியத்தை நோக்கினர்.

''சுபா என்று ஒரு தோழி அவளுக்கு இருந்தாள் இல்லையா?''

''ஆமாம் சுவாமிஜி.''

''அவளுக்குத்தான் ஒரு தவறு செய்துவிட்டாள். உனக்கு அவகாசம் இருக்கிறதா?''

சுப்பிரமணியம் தன் கைக் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டார். மணி ஐந்தே கால்தான் ஆகியிருந்தது. ஆறு மணிக்குத்தான் படகில் ஏறி மகேஷ்வருக்குத் திரும்புவதாக அவர்கள் திட்டம்.

''இந்த விஷயத்தைக் கேட்பதற்காகத்தானே சுவாமிஜி நான் அலைந்து கொண்டிருக்கிறேன்? சொல்லுங்கள்,'' என்றார்.

இந்தோர் மஹந்த் சொல்லத் தொடங்கினர்.

(தொடரும்)



ரொம்பப் பிரபலமான எழுத்தாளர்; ஆனல் வாழ்நாளில் எழுதியதென்னவோ ஒரே ஒரு சிறுகதைதான்!

யார் அந்த அதிசய எழுத்தாளர்?

தினமணி ஆசிரியர் ஏ.என். சிவராமன்.

அவர் நீண்ட காலம் முன்பு எழுதிய ஒரே ஒரு சிறுகதையின் தலைப்பு:

'நாலு அவுன்ஸ் பிராந்தி!'

யார்?




“ சதா லூட்டி அடிக்கும் என் குழந்தைகளுடனும், எளிதில் எதையும் லேசில் ஒப்புக்கொள்ளாத என் கணவருடனும், என் ஆறு வருஷ மணவாழ்க்கையில் எனக்குத் தெரிந்தது ஒன்று இரண்டு விஷயம்தான்.

ஷாப்பிங்கையே எடுத்துக் கொள்ளுங்களேன்.

நான் எந்தப் பொருளையும் கேட்டுப் பார்த்துதான் வாங்குவேன். அதுவும் என் மனதிற்கு திருப்தி ஏற்பட்டு, குடும்பத்திற்கு உதவுகிற சிறந்த பொருளாக இருந்து, சரியான விலையில் இருந்தால்தான் வாங்குவேன்.

உதாரணமாக என் கணவருக்கான பேண்ட் துணியாகட்டும், எனக்கான தையல் மிஷினாகட்டும், என் குழந்தைகளுக்கான விளையாட்டுச் சாமான்களாகட்டும் அல்லது விலை உயர்ந்த பொருட்களான டி.வி., ஃப்ரிட்ஜ், சமையல் சாதனங்கள் - இவைகளில் எதுவானாலும் சரி, எல்லாவற்றுக்கும் மேலே சமையல் பாத்திரங்கள்...

ஆமாம் அதிலேயும்தான்—இவ்விஷயங்களில் நான் தவறியதேயில்லை.

சமையல் பாத்திரங்கள் வாங்க எப்பொழுது கடைக்குப் போனாலும் அப்பாத்திரங்கள் சேலம் எவர்சில்வரில் செய்ததுதானா என்று குறிப்பாக கவனித்து வாங்குவேன். சேலம் எவர்சில்வரில் செய்த பாத்திரங்கள், கரும்புள்ளிகளோ, கறைகளோ பிடிக்காது. அப்பாத்திரங்கள் என் வீட்டு சமையலறையை ஒளிதுலங்கச் செய்கிறது. வருடக்கணக்கில் உபயோகித்தாலும் பளபளப்பு போவதில்லை. வாழ்நாளிற்கும் உழைக்கக் கூடியவை. நான் எனக்குத் தெரிந்தவர்களிடம் சொல்வதெல்லாம் சேலம் எவர்சில்வர் பாத்திரம் என்று கேட்பதோடு நில்லாமல், அதையே வேண்டும் என்று வற்புறுத்தி வாங்குங்கள் என்பதுதான். ”

**ஸ்டீல் அத்தாரிட்டி ஆஃப் இந்தியா லிமிடெட்**

ஒரு இந்திய அரசு நிறுவனம்

**சேலம் உருக்காலை**

சேலம் 636 013 தமிழ் நாடு

# சேலம் எவர்சில்வர். நம்பிக்கைக்குப் பாத்திரமான பாத்திரங்கள்.

# என்னைத் தவிர

**17**

மகள் சுலோசனு இன்னும் கொஞ்ச நாளில் விஷக் காய்ச்சலில் அற்பாயுளாக போய்விடப் போகிறுள் என்பது தெரியாமல், அவளிடம் படிக்க வேண்டும், முன்னுக்கு வர வேண்டும் என்றெல்லாம் வற்புறுத்திக் கொண்டிருந்தார்.

''பரீட்சை வருகிறதம்மா. சுலோ, நீ படிப்பில் ரொம்ப சுலோ,'' என்ருர் ஒரு நாள்.

''அறுதப் பழசான ஜோக்கப்பா இது. கேட்டுக் கேட்டு என் காது புளித்து விட்டது,'' என்ருள் சுலோசனு.

''ஜோக் அடிக்கவில்லே சுலோ. நிஜமாகவேதான் சொல்கிறேன்.''

''இங்கே இருந்தால் நிமிஷத்துக்கு ஒரு முறை கூப்பிட்டுக்கிட்டேயிருப்பீங்க. அப்புறம் நான் எப்படிப் படிக்கிறது?''

''சரிம்மா. உன்னேச் சாப்பாட்டுக்கு வா என்று கூப்பிடுவதைத் தவிர வேறெதற்கும் கூப்பிடமாட்டேன். ஜென்டில்மேன்ஸ் அக்ரிமெண்ட். சரிதானு?''

சுலோசனு சிரித்தாள். ''அக்ரிமெண்ட்டுகளுக்குள் ஜென்டில்மேன்ஸ் அக்ரிமெண்ட்தான் ரொம்ப மோசம். யார் வேண்டுமானுலும் எந்த நிமிஷத்திலும் ஒப்பந்தத்தை மீறி விடுவார்கள்.''

''பின்னே என்னதான் செய்யட்டும்?''

''ரொம்ப நாளாய் என் சினேகிதி சுபா தன் வீட்டுக்கு என்னேக் கூப்பிட்டுக் கொண்டிருக்கிருள். ராத்திரி அங்கே போய் விடுகிறேன். அவள் படிப்பில் புலி. அவளுடன் சேர்ந்து படித்தால் பிரமாதமாய் மண்டையில் ஏறும்...''

வாசலிலிருந்து குரல் வந்தது: ''சுலோசனு!''

சுபா உள்ளே வந்தாள்.

எதிர்பாராத விதமாகச் சுபாவே வந்துவிட்டாள் அவள் வீட்டுக்கு. தன் புத்தகங்களேயும் நோட்டுக்களேயும் எடுத்துக்கொண்டு.

''அடடே, வாம்மா வா! இப்பத்தான் உன்னேப் பத்திப் பேசிட்டிருந்தோம்,'' என்று சுப்பிரமணியம் வரவேற்ருர்.

''என்னடி அதிசயமாயிருக்கு?'' என்ருள் சுலோசனு.

''இரண்டு நாளேக்கு உன் வீட்டிலேதான் அம்மா பாடியிறங்கப் போகிருள்,'' என்ருள் சுபா.

''இரண்டு நாளென்ன, இரண்டு மாசமானுலும் இரு. ஆனுல் இந்தத் திடீர்த் திட்டத்துக்குக் காரணம் என்ன என்று மட்டும் சொல்லிவிடு.''

''எங்கள் தெருவில் ராம பஜனே மண்டலின்னு ஒரு சங்கம் இருக்கு. என் வீட்டுக்குப் பக்கத்திலே ஒரு பிள்ளேயார் கோவில் இருக்கு இல்லேயா? அங்கே அலங்காரப் பந்தல் போட்டு, கச்சேரி, காலட்சேபம் எல்லாம் பண்ணருங்க. ராம நவமி உற்சவம் கொண்டாடருங்களாம்.''

''அதனுலே?''

''அஞ்சு நிமிஷம் அமைதியாய் நிம்மதியாய்ப் படிக்க முடியவில்லே. லவுட்ஸ்பீக்கர் ராட்சசன் நாள் பூரா கத்துகிருன்.''

''இருந்தாலும் ரொம்ப அக்கிரமம்டி சுபா,'' என்ருள் சுலோசனு. ''பரீட்சை பயத்திலேதான் இப்படியெல்லாம் பண்ணனுமா?''

கிருஷ்ணகுமார்

''அவர்களைக் குத்தம் சொல்லாதே. யார் வீட்டிலே பரீட்சைக்குப் படிக்கிறுங்க, எவர் வீட்டிலே நோயாளி இருக்கிறுங்கன்னெல்லலாம் பார்த்துட்டிருந்தால் எந்த உற்சவமும் நடத்த முடியாது,'' என்று சுபா சிரித்தாள்.

''இந்தாம்மா. முதல்லே காப்பி சாப்பிட்டுவிட்டு, அப்புறமாய்ப் பேசுங்க,'' என்று காப்பி டம்ளர்களைக் கொண்டு வந்து அவர்கள் முன்னே வைத்தார் சுப்பிரமணியம்.

''ஐயையோ, நான் பேசறதுக்காக வரல்லே, அங்க்கிள். படிக்கிறதுக்காக வந்திருக்கிறேன்,'' என்றுள் சுபா.

''படிப்புப் பாட்டுக்குப் படிப்பு, பேச்சுப் பாட்டுக்குப் பேச்சு,'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார் சுப்பிரமணியம்.

''காமர்ஸ் படிக்கலாம் முதலில்,'' என்று தடிமனன பெரிய புத்தகத்தை எடுத்தாள் சுபா.

''நீ எம்டனுச்சே? எல்லாத்தையும் உரு அடிச்சிருப்பே? இல்லையா?''

சுபாவுக்குப் பெருமையாயிருந்தது. அவளுடைய வலுவே மனப்பாடம்தான். இரண்டு தடவை படிப்பாள். நெட்டுரு ஆகிவிடும். அது எவ்வளவு பெரிய பகுதியாக இருந்தாலும் சரி.

''சுலோ, நீயும் உனக்குத் தெரிஞ்ச வரையில் ஒப்பி. புத்தகத்தை வைத்துக்கொண்டு சரியாயிருக்கான்னு நான் பார்க்கிறேன்.''

ஒரு மணி நேரம் அவர்கள் மாறி மாறிப் படித்தார்கள். அப்போது மணி ஒன்பது.

சுப்பிரமணியம் அறைக்குள் வந்து, ''ஏம்மா சுபா, உனக்குக் கடைசி பஸ் போயிடப் போகிறதே?'' என்றுர்.

''அங்க்கிள், வர்றப்போ நான் என்ன கொண்டு வந்தேன்னு நீங்க பார்க்கலியா?''

''ஏன் பார்க்காமல்? புத்தகம் கொண்டு வந்திருந்தாய்.''

''புத்தகங்களுக்கு அடியில் ராத்திரி கட்டிக்கிறதுக்காகப் புடவை பிளவுஸ் எடுத்து வந்திருக்கேன்.''




## உங்கள் ஓய்வு காலத்தில் நிம்மதியாக வாழ்க்கை நடத்த பணமும் தேவை

உங்கள் ஓய்வு காலத்தை நிறைவான மனத்துடன் கழிக்க எங்கள் பரம்பரா டெபாசிட் திட்டம் உதவுகிறது. மாதம் ரூ. 100/– வீதம் 120 மாதங்களுக்கு நீங்கள் சேமிக்கும் தொகை உங்களுக்கு நிரந்தரமாக மாதம் ரூ. 197–80 வீதமோ அல்லது மொத்த தொகையான ரூ. 21772–00 ஆகவோ திரும்பக் கிடைக்கும். ஓய்வு காலத்தில் எவ்வளவு மகிழ்ச்சி !

எங்கள் பரம்பரா டெபாசிட் திட்டம் உங்களுக்கு அளிக்கும் நன்மைகள் இதோ கண்கூடு.

| மாதச் சேமிப்புத் தொகை ரூ. | சேமிக்கும் மாதங்கள் | மொத்த சேமிப்புத் தொகை ரூ. | 121 மாதங்களுக்குப் பிறகு நாங்கள் அளிக்கும் | |
|---|---|---|---|---|
| | | | மாதத் தொகை ரூ. – பை. | மொத்தத் தொகை ரூ. |
| 100-00 | 120 | 12,000-00 | 197-80 | 21772-00 |
| 200-00 | 120 | 24,000-00 | 395-60 | 43544-00 |
| 400-00 | 120 | 48,000-00 | 791-20 | 87088-00 |

மேலும் விவரங்களுக்கு உங்கள் அருகாமையிலுள்ள எங்கள் கிளையை அணுகுங்கள்.

கூட்டு சேர்ந்து நன்கு வளர்வோம்.



தி
**வைஸ்யா பாங்க் லி.**

பதிவு அலுவலகம் : அவென்யூ ரோடு, பெங்களூர்-560 002.
நிர்வாக அலுவலகம்: 72, செண்ட் மார்க்ஸ ரோடு, பெங்களூர்-560 001.
சேர்மன்: ரமேஷ் கெல்லி



# இந்த ஆடவர்களிலே நீங்கள் மிகவும் யாரைப்போல் தோன்றுகிறீர்கள்?



## அடைந்திடுங்கள் சக்தியுள்ள ஆடவருக்கான உடற்கட்டை. 14 நாட்களிலேயே பலன் கிட்டிடும்—அப்படி இல்லாவிட்டால் பணம் வாபஸ்.

உங்கள் படுக்கையறையின் கண்ணாடிமுன் நின்று கண்டிடுங்கள் உங்கள் உடற்கட்டு அழகினை. ஆண்கள் பொறாமைப்படும்படியும் பெண்கள் பாராட்டும்படியும் இருக்கிறதா? இல்லாவிட்டால் இதோ உங்களுக்கு நல்லதோர் செய்தி—உடற்கட்டினை வாரங்களிலே வழங்கிடும் வழி! உருக்கு போன்ற உடல் தசை—ஆடவருக்கான அழகிய முண்டா, விருட்சத்தின் கிளை போன்ற தொடை ஆகிய உங்கள் கனவு நனவாகிடுவதற்கு ஒரு புதிய வழி—புல் ஒர்க்கர். ஐசோடானிக்/ஐசோமெட்ரிக் என்ற புதிய விஞ்ஞான தத்துவங்களை உபயோகித்து உங்கள் உடலுக்கு வலிவையும் பொலிவையும் அளிக்கிறது—பாரம்பரிய முறைகளைவிட விரைவாக அத்துடன் 14 நாட்களிலேயே நீங்கள் பலனைக் காணமுடியும்.

உடற்கட்டு நிபுணர்கள் உங்களுக்கு விளக்குகின்றனர்: இந்த 7 பயிற்சிகள் எப்படி சக்தியுள்ளதாக்குகிறது உங்கள் உடலை நாள்தோறும் 49 நொடிப் பயிற்சியிலே!

முன்னாள் உலக சாம்பியன் லென்ஸெல் 7-நொடி பயிற்சிகளை புல் ஒர்க்கர் 3-மூலம் செய்து காட்டுகிறார்.





**சவால்!** அன்றாடம் 5 நிமிடம் புல் ஒர்க்கர் மூலம் 14 நாட்களுக்குப் பயிற்சி செய்யுங்கள். அதன்பின், நீங்கள் வலிவாக, திடமாக, துடிப்பாகத் தோன்றவோ உணரவோ இல்லை யென்றால் எங்களிடம் வாபஸ் செய்துவிடுங்கள் புல் ஒர்க்கர் ஒரு சைபா கூடச் செலவில்லை!

### பவர் மீட்டர்



உங்கள் தசையின் கட்டுறுதி நாள்தோறும் உருவாகுவதை கண்ணாரக் காணுங்கள்.







புல் ஒர்க்கர் கேரியிங் கேஸ் 24 பக்க புரோக்ஷூர் படவிளக்கமுள்ள அட்டவணை. ஊட்டச்சத்து மற்றும் பயிற்சிமுறை வழிகாட்டி

புல் ஒர்க்கர்
மேத்தா மஹால், 15, மேத்யூ ரோடு, பம்பாய்-400 004

### 14 நாட்கள் இல்லத்திலே இலவச பரிட்சார்த்த கூப்பன்.

புல் ஒர்க்கர் 208-PE-T
மேத்தா மஹால், 15, மாத்யூ ரோடு, பம்பாய்-400 004.
இலவச அன்பளிப்புடன், புல் ஒர்க்கர்-3 அனுப்பவும்.

KU-25

பொருத்தமான கட்டத்தில் ☑டிக் செய்யவும்

☐ ரெஜிஸ்டர்ட் போஸ்ட் பார்சலில் அனுப்பவும். நான் ரூ 314/- டிராஃப்ட்/இ.போ.ஆ./ம.ஆ. எண்.....தேதி.........

☐ வி.பி.பி. மூலம் அனுப்பவும். நான் டெலிவரி கிடைத்ததும் தபால்காரரிடம் ரூ. 314/- செலுத்துகிறேன் என்பதற்கு உறுதியளிக்கிறேன்.

பெயர் ........................................

முகவரி ........................................

........................................ பின் ............

கையொப்பம் ........................................



இத்தாலிய ஓவியர் மாடிக்லியானி நிர்வாணப் படக் கண்காட்சி நடத்திய போது, 'ஆபாசம்' என்று அரசாங்கம் தடை விதித்தது.

இது நடந்தது 1917'ல்.

சென்ற வாரம், தடை செய்யப்பட்ட படங்களில் ஒன்று ('கனவு காண்பவள்') விலை போயிற்று. அமெரிக்கர் ஒருவர் வாங்கியிருக்கிறார்.
விலை: சுமார் ரூ. 5 கோடி.

ஆதாரம்: நியூஸ்வீக்

---

சுலோசனா கேலியாக, "ஐயோ! ராவும் பகலும் இங்கேயே தங்கி என்னை அறுஅறுன்னு அறுக்கப் போறியா?" என்றாள்.

சுப்பிரமணியம் கண்டித்தார். "என்ன சுபா, அறு கிறுன்னெல்லாம்? கன்னிப் பெண்கள் சொல்லக்கூடிய வார்த்தையா?"

"நெருப்புன்னா வாய் வெந்து விடாதுப்பா."

"சரி, சரி. சுடச் சுடச் சமையல் பண்ணியிருக்கிறேன். கையைக் காலைக் கழுவிக்கிட்டு வந்து உட்காருங்க."

சுபா தாழ்ந்த குரலில், "ஊருக்குப் போயிருக்காங்க இல்லே உன் அம்மா? உன் அப்பாவா சமையலெல்லாம் செய்யறார்?" என்று விசாரித்தாள்.

"ஆமாம். அம்மா இங்கே இருந்தால் மட்டும் என்னத்தைச் செய்துவிடப் போகிறாள்? பாவம், நிரந்தர நோயாளி!" என்றாள் சுலோசனா. "வீட்டு வேலை பூரா என் அப்பாதானே?"

குழாயடியில் இருவரும் முகம் கழுவிக்கொண்டபோது, படிப்பைப் பற்றிய 'டென்ஷன்' குறைந்து, அரட்டை தலை தூக்கியது.

சோப்பை முகர்ந்து பார்த்தாள் சுபா. "என்னடி இது, வாசனை ஆளைத் தூக்குது?"

"ஃபாரின் சோப். துபாயிலேயிருந்து என் மாமா பிள்ளை வாங்கிட்டு வந்தார்."

அவளை விலாவில் இடித்தாள் சுபா. "ஓகோ! கதை அப்படிப் போறதா? இன்னும் என்னென்னடிம்மா வாங்கிட்டு வந்து தந்தார்? பதிலுக்கு நீ என்ன கொடுத்தே?"

"சீ, உளறாதே. அவருக்கு வயது ஐம்பத்தைந்து," என்று சிரித்தாள் தோழி.

தேங்காய்ப் பூத் துவாலையில் முகத்தைத் துடைத்துக் கொண்டபோது சுலோசனாவின் முகம் தங்கத் தட்டாகப் பிரகாசித்தது. சுபாவுக்குப் பொறாமையாக இருந்தது.

"என்னடி பார்க்கிறே?" என்றாள் சுலோசனா.

"ஒண்ணுமில்லே. உனக்குப் புருவம் ரொம்ப அடர்த்தியாச்சே? பென்ஸில் லைன் மாதிரி எப்படி ஆயிற்று?"

"எழும்பூருக்குப் போய், பியூட்டி பார்லர் எங்கேயிருக்குன்னு தெருத் தெருவாய்க் கூவு, நான் புருவத்தை வெட்டிக்கிற அழகுக் கலை கட்டிடம் தெரியும்."

"த்ரெட்டிங்கா?"

"ஆமாம். உனக்குக் கூடத்தான் புருவம் ரொம்ப அடர்த்தியாய், சினிமாவில் வரும் வில்லன் மாதிரி இருக்கு. நீ த்ரெட்டிங் பண்ணிக்கிறதில்லையா? ஆறே ரூபாய்தான் சார்ஜ்."

"ஒரே ஒரு தரம் போனேன். ஜன்மத்துக்கும் போதும்."

"ஏண்டி?"

"புருவத்திலே ஒவ்வொரு மயிர்க்காலாகப் பிடித்து இழுக்கிறப்ப உயிர் போய் உயிர் வருது. என் புருவத்தை வெட்டிக்கிறதுக்காக ஐயாயிரம் ரூபாய் அவங்க கொடுத்தால் கூட எனக்கு வேண்டாம்."

"பேசி முடிச்சாயிட்டுதா, இல்லே இன்னும் பாக்கியிருக்கா?" என்று குரல் கொடுத்தார் சுப்பிரமணியம்.

சமையல் பிரமாதமாயிருந்தது. ஒரு பிடி பிடித்தாள் சுபா.

"அங்கிள் வெங்காய சாம்பார் இன்னொரு கரண்டி ஊற்றுங்க. எங்க வீட்டிலே அம்மா இதைச் செய்யறதேயில்லை. ஆசாரம். யாராவது விருந்தாளிகள் வந்தால் எதிர் வீட்டிலே பண்ணச் சொல்லி எடுத்து வருவாள்," என்றாள் சுபா.

"ஒரு கரண்டி என்ன, மூணு கரண்டி போட்டுக்க," என்று மகிழ்ச்சியுடன் பரிமாறினார் சுப்பிரமணியம்.

வயிறு நிறையச் சாப்பிட்டு விட்டதால் சுபாவுக்குத் தூக்கம் கண்ணைச் சுழற்றியது.

"ஏய், என்னடி இப்பவே சாமியாடறே? ராத்திரி பூரா முழிச்சிட்டுப் படிக்கிறவளா நீ?" என்று சுலோசனா கோபித்தாள்.

"உன் அப்பாவைப் போய்க் கேள். அருமையான சமையல் தயாரித்து, மலைமலையாய்க் கொட்டிட்டார்!"

# மண்ணுண்ணி



## மாப்பிள்ளை

கம்பரிடம் யாரோ ஒரு விறகு தலையன் வந்து, "எனக்கு அரசனிடம் பரிசு வாங்கித் தர வேண்டும்," என்று சொன்னானாம். "எதையாவது பாடிக் கொண்டு வா; பரிசு வாங்கித் தருகிறேன்," என்று அந்தக் கவிச் சக்கரவர்த்தி சொன்னாராம். அவனுக்குத் தமிழிலே பயிற்சி இல்லை. எங்கோ நடந்து போகும்போது, வீதியில் சிறு பிள்ளைகள் சிறு வீடு கட்டி விளையாடிக் கொண்டிருந்தார்களாம். ஒரு பெண் ஓர் ஆண் பிள்ளையை உட்கார்த்தி வைத்து, "நீதான் மாப்பிள்ளை; நான்தான் உன் மனைவி; இந்தா இதைச் சாப்பிடு," என்று ஒரு சிறிய இலையில் மண்ணைப் படைத்தாள். அதைக் கண்ட விறகுத் தலையன், "மண்ணுண்ணி மாப்பிள்ளையே," என்று சொல்லிக் கொண்டான். அதையே தன் கவியின் தொடக்கமாக வைத்துக் கொண்டான். பிறகு ஒரு காக்கை கத்தியது. "காவிறையே," என்பதைச் சேர்த்துக் கொண்டான். குயிலின் குரல் காதில் பட்டது. "கூவிறையே," என்று பாடினான். பிறகு அங்கே பெருச்சாளி ஒரு கோவிலில் ஓடியது. "உங்களப்பன் கோவிலில் பெருச்சாளி," என்று பாட்டை நீட்டினான். எதிரே ஒரு நண்பன் வந்தான். இந்தப் பாட்டை விறகுத் தலையன் கூறவே, "என்னடா இது? கன்னா பின்னாவென்று இருக்கிறது. அரசன் பெயர் வேண்டாமா?" என்று கேட்டான். அவன் சொன்னதையும் சோழன் பெயரையும் சேர்த்து, "கன்னா பின்னா மன்னா தென்னா சோழங்கப் பெருமானே," என்று பாட்டை முடித்தான். "மண்ணுண்ணி மாப்பிள்ளையே காவிறையே கூவிறையே உங்களப்பன் கோவிலில் பெருச்சாளி கன்னா பின்னா மன்னா தென்னா—சோழங்கப் பெருமானே," என்ற அருமையான கவிதையைக் கம்பரிடம் போய்ச் சொன்னானாம்!

யாக உள்ள ஒன்று. அதை எதிர்த்துச் செயற்கையான மாத்திரைகளைச் சாப்பிட்டால் நம்ம உடம்பை நாமே கெடுத்துக் கொள்கிறோம் என்று அர்த்தம்.''

''ஆமாம் போ! பெரிய சோஷல் ஃபிலாசபர் வந்து விட்டாய்! இப்ப நீ சாப்பிடப் போகிறாயா இல்லையா?''

''தூர எறி!'' என்று வெடித்தாள் சுபா. ''தூக்கத்தை விரட்டுகிற மாத்திரை, மென்ஸ்ட்ருவேஷனை டிலே பண்ணுகிற மாத்திரை—இதிலெல்லாம் எனக்கு ஒரு வெறுப்பு.''

''ஓகே, ஓகே,'' என்றாள் சுலோசனா. ஆனால் மேலுக்குத்தான் அப்படிச் சொன்னாளே தவிர, உள்ளூர வேறொரு திட்டம் வைத்திருந்தாள்.

''சரி, டீ போட்டு எடுத்து வருகிறேன். அதையாவது சாப்பிடுவியா, இல்லை, அதுவும் இயற்கைக்கு விரோதம்னு சொல்லிடுவியா?''

''தாராளமாய் டீ கொண்டு வா,'' என்றாள் சுபா.

சமையலறைக்குச் சென்று டீ தயாரித்த சுலோசனா, இன்னொரு காரியம் செய்தாள்.

எறியாமல் கையில் வைத்திருந்த மாத்திரையைப் பொடி செய்து டீயில் நன்றாய்க் கலக்கினாள்.

சுபா தன் தோழியைச் சந்தேகிக்கவில்லை. ''டீ ரொம்ப ருசிடி,'' என்று பாராட்டிய வண்ணம் குடித்தாள்.

கொஞ்ச நேரத்தில் அவளுக்குள் வேறொரு சக்தி புகுந்துகொண்ட மாதிரி இருந்தது. கண்ணின் ரப்பைகள் கூர்மையாகக் குத்திட்டு நின்றன. புத்தகத்தில் எழுத்துக்கள் பெரிது பெரிதாய்த் தெரிந்தன.

''நீ போட்டுக் கொடுத்த டீயின் மகிமையே மகிமை! தூக்கம் போன இடம் தெரியலியே?'' என்று சுபா சொன்ன போது—

சுலோசனா தனக்குள் சிரித்துக் கொண்டாளே தவிர, எவ்வளவு பெரிய விபரீதத்தில் தன் தோழியைச் சிக்க வைத்திருக்கிறோம் என்பதை உணரவில்லை.

[தொடரும்]

''சரி, நோட்டையும் பென்சிலே யும் எடு,'' என்று உத்தரவிட்டாள் தோழி. ''ட்ரையல் பாலன்ஸ் போட்டு, டெபிட்டும் கிரெடிட்டும் அக்ரீ ஆகிறதா பார்க்கலாம்.''

கொட்டாவியை அடக்கிக் கொண்டே சுபா கணக்கைப் போட்டாள். அதற்குள்ளேயே நூறு தடவை தலே ஆடி விட்டது.

சுலோசனவுக்கு எப்படியும் பாடத்தைப் படித்தாக வேண்டும் என்ற ஆர்வம். புத்திசாலியான தோழி வந் திருக்கையில் அவளே முழுக்கப் பயன் படுத்திக்கொள்ள விரும்பினள்.

ஆனல் இவள் இப்படித் தூங்கி விழுகிருளே?

''டியே, பிராஃபிட் அண்ட் லாஸ் அக்கவுண்ட் போட்டு, பாலன்ஸ் ஷீட் தயா ரிக்கலாம்டி சுபா.''

''ம்... நாளேக் காலேயில் பார்த்துக்கலாம் சுலோ. ஒரு நிமிஷம் கூடக் கண்ணேத் திறந்து வைச்சுக்க என்னல் முடியலே. ஸாரி.'' மேஜை மீதே கவிழ்ந்து விட்டாள் சுபா.

அவளுக்கு ஒரு யோசனே தோன்றியது.

மேஜை செருகறையைத் திறந் தாள். முன்னே எப்போதோ வாங்கி வைத் தவை.

''இந்தா, இதைப் போட்டுக் கொள். தூக்கமெல்லாம் பறந்துவிடும்,'' என்றுள்.

''என்ன இது?''

''டெரிஜின் மாத்திரை. தூக்கம் முழிக்கணும்னு தோணுகிறப்போ இந்த மாத்திரை ஒண்ணு போடலாம். நம்ம காலேஜில் எத்தனேயோ ஸ்டுடண்ட்ஸ் உப யோகிக்கிறுங்க. அதுவும் பரீட்சை டயத்தில் இது மருந்துக் கடைகளில் ஏராளமாய் விற்பனேயாகும்.''

''நான்ஸென்ஸ்!'' என்று சுபா கோபித்தாள்.

''ஏண்டி?''

''இதோ பார், தூக்கம் என்பது மனிதனின் உடல் அமைப்பில் இயற்கை

---

அவர் அதைக் கேட்டுப் புன்முறுவல் பூத்தார்! அவனே அரசவைக்கு அழைத்துச் சென்ருர். அங்கே அவன் பாட லேச் சொன்னன். கேட்டவர்கள் நகைத்தார்கள். கம்பர் எழுந்து உரை கூறினர்.

''இதற்குப் பொருள் இன்ன தென்பதை ஆய்ந்து காண வேண்டும். நம்முடைய அரசரை முதலில் மன்மதனே என்று அழைத்திருக்கிருர் புலவர். மண்ணுண்ணி உலகத்தை உண்ட திரு மால்; மா—திருமகள். இந்த இருவருக்கும் புதல்வனுகிய மன்மதனே என்று பொருள் பட, 'மண்ணுண்ணி மாப் பிள்ளேயே!' என்று தொடங்கி இருக்கிருர். கா என்பது கற்பகம். அதற்கு இறைவன் இந்திரன்; ஆதலின் காவிறையே என்பதற்கு இந்திரன் என்று பொருள் கொள்ள வேண்டும். கூ என்பது பூமி. அதற்கு இறைவன் நம் பெருமான். உலகச் சக்கவரவர்த்தி என்பதையே கூவிறையே என்று உணர்த்தினர். 'உங்கள் தந்தை யாரும் சக்கரவர்த்தி' என்பதை 'உங்கள் அப்பன் கோ' என்ருர். அவர் வில்லில் பெரிய சிங்கம் போன்ற திறமையுடை யவர். 'வில்லில் பெரிசு ஆளி' என்று பிரிக்க வேண்டும். வில்லில் என்பது விலில் என்றும், பெரிது என்பது பெருசு என்றும் விகாரமாயின. கன்னு—கர்ணனே, பின்னு— அவனுடைய தம்பியாகிய தர்ம புத்திரனே. மன்னு—அரசனே, தென்னு—தென்னுட்டுத் தலேவனே. சோழங்கப் பெருமானே— சோழ நாட்டை அங்கமாயுடைய பெரிய வனே. இப்படிப் பொருள் கொள்ளும்படி பாடிய இப் புலவர் புலமையை நாம் பாராட்ட வேண்டும்,'' என்று உரை விரித் தார் கம்பர்.

அத்தோடு நிற்கவில்லே. அந்த உளறலே இன்ன வகைப் பாடல் என்று சொல்ல வேண்டுமே! ''இது இணேக்குறளாசிரியப் பா. ஏகாரத்தில் முடிந்திருக்கிறது,'' என்று கூறிச் சீரும் பிரித்துக் காட்டினராம்.

''மண்ணுணுண்ணி மாப்பிள்ளே யேகா
விறையே
கூவிறை யேஉங்க ளப்பன்
கோ வில்பெருச் சாளி
கன்னு பின்னு மன்னு
தென்னு சோழங் கப்பெரு மானே.''

—'கவி பாடலாம்' புத்தகத்திலிருந்து. கி.வா. ஜகந்நாதன் எழுதியது.



ஏன் கலக்கத்துடன் அந்த டாக்சியில் பயணம் செய்யவேண்டும்? ஆனால் அந்த முகங்கள் நினைவிருக்கட்டும். இது போன்ற நிலைமைகளை அவர்களால் உருவாக்கிவிட முடியும்.

இதற்கு மாறாக—இ. காங்கிரஸ் எப்போதுமே தேச நலன்களுக்காகவும், தேச எல்லைகளுக்காகவும், தேச ஒற்றுமைக்காகவும் போராடி வந்திருக்கிறது.

இ. காங்கிரஸ் ஒன்றே இந்த முள்வேலிகளைத் தகர்த்தெறியும் சக்தி படைத்தது. இ. காங்கிரஸ் ஒன்றே 'தேசம் அனைத்தும் ஒன்று' என்ற கண்ணோட்டத்துடன் போற்றியும் நடத்தியும் வந்துள்ளது. இ. காங்கிரஸ் ஒன்றே இந்தியா நிலைகுலைந்து, சிதறிச் சின்னா பின்னமாகி, ஒன்றோடு ஒன்று மோதி, எல்லாமே அழிந்து போகக் கூடிய அவலத்தைத் தடுக்கும் வல்லமை பெற்றுள்ளது.

இந்தியா வாழ்ந்தால்தான் நீங்கள் வாழ முடியும். இந்தியா ஒரே தேசமாக நிலைத்திருக்க இ. காங்கிரஸ் ஒன்றே சேவை செய்ய முடியும். உங்கள் வாழ்க்கை நீங்கள் அளிக்கும் ஒப்பற்ற வாக்கைப் பொறுத்து இருக்கிறது.

வாழ்வா? அழிவா?

ஒற்றுமையா? பிரிவினையா?

உங்கள் வாக்கு இவற்றைத் தீர்மானிக்கும்.

**நீங்கள்** இ. காங்கிரசுக்கு அளிக்கும் வாக்கு இவற்றைத் தீர்மானிக்கும்.

# என்பதை உங்கள் வாக்கு தீர்மானிக்கும்.

# கை கொடுங்கள்.

Rediffusion/AICC/1t/TM



**18**

மாத்திரை சாப்பிட மாட்டே னென்று மறுத்த தோழியை ரகசியமாய் ஏமாற்றியது பற்றிச் சுலோசனாவுக்கு ஒரு பக்கம் பெருமையாக இருந்தாலும் இன்னொரு பக்கம் வெட்கமாக இருந்தது. அவ்வளவு தீவிரமான கருத்துக் கொண்டிருந்த சுபாவை அப்படி வஞ்சித்தது தவறு என்று அவளுடைய மனச்சாட்சி வதைத்துக் கொண்டிருந்தது. ஆனால் அவளுடைய நன்மைக்காகத்தானே செய்தோம், தூக்கம் விழித்து, பாடங்களை நன்ருகப் படிப்பதற்கு உதவத் தானே பண்ணினோம் என்று சமாதானமும் பண்ணிக் கொண்டாள்.

இரண்டாவது இரவும் அதே போல் செய்ய நேரிடும் என்று மட்டும் அவள் துளியும் எண்ணவில்லை.

மேஜையடியில் சுபா படிக்க ஆரம்பித்தாள். சிறிது நேரத்துக்கெல்லாம் நித்திரை அவள் கண்களை இறுக்கியது. முந்தின இரவு வலுக் கட்டாயமாகக் கண் விழித்திருந்த கடுமையும் சேர்ந்து அவள் உடம்பு தள்ளாடியது.

''ஏய் சுலோ, என்னடி இன்னும் டீ போட்டுக்கொண்டு வரவில்லை? தூக்கம் கண்களைச் சுழற்றுகிறதே?'' என்று அவள் கேட்டபோது சுலோசனாவினால் அவளை நிமிர்ந்து பார்க்க முடியவில்லை.

சமையலறைக்குச் சென்ருள். சாதாரணமான டீ தயாரித்தாள். அதில் எதுவும் கலக்கவில்லை. தான் ஒரு கோப்பை அருந்தி, சினேகிதிக்கு ஒரு கோப்பை கொடுத்தாள்.

சுபா மெல்ல உறிஞ்சியவள், ''ஊஹூம்... நேத்துப் போட்ட டீ மாத்திரையே இல்லை,'' என்று சொல்லிவிட்டுப் பாடத்தில் கவனம் செலுத்தத் தொடங்கினுள்.

முடியவில்லை.

ஆடி ஆடி மேஜை மீது விழ ஆரம்பித்தவள், குழாயடிக்குச் சென்று குளிர்ந்த நீரில் முகத்தைக் கழுவிக்கொண்டு திரும்பினுள். ''சுலோ, நேற்று ரொம்ப ஸ்டிராங்காய் டீ போட்டிருந்தாய். ப்ளீஸ்டி, அதே மாதிரி போடு,'' என்று வற்புறுத்தினுள்.

சமையலறைக்குச் சென்று தேனீர் தயாரித்தாள் சுலோசனா. 'கடவுளே, என்னை மன்னித்து விடு,' என்று சுவாமி படத்தை நோக்கி கும்பிட்டுவிட்டு, மிச்சமிருந்த இரண்டு டெரிஜின் மாத்திரையையும் டீயில் கரைத்தாள். சுபாவிடம் கொண்டு போய்க் கொடுத்தாள்.

''ஹா! இதைச் சொல்லு! பிரமாதம்!'' என்று பாராட்டிக் கொண்டே டீயைக் குடித்தாள் சுபா.

'இந்தப் பாவம் இனி மேல் வேண்டாம். இன்ருேடு போகட்டும்' என்று நினைத்துக் கொண்டாள் சுலோசனா. மறுநாள் அவர்களுக்குப் பரீட்சை இருந்தது. அது முடிந்து விட்டால் எந்தப் பாவத்தையும் செய்ய வேண்டிய அவசியமிருக்காது...

கடியாரத்தில் மணி ஒன்றரை ஆகியிருந்தது. ஊரெல்லாம் நிசப்தமாகி விட்டது. சுப்பிரமணியம் மாடியில் தனது அறையில் ஆழ்ந்த நித்திரையில் மூழ்கியிருந்தார். கீழ் அறையில் தோழிகள் இருவரும் ஒரே கட்டிலில் ஒருவரையொருவர் அணைத்தபடி படுத்திருந்தார்கள். ஐந்து அல்லது பத்து நிமிஷ நேரம் அவர்களுடைய கிசுகிசு அரட்டைகள் காற்றில் மிதந்தன. பிறகு மெல்ல மெல்ல நித்திரை வசப்பட்டார்கள்.

எத்தனை நேரமிருக்குமென்று சுலோசனாவுக்குத் தெரியாது. ஏன் திடீரென்று விழிப்பு ஏற்பட்டது என்றும் தெரியாது.

ஆனல் புரண்டு படுத்தபோது தன் கை தோழியின் இடுப்பிலே படவில்லை என்ற உணர்வு மட்டும் திடீரென்று ஏற்பட்டது.

முதலில், நகர்ந்து படுத்திருக்கிருள் என்றெண்ணி, கண்ணை மூடிய படியே கண்களால் துழாவினுள். எதுவும்

கீ. ஈஸ்வரகுமார்

# எதிர்காலத்தில், உங்களுடைய மளிகைச் சாமான்கள் பட்டியலில் திராவக பல்புகளும், இரும்புத் தடிகளும், கத்திகளும் சேர்க்கப்பட வேண்டுமோ என்ன ?

தன்னுடைய குடும்பத்தையும் உடமைகளையும் பாதுகாப்பதற்கு ஒரு மனிதனுக்கு ஆயுதங்கள் தேவைப்படுவது ஏன்? எப்போது?

சட்டத்தின் கரங்கள் அக்கடமையிலிருந்து தவறும்போது. மத்திய அரசின் அதிகாரம் பலவீனம் அடையும்போது. மத்தியில் இருக்கும் நபர்கள் தம்மிடையே பலப்பரீட்சையில் ஈடுபட்டு ஒருவரோடு ஒருவர் மல்லுக்கு நிற்கும்போது. சட்டத்தின் காவலர்கள் தங்களையே பாதுகாத்துக் கொள்ளும்போது, புற்றிலிருக்கும் பாம்புகள் நெளிந்து வெளியே வருகின்றன; கொலைகாரர்கள் வீதிகளில் உலாவுகிறார்கள்; பார்வைக்கு நல்லவர்கள் போல தோற்றமளிக்கும் மனிதர்கள் தங்கள் முக மூடிகளைக் களைந்து விட்டு, இருட்டில் பதுங்கி நின்று, துப்பாக்கி வெடிக்கும் வேளைக்காகக் காத்திருக்கிறார்கள்.

அந்த வேளையில்தான்—திராவக பல்புகளும், இரும்புத் தடிகளும், கத்திகளும் தேவைப்படுகின்றன.

1977 நினைவிருக்கிறதா?

பல கட்சிகள் இணைந்தன. ஆனால் அந்தக் கூட்டு, பேராசை மற்றும் சந்தர்ப்பவாதம் என்ற பசையினால் ஒட்டப்பட்ட ஒரு கூட்டு. சட்டம் ஒழுங்கைப் பாதுகாக்கும் வலிமை அதற்கு இல்லை.

அதிகார அலையின் முதல் வீச்சிலேயே அக்கூட்டு நொறுங்கியது.

இ. காங்கிரஸ் எப்பொழுதும் ஒரு வலிமையான மத்திய அரசைத் தந்திருக்கிறது. ஏனென்றால்—பொதுவான இலட்சியம் மற்றும் கொள்கைகளால்

## சட்டம்–ஒழுங்கா ? குழப்பமா ?



## சட்டம்–ஒழுங்கிற்குக்

Issued by Chandulal Chandrakar, General Secretary, A.I.C.C., 24, Akbar Road, New Delhi 110 011



பிணைக்கப்பட்ட ஒரே தேசியக் கட்சி இ. காங்கிரஸ். நாட்டு நலனில் அக்கறையும். சேவையில் நாட்டமும் கொண்ட ஒரு நூற்றுண்டு பாரம்பரியத்தைக் கொண்டது இ. காங்கிரஸ். மத்திய அரசில் இ. காங்கிரஸ் இருந்தால் மட்டுமே சிறுபான்மைச் சமுதாயத்தினர் அச்சமில்லாமலும், பாதுகாப்பாகவும் வாழமுடியும். ஏனென்ருல், பிராந்திய நோக்கங்களும், வகுப்புவாத உணர்வுகளும் இல்லாத ஒரே கட்சி இ. காங்கிரஸ். நாட்டின் உள்ளிருந்து மட்டுமின்றி, வெளியிலிருந்தும் தோன்றிய அழிவுச் சக்திகளை இ. காங்கிரஸ் ஒடுக்கியுள்ளது—மிக உறுதியோடு.

உங்களுடைய மளிகைச் சாமான்கள் பட்டியல் ஓர் ஆயுதப் பட்டியலாக மாருமல் தடுகக வல்லது—உங்கள் வாக்கு.

ஒழுங்கையும் அமைதியையும் நிலை நாட்ட வல்லது—உங்கள் வாக்கு.

சட்டம்-ஒழுங்கு அல்லது குழப்பம்?

உங்கள் வாக்கு இதனைத் தீர்மானிக்கும். நீங்கள் இ. காங்கிரசுக்கு அளிக்கும் வாக்கு இதனைத் தீர்மானிக்கும்.

---

# என்பதை உங்கள் வாக்கு தீர்மானிக்கும்.

# கை கொடுங்கள்.

---

தட்டுப்படாததால் திகைத்து, கண்ணைத் திறந்து, நோக்கினாள்.

சுபாவைக் காணோம்.

தரையில் படுத்து விட்டாளோ ஒரு வேளை என்று குனிந்து நோக்கினாள்.

காணோம்.

திடுக்கிட்டு எழுந்து விளக்கைப் போட்டுப் பார்த்தபோது அறைக் கதவு திறந்திருப்பது தெரிந்தது. பாத்ரூம் போயிருக்கிறாளோ என்று பின்புறம் சென்று பார்த்தாள். கதவு தாள் போட்டுத் சாத்தியிருந்தது.

குழப்பத்துடன் திரும்பியவள், தெருப் பக்கத்துக் கதவு திறந்திருப்பதைக் கண்டாள்.

வாசலுக்கு ஓடிக் கவனித்த போது, ரத்தம் உறையும் காட்சியைக் கண்டாள்.

சுபா தன் பாட்டுக்கு இரண்டு கைகளையும் முன்னே நீட்டியபடி நடந்து வந்து கொண்டிருந்தாள்.

தெரு விளக்கின் அரை குறையான வெளிச்சத்தில், அவள் கட்டியிருந்த டார்க் கலர் புடவை அமானுஷ்யமாக இருந்தது.

தெருக் கோடி வரை அது போல நடந்து சென்று விட்டுத் திரும்பிக் கொண்டிருக்கிறாள் என்பது சுலோசனாவுக்குப் புரிந்தது.

கிட்ட நெருங்கியதும் அவள் கண்கள் மூடியிருந்ததைப் பார்த்தாள்.

'சுபா! என்னடி உனக்கு?' என்று கேட்க வாயெடுத்தாள். ஆனால் அச்சம் காரணமாக நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது.

அவளைத் தொடலாமா என்று ஓரடி முன் வைத்தாள். அதற்கும் இடம் தராமல் கால்கள் பின்னிக் கொண்டன.

தூக்கத்தில் நடப்பவர்களை மெல்லத் தட்டினால் உடனே நார்மலாகி விடுவார்கள் என்றும் அவள் கேள்விப்பட்டிருந்தாள். உடம்பில் வலிப்புத் தோன்றிக் கை கால்களை உதைத்துக் கொண்டு விழுந்து விடுவார்கள் என்றும் கேள்விப்பட்டிருந்தாள்.

தொடுவதா தொடாமலிருப்பதா என்று பிரமை பிடித்து அவள் நிற்கையில், சுபா, அவள் அங்கு நின்றிருப்பதையே உணராதவளாக அவளைத் தாண்டிக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்தாள்.

கட்டிலில் பழையபடி படுத்தாள்.

சில நிமிடங்களுக்கெல்லாம் அவள் சுவாசம் சீராக இயங்குவது தெரிந்தது. இயற்கையான தூக்கத்தில் அவள் ஆழ்ந்து விட்டாள் என்பது புரிந்தது.

தட்தட்டென்று அடிக்கும் மார்பைப் பிடித்துக்கொண்டு ஒரு நாற்காலியில உட்கார்ந்தாள் சுலோசனா. எப்படி வீரிட்டுக் கத்தாமல் இருந்தோம் என்று அவளுக்கு ஆச்சரியமாயிருந்தது. எப்படித் தலை சுற்றி விழாமல் இருந்தோம் என்று பிரமிப்பாயிருந்தது.

கள்ளங் கபடமில்லாத குழந்தையைப் போலத் தூங்கும் தோழியைக் காணக் காண அவள் இதயத்தில் ஆயிரம் ஊசிகள் குத்தின.

'இது நான் ஏற்படுத்திவிட்ட கோளாறு! ஆரோக்கியமான பெண்ணை அரைப் பைத்தியமாக நான் பண்ணி விட்டேன்!' என்று அவள் உள்ளம் இடைவிடாமல் அலறியது.

'தூக்கம் மனிதனின் இயற்கை. அதை எதிர்த்து எதுவும் செய்யக் கூடாது,' என்று சுபா சொன்ன வார்த்தைகள் திரும்பத் திரும்பக் காதில் ஒலித்தன.

சுபாவின் தேகம் ஒருகால் ஒத்துழைத்திருக்கக் கூடும். ஆனால் அவள் மனத்தில் வெகு ஆழமான ஓர் எதிர்ப்பு,



நோயாளி: டாக்டர்! நீங்க என் அப்பாவைக் காப்பாத்தாட்டி உங்க குடும்பத்துக்குத் தான் நஷ்டம்.

டாக்டர்: எப்படி?

நோயாளி: என் அப்பா உங்க அப்பாவுக்கு ஆயிரம் ரூபாய் தரணும்.

—ஜா. ரவி.




| **Normal Human** | **Baby Fae** | **Baboon** |
| --- | --- | --- |
| Three arteries branch from aorta | Defective left side and aorta | Two arteries branch from aorta |

அமெரிக்காவில், ஒரு பச்சைப் பாப்பாவுக்கு இருதயக் கோளாறு. புதுசு பொருத்த வேண்டிய கட்டாயம். குழந்தைக்கான இருதயம் சுலபத்தில் கிடைக்குமா? டாக்டர் பெய்லி ஒரு காரியம் செய்தார். ஒரு குரங்குக் குட்டியின் எலுமிச்சம்பழ அளவுள்ள இருதயத்தை எடுத்துக் குழந்தைக்குப் பொருத்தினர். சிலர், 'ஆரோக்கியமாக இருக்கும் குரங்கைக் கொல்வதாவது!' என்று ஆட்சேபித்தனர். டாக்டர் பெய்லி, 'பச்சைக் குழந்தைகள் சாகும் பரிதாபத்தை அவர்கள் பாத்திராததால் அப்படிப் பேசுகிறார்கள்!' என்றார். குழந்தை, மூன்று வாரம் பிழைத்திருந்தது. அப்புறம் இறந்து விட்டது. டாக்டர் பெய்லி சளைக்கவில்லை. இது மாதிரி இன்னும் நான்கு ஆபரேஷன்கள் செய்ய அனுமதி பெற்றிருக்கிறார். (படத்தில்: 1) ஆரோக்கியமான இருதயம். 2) நோயாளிக் குழந்தையுடையது. 3) குரங்குக் குட்டியுடையது.)

ஆதாரம்: டைம்.

---

ஒரு வெறுப்பு வேரூன்றியிருக்கிறது. அதை அடக்கப் பார்த்ததன் விளைவுதான் இந்த விபரீதம்.

கடவுளே, கடவுளே, கடவுளே என்று அவள் நெஞ்சம் அரற்றிக் கொண்டிருந்தது. இரவு முழுதும் கரகரவென்று பெருகிக் கொண்டிருந்த கண்ணீர் அவள் தோள் பட்டைகளில் வழிந்து புடவையைச் சொட்டச் சொட்ட நனைத்துக் கொண்டிருந்தது.

'ஏய் சுலோ! டியே!' என்று உலுக்கி உலுக்கி எழுப்பும் குரல் கேட்டுக் கண் விழித்தபோதுதான் நாற்காலியில் உட்கார்ந்தபடியே தூங்கியிருக்கிறோம் என்பது தெரிந்தது.

எதிரில் சுபா கலகலவென்று சிரித்துக் கொண்டிருந்தாள். ''ஏய், நான் நல்ல உசத்தி சோப்பு, உசத்தி சென்ட், உசத்திப் பவுடர் போடுகிறவள்டி. நம்ம கிட்டேயிருந்து சும்மா கமகமன்னு வாசனை வீசுமாக்கும்! அப்படியிருக்க, நீ என் பக்கத்தில் படுக்கப் பிடிக்காமல் எழுந்து போனியா? போனதுதான் போனியே, தரையிலே ஒரு ஜமக்காளத்தை விரிச்சுக்கிட்டுப் படுக்கக் கூடாது? இப்படியா நாற்காலியில் ராப் பூரா உட்கார்ந்திருப்பே?''

சுலோசனா எதுவுமே சொல்லாமல் சினேகிதியின் முகத்தையே பார்த்த வண்ணம் இருந்தாள்.

''என்னடி ஆச்சு உனக்கு? ராத்திரி ஏதாவது பேய் கீய் பிடித்ததா?'' என்று மேலும் சிரித்தாள் சுபா.

அவள் முகம் பளிச்சென்று இருந்தது. பேச்சுத் தெளிவாக இருந்தது. குரல் கணீரென்று இருந்தது. சிரிப்பு, கள்ளங்கபடில்லாமல் கலீரென்று இருந்தது.

இவளா நேற்றிரவு கனவிலே நடந்து போய், கனவிலே நடந்து திரும்பியவள்?

''வந்து... நீ காப்பி சாப்பிட்டாயா?''

''உன் அப்பா, பாவம், ஐந்து மணிக்கே எழுந்து வந்து கூப்பிட்டார். நீ தூங்குகிறாய் என்று போய்விட்டார். நான் போய்ப் பல் விளக்கி, முகம் கழுவி, உன் அப்பா போட்டுக் கொடுத்த காப்பியில் இன்னொரு டம்ளரும் கேட்டு வாங்கிச் சாப்பிட்டுவிட்டு வந்து பார்த்தால் நீ இன்னும் அப்படியே நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறே!''

சுலோசனாவுக்கு உடம்பை வலித்தது. சோம்பல் முறித்துக்கொண்டு

# மற்றவர்களைச் சார்ந்திருத்தல் ?
# தன்னிறைவு ?
# இவை இரண்டிற்கும் உள்ள வித்தியாசத்தை உணர்ந்தீர்களா ?

பி.எல் 480 நினைவிருக்கிறதா?

அந்தக் கோதுமையின் சுவை நினைவிருக்கிறதா?

இந்திய விதைகள், இந்திய மண்ணில் முளைத்து, இந்தியக் காற்றை நுகர்ந்து, இந்திய மழையில் நனைந்து, இந்தியச் சூரிய ஒளியில் கதிராகும்போது கிடைக்கும் சுவை, அந்தப் பி.எல். 480 கோதுமையில் இல்லையே.

இது தன்னிறைவின் சுவை. இது யாரையும் சார்ந்திராத சுதந்திரத்தின் சுவை.

இந்தியாவில் வேளாண்மைத் துறை உணவு உற்பத்திக்கு மட்டும் ஆதாரமாக இருக்கவில்லை. இந்தியாவின் மிக முக்கியமான பொருளாதாரச் செயல்பாடே விவசாயம்தான்.

நம்முடைய மக்களில் 75% விவசாயத்தை நேரடியாக நம்பியிருக்கிறார்கள். நம்முடைய முக்கிய தொழில்களான பஞ்சாலைகள், சர்க்கரை, தேயிலை ஆகியவற்றிற்கு இன்றியமையாத மூலப் பொருள்களை விவசாயமே அளிக்கிறது.

ஆகவேதான், தொடக்கத்திலேயே நாம் தன்னிறைவின் விதைகளை விதைத்தோம்.

1981-82ல் 29 இலட்சம் குவிண்டால் உயர்தர விதைகளை விநியோகித்தோம். 1983-84ல் 57 இலட்சம் குவிண்டால்கள் வழங்கியுள்ளோம்.

1961-62-ல் 2,94,000 டன்களாக இருந்த அரசு மானியம் பெற்ற உரங்கள் விநியோகம் 1983-84-ல் 70 இலட்சம் டன்களாக கூடியுள்ளது. 1950-51-ல் 230 இலட்சம் ஹெக்டேர் நிலப்பரப்பு நீர்ப்பாசன வசதி பெற்றது—1983-84-ல் 640 இலட்சம் ஹெக்டேர் நிலப்பரப்புக்கு நீர்ப்பாசன வசதி பெருகியிருக்கிறது.

நாட்டுடமையாக்கப்பட்ட வங்கிகளின் 24,000 கிளைகள் மூலமாக 1983-84-ல் 4,500 கோடி ரூபாய்கள் விவசாயக் கடன்களாக வழங்கியுள்ளோம்.

விவசாயப் பொருள்களுக்குக் குறைந்தபட்ச விலை தரப்படுகிறது. ஆகவே, கட்டுப்படியாகாத விலைக்கு விவசாயிகள் தம் உற்பத்தியை விற்க வேண்டியதில்லை.

இந்த நடவடிக்கைகளின் பயனாக—

## வளமையா? வறுமையா?

## வளமைக்குக்

ued by Chandulal Chandrakar, General Secretary, A.I.C.C., 24, Akbar Road, New Delhi 110011



1983-84ல் பிரமாண்டமான அளவில், 15 கோடி டன் உணவு தானியங்களை அறுவடை செய்திருககிறோம். 1950-51-ல் அறுவடையின் அளவு வெறும் 5 கோடி டன் தான்.

நம்முடைய சராசரி வளர்ச்சி விகிதம் 2.6%. இது நம்முடைய மக்கள் தொகைப் பெருக்கத்தைவிட அதிகம். வளர்ச்சி விகிதம் அதிகமாக இருப்பதே நமக்கு நல்லது.

நம்முடைய மககள் தொகைப் பெருககத்தைவிட நம்முடைய விவசாய வளர்சசி கூடுதலாக இருப்பதற்கு இடையறுது பாடுபட வேண்டும்.

பஞ்சமெனும் பேய் நம் கதவுகளை மீண்டும் தட்டாமல் இருப்பதற்கு நாடு தழுவிய, ஒருங்கிணைந்த, நீண்ட காலத் திட்டத்தை மேற்கொள்ள வேண்டும்.

வலிமையான, ஒற்றுமையான மத்திய அரசினால் மட்டுமே இதனைச் சாதிகக முடியும்.

இ. காங்கிரஸ் ஒன்றுதான் வலிமையான, ஒற்றுமையான மத்திய அரசைத் தரவல்லது.

பசியையும் வறுமையையும் விரட்டுவதற்கு வழிவகுக்கும் இ. காங்கிரஸ்.

உங்களுடைய தட்டுகளில் நிரம்ப உணவு படைக்கவல்லது இ. காங்கிரஸ் ஒன்றுதான்.

வளமையா? வறுமையா?

உங்கள் வாக்கு இதனைத் தீர்மானிக்கும்.

இ. காங்கிரசுக்கு நீங்கள் அளிக்கும் வாக்கு இதனைத் தீர்மானிக்கும்.

# என்பதை உங்கள் வாக்கு தீர்மானிக்கும்

# கை கொடுங்கள்.

Rediffusion/AICC/6t/

முந்தாள். சுபா விடை பெற்றுக் காண்டு தன் வீட்டுக்குப் புறப்பட்டுக் பாய் வெகு நேரமாகியும் அவளால் தன் னத்தை ஒரு நிலைக்குக் கொண்டு வர யலவில்லை.

"என்னம்மா சுலோ, ஏன் என் வோ போலிருக்கிறே?" என்று சுப்பிர ணியம் கூடக் கேட்டார்.

நடந்ததையெல்லாம் அவரிடம் சால்லி விடலாமா என்று ஒரு விநாடி னைத்தாள். ஆனால் அதற்குத் தைரியம் ரவில்லை. தான் பண்ணிவிட்ட மகத்தான வத்தைச் சொந்த தகப்பனாரிடம் ஒப்புக் காள்ளக்கூட வெட்கமாயிருந்தது.

அம்மா ஊரில் இருந்திருந்தால் ந் வேளை தன் மனச் சுமையை இறக்கி நப்பாளோ என்னவோ. ஆனால் அம்மா க்கு அப்படியொன்றும் உலக ஞானம் டையாது. ஏதாவது நெருக்கடி ஏற்படும் பாது, அம்பிகே, ஈசுவரி, நீதாண்டியம்மா ர்த்துக்கொள்ளணும் என்று சொல்லி ம்மன் படத்தின் முன்னே படபட பன்று கன்னத்தில் போட்டுக்கொள் ாள். அதற்கு மேல் எதுவும் தெரியாது.

சட்டென்று ஒரு யோசனை ான்றியது. ஏன் அம்பிகையை, வரியை, நாமும் சரண் புகக் கூடாது? மா இருந்திருந்தால் அதைத் தானே சால்லித் தந்திருப்பாள்?

அன்று பரீட்சையை எப்படியோ ழுதி முடித்தாள்.

"வாயேன், உட்கார்ந்து நம்ம ஆன்ஸர்களைக் கம்பேர் செய்வோம்," என்று சுபா கூப்பிட்டுக் கொண்டு வந்த போது, "இல்லை, எனக்கு ஓர் அவசர வேலை இருக்கிறது," என்று நழுவி விட் டாள். பிறகு திடீரென்று நினைத்துக் கொண்டு நின்றவள், "ஏன் சுபா, இன்னிக்கு நீ உடம்பு ஒன்றுமில்லாமல் இருந்தாயோ?" என்று விசாரித்தாள்.

"உடம்பா? எனக்கென்ன உடம்பு? கல் குண்டாட்டம் இருக்கிறேன் என்ன உனக்குத் திடீர் சந்தேகம்?"

"வந்து... ஒண்ணுமில்லை. நேத்து ராத்திரி ரொம்ப நேரம் கண் விழித்துப் படித்தாயேன்னு கேட்டேன்," என்று அவசரமாகக் கூறிவிட்டு, விரைந்து புறப் பட்டாள்.

கோவிலுக்கு வந்து விட்டாளே யொழிய, என்ன தோத்திரம் சொல்வது, என்ன ஜபம் ஜபிப்பது என்று எதுவுமே தெரியவில்லை. அவள் இன்னும் நாகரிக மான கல்லூரி மாணவியாகவே இருந் தாள். சுவாமி படத்தையோ, சுவாமி புறப் பாட்டையோ பார்த்தால் கன்னத்தில் போட்டுக்கொள்ள வேண்டும், திருநீறோ குங்குமமோ கொடுத்தால் நெற்றியில் இட்டுக்கொள்ள வேண்டும், அதைக் காலில் படுகிற மாதிரி கீழே போடாமல் தூண் இடுக்கில் போட வேண்டும் என்பது போன்ற விஷயங்களுக்கு மேல் அவளுக்குப் பக்தி சமாசாரங்கள் தெரியாது.

இப்போது கோவிலுக்குள் நுழைந்த போது சிறிது நேரம் என்ன செய் வது என்று தெரியாமல் நின்றாள். ஆனால்



"ஹலோ! மார்க்கோனி இருக்கிறாரா?"

"இல்லையே! அவர் பிலிப்ஸ் வீட்டுக்குப் போயிருக்கார்."

"சரி, சரி. வந்தால் 'சோனி' பேசின தாகச் சொல்லுங்க."

—கோவை ரம்யா



★★★★★

"ஒரு Doctor, ஒரு Driver, ஒரு Director— இந்த மூவரும் சேர்ந்து சென்றால் எந்த சினிமாவுக்குப் போவார்கள்?"

"3D' படம்தான்! சந்தேகமேயில்லை."

—கே.எஸ். பழனி



அவள் உள்ளம் வெடித்துக் கொண்டிருந்தது. பெரிய தப்புப் பண்ணி விட்டேனே, என் தோழிக்கு ஒரு பயங்கர நோய் ஏற்படுத்திக் கொடுத்துவிட்டேனே என்று உள்ளுக்குள் அழுதழுது அவள் இதயம் ரத்த விளாருகியிருந்தது.

கடைசியில் மனதைத் திடப்படுத்திக் கொண்டாள். 'எந்தத் தோத்திரமும் தெரியாவிட்டால் என்ன? ஒரு சினேகிதரிடம் பேசுகிற மாதிரி கடவுளிடம் பேசி என் குறையைச் சொல்லிவிட்டுப் போகிறேன். அவ்வளவுதானே?' என்று தீர்மானித்துக் கொண்டாள்.

அது பெரிய கோவில். விஸ்தாரமான பிராகாரங்கள்.

அவள், தலையைத் தாழ்த்திக் கொண்டு பிரதட்சணமாகப் பிராகாரத்தில் நடக்கலானாள்.

'அம்பிகே, தாயே, ஈசுவரி. ஏதோ நல்லது செய்யறதாய் நினைச்சிட்டு, விபரீதமான காரியத்தைப் பண்ணிட்டேன். சுபா என் உயிருக்குயிரான தோழி. அவள் நன்றாயிருக்கணும். ஆரோக்கியமாயிருக்கணும். நான் தெரியாமல் தப்புப் பண்ணி விட்டேன். எனக்கு வேண்டுமானால் அதற்குத் தண்டனை கொடு. அவளை ஒன்றும் செய்யாதே. அவளைக் காப்பாற்று, காப்பாற்று, காப்பாற்று...'

வெறி பிடித்தவளைப் போல் அவள் தனக்குத் தானே இதையே சொல்லிக்கொண்டு, சாமி வந்தவள் போலத் தன்னை மறந்த ஓர் ஆவேசத்துடன் பிராகாரத்தில் சுற்றிச் சுற்றி வந்தாள். பிரதட்சணத்துக்கு மேல் பிரதட்சணமாக அவள் நடை தொடர்ந்து கொண்டிருந்தது. அவள் கால்கள் களைத்துத் துவண்டன. எந்த நிமிடமும் விழுந்து விடுவது போல் தன் தேகம் தள்ளாடிக் கொண்டிருப்பது அவளுக்குத் தெரியவில்லை.

திடீரென்று ஓர் அம்மாள் அவளைத் தாங்கிப் பிடித்தாள். ''இந்தாம்மா, உனக்குப் பைத்தியம் கியித்தியம் பிடித்து விட்டதா என்ன?'' என்று அதட்டினாள்.

கண்களைக் கசக்கிக் கொண்டாள் சுலோசனா. ''வந்து... ஏன் மாமி... நான் என்ன பண்ணிட்டேன்?''

''என்ன பண்ணினாயா? நானும் அதோ அந்தக் கொடிக்கம்பத்துக்குப் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு அப்போது



அட்டையில்: கல்பனா
வண்ணப்படம்: சுகுமார்

பிடித்துப் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறேன். பிரதட்சணம் செய்யறதுன் அதுக்குக் கணக்கு வழக்கே கிடையாது. இத்தோடு நாற்பதோ ஐம்பதோ செ திருப்பாய். ஏன்? ஏதாவது விரதமா?''

அந்த அம்மாளின் முகத்தைப் தாபமாக ஏறிட்டுப் பார்த்தாள் சுலோசனா. ஒரு சமயம், ஊருக்குப் போயிருக்கு அம்மாவைப் பார்க்கிற மாதிரி இருந்த இன்னொரு சமயம் கர்ப்பக் கிருகத்துக்கு இருக்கும் அம்பாளே வந்து பேசுவ போலிருந்தது.

''மாமி...'' அவளுக்கு நாக் தழுதழுத்தது. ''நான் ஒரு தப்புப் பண் விட்டேன். என் சினேகிதிக்கு ஒரு கெடு செய்து விட்டேன். அவளுக்கு எது நேரம் கூடாதுன்னு வேண்டிக்க என ஒரு வழியும் தெரியலே...''

அந்த அம்மாள் அன்புடன் அ இடுப்பை அணைத்துக் கொண்டாள். '' இங்கே அம்பாளிடம் வேண்டிக் கொ டது போதும். என்னுடன் என் வீட்டு வா. பக்கத்திலேதான்.''

''வந்து?''

''வடக்கேயிருந்து ஒரு ம வந்திருக்கிறார். அவரிடம் உன் குறை வானாலும் சொல்லு. ஒரு பரிகாரம் வார்...''

அந்த அம்மாளுடன் சுலோ சென்றாள்.

முதல் முறையாக இந்த மஹானைத்தை அவள் சந்தித்தது அப்போ தான்.

[தொட

# இங்கிலாந்தையும் அமெரிக்காவையும்விட கூடுதல் வளர்ச்சி விகிதம் கொண்ட நாடு எது என்று உங்களால் கூற முடியுமா ?

இந்தியா. கடந்த ஐந்து ஆண்டுகளின் இந்தியாவில் சராசரி தொழில் வளர்ச்சி விகிதம் ஆண்டொன்றுக்கு 4.9%. இதற்கு எதிராக இங்கிலாந்தில் -0.3%. அமெரிக்காவில் 1.2% உங்களுடைய ஊகம் சரியாக இருந்ததா? அநேகமாக இருந்திருக்காது.

அவநம்பிக்கை கொண்டவர்களுக்கும் குறை கூறுபவர்களுக்கும் இதுவே சரியான பதில் அல்லவா?

இந்தியா தேறாத நாடு என்று தலைமுழுகிய, நம்பிக்கை இழந்தவர்களுக்கும், நஞ்சில் தோய்த்து எழுதும் சிறு மதியாளர்களுக்கும் இதுவே சரியான பதில் அல்லவா?

துரும்பைத் தூணாக்கி, இந்தியாவின் பளிச்சிடும் சாதனைகளைக் காண மறுக்கும் குருடர்களுக்கு இதுவே நல்ல பதில் அல்லவா?

சாதகமானவற்றை ஒதுக்கிவிட்டு, பாதகமானவற்றையே கூட்டிப் பார்க்கும் புள்ளிவிவரக் காரர்களுக்கு இதுவே நல்ல பதில் அல்லவா?

ஆம். இதுவே அவர்கள் வாய்களை அடைக்கும் சரியான பதில்.

இனி யாரும் இந்தியாவை ஒதுக்கித் தள்ள முடியாது. பஞ்சாலைகளும் சர்க்கரை ஆலைகளும் மட்டுமே கொண்டிருந்த அடிமை நாட்டுப் பொருளாதார நிலையிலிருந்த வர்கள், சுதந்திரத்திற்குப் பிறகு வெற்றிப் பாதையில் நெடுந்தூரம் வந்திருக்கிறோம்.

அமெரிக்கா, ரஷ்யா ஆகிய நாடுகளுக்கு அடுத்து விஞ்ஞான தொழில்நுட்ப அறிஞர்களின் எண்ணிக்கையில் இந்தியா மூன்றாவது இடத்தில் உள்ளது.

நிலக்கரி உற்பத்தி 1979-80ல் 10 கோடி 40 லட்சம் டன் என்ற அளவிலிருந்து, 1983-84ல் 13 கோடி 80 லட்சம் டன் என்று உயர்ந்திருக்கிறது. அதே கால கட்டத்தில், கச்சா எண்ணெய் உற்பத்தி 120 லட்சம் டன் என்ற அளவிலிருந்து, 260 லட்சம் டன் என்ற அளவிற்கு உயர்ந்துள்ளது.

தொழில் துறையின் மொத்த வேலை வாய்ப்பில் 27% பொறியியல் தொழிற் சாலைகளில் மட்டுமே உள்ளது. இந்தத் தொழிற்சாலைகள் ரூ. 900 கோடி மதிப்புள்ள

## வளர்ச்சியா ? தேக்க நிலையா ?

## வளர்ச்சிக்குக்

by Chandulal Chandrakar, General Secretary, A.I.C.C., 24, Akbar Road, New Delhi 110011

# என்னைத் தவிர

கிருஷ்ணகுமார்

**19**

இந்தோர் மஹந்த் தான் சொல்லிக்கொண்டிருந்த விவரங்களைச் சற்றே நிறுத்தினார்.

தலை குனிந்து அவரெதிரில் உட்கார்ந்திருந்த சுப்பிரமணியத்துக்கு ஒவ்வொன்றும் கண் முன்னே நடப்பது போல் இருந்தது. சுலோசனா தன்னிடம் சொன்ன விவரங்களைத்தான் இவர் விவரிக்கிறாரென்றாலும், சுலோசனாவே தன் பரிதாபமான விழிகளால் அவரை ஏறிட்டு நோக்கி, அவளுக்கே உரிய இனிமையான குரலில் மெல்லப் பேசுவதுபோல் இருந்தது. 'என் கண்மணி, தான் அறியாமல் செய்துவிட்ட ஒரு தவறுக்காக எவ்வளவு துடித்துப் போயிருக்கிறாள்! அதற்குப் பரிகாரம் செய்ய வேண்டுமென்பதற்காக எப்படியெல்லாம் பாடுபட்டிருக்கிறாள்! ஆனால் வீட்டோடு இருந்த என்னிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லையே! தன் துன்பத்தை என்னிடம் சொல்லி எனக்கும் வேதனை ஏற்படுத்திவிடக் கூடாதென்பதற்காக, சுமைகளைத் தன் நெஞ்சுக்குள் அமுக்கி வைத்திருந்திருக்கிறாளே!' என்று எண்ண எண்ண அவருக்கு இதயம் வெடித்து விடும் போலாயிற்று.

இந்தோர் மஹந்த் தன் சிறிய [illegible] உருவி விட்டுக்கொண்டு அவரைக் கூரிய விழிகளால் தீட்சண்ணியமாய்ப் பார்த்தார். "சொல்வதெல்லாம் கேட்டுக்கொண்டிருக்கிறாயல்லவா?" என்றார்.

"ஆமாம் சுவாமிஜி. மேலே சொல்லுங்கள்," என்றார் சுப்பிரமணியம்.

நர்மதையின் சலசலப்பும், சுற்றுச் சூழலிலுள்ள மரங்களின் முணுமுணுப்பும் கலந்து ஒரு கதம்ப ஓசை எழுந்து கொண்டிருந்தது. இருட்டுத் தன் இரு கைகளையும் நீட்டி அவர்களை நோக்கி வரலாயிற்று.

மஹந்த் தொடர்ந்தார்.

நான் தங்கியிருந்த வீட்டின் அம்மாள் சுலோசனாவை அழைத்துக்கொண்டு உள்ளே வந்தாள். அந்தப் பெண்ணின் கண்ணில் குடிகொண்டிருந்த சோகம் எனக்குப் பரிதாபமாக இருந்தது.

என்னிடம் வருகிறவர்கள் தங்கள் பிஸினஸ் கஷ்டத்தைச் சொல்வார்கள். வியாதிக் கஷ்டத்தைச் சொல்வார்கள். காதல் கஷ்டத்தைச் சொல்வார்கள். ஆனால் இந்தப் பெண் அதெல்லாம் சொல்லப் போவதில்லை என்று அவளைப் பார்த்த மாத்திரத்திலேயே தெரிந்துகொண்டு விட்டேன்.

"உட்காரம்மா," என்றேன்.

அறையில் எங்களைத் தவிர, என் உதவிக்காக ஒரு சிறுவன் இருந்தான். தலையசைத்து அவனை வெளியே அனுப்பி விட்டேன்.

"என் பெயர் சுலோசனா..." என்று அவள் ஆரம்பித்தபோது எங்கோ கிணற்றுக்குள்ளிருந்து பேசுவது போல அவள் குரல் வெகு பலவீனமாகக் கேட்டது. ஆனால் என் முகத்திலிருந்த புன்சிரிப்பு அவளுக்குத் தைரியம்

நோயாளி: உங்கள் நர்ஸ் என்னைத் தொட்டவுடன், அந்த விநாடியே என்னுடைய ஜுரம் இறங்கிவிட்டது.



டாக்டர்: ஆமாம், ஆமாம். எனக்குக் கூடப் பளார் என்று அந்தச் சத்தம் கேட்டதே!

—லாவண்யா

கொடுத்தது. சிறிது சிறிதாக அவள் குரல் தெளிவடைந்தது. ஆனால் சோகம் மட்டும் விலகவில்லை.

எல்லாவற்றையும் விவரித்து முடித்தபின், கண்களை அடிக்கடி துடைத்துக் கொண்டு, ''என் சினேகிதிக்கு இந்தத் தூக்கத்தில் நடக்கும் நோய் ஏற்பட்டதற்குக் காரணம் நான்தான் என்று எனக்குத் தோன்றுகிறது. நான் படுகிற வேதனையைத் தங்களிடம் சொல்ல வார்த்தையில்லை. எப்படியாவது தாங்கள் தான் எனக்கு ஒரு வழி காட்ட வேண்டும்,'' என்றாள்.

''நான் டாக்டரல்ல குழந்தாய்,'' என்றேன். ''உன் சினேகிதியின் பெற்றோர்களிடம் சொல்லி, அவளுக்குத் தகுந்த வைத்தியம் செய்யச் சொல்லு,'' என்று சொன்னேன்.

''எனக்கு மிகவும் வெட்கமாயும் அவமானமாயும் இருக்கிறது. அத்துடன், அவளுக்கே இது தெரியாமல் இருந்தால் நல்லது. தெரிந்துவிட்டால் அவள் முகத்தில் எப்படி விழிப்பேன்?'' என்றாள் உங்கள் மகள்.

''அறியாத்தனமாய்ச் செய்து விட்ட தவறே தவிர; அவமானப்படும் படியான குற்றம் எதுவும் நீ செய்யவில்லை,'' என்று சொல்லிப் பார்த்தேன். சுலோசனா கேட்கவில்லை.

கடைசியில் நான் சொன்னேன்: ''இதோ பார், குழந்தாய். நான் ஒரு கணபதி உபாசகன். விநாயகரால்தான் உலகத்தில் எல்லாக் காரியங்களும் விக்னமின்றி நடைபெறுகின்றன என்று நம்புகிறவன். எந்தக் கெட்ட சக்தியையும் நீக்க வல்லவர் விக்னேசுவரர்தான் என்பது என் நம்பிக்கை. ஆகவே விநாயகர் உன் சினேகிதியின் நோயைக் குணப்படுத்து வார். பயப்படாதே.''

''அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று உங்கள் பெண் கேட்டாள் ஆர்வத்துடன்.

''விநாயகக் கவசம் சொல்லித் தருகிறேன். எழுதிக் கொள்,'' என்றேன்.

''எழுதிக்கொண்டு? சுபாவுக்குச் சொல்லித் தர வேண்டுமா? அவள் அதைத் தினம் தினம் சொல்ல வேண்டுமா?'' என்று சுலோசனா கேட்டாள்.

''அவசரப்படாதே. வெறுமே உதட்டாலும் நாக்காலும் சொல்வதால் பயன் ஏற்படாது. அது அவளுடைய ஆழ்மனத்தின் அடித்தளத்தில் பதிய வேண்டும். அவளுடைய ஒரு பகுதியாகவே அது ஆக வேண்டும்.''

''அதற்கு வழி?''

''தூக்கத்தின்போது அவளுக்குள் அந்தச் சக்தியை ஏற்று.''

''அது எப்படி, சுவாமிஜி?'' என்றாள் சுலோசனா.

''உன் சினேகிதியின் வீட்டுக்குப் போய் ஒரு நாள் ராத்திரி தங்கு. அவளுடன் தனியாகப் படுத்திரு. அவள் தூங்கும்போது குனிந்து அவள் காதுக்குள் இந்த மந்திரத்தைச் சொல்லு. அவளை யறியாமலே அவளுடைய புத்திக்குள்ளும் மனசுக்குள்ளும் அந்த மந்திரத்தின் சக்தி ஏறும். படிப்படியாக அவள் குணமடையக் கூடும்...'' என்று நான் சொன்னதும், ''இதோ இப்போதே போகிறேன். மந்திரத்தைச் சொல்லுங்கள்,'' என்று சுலோசனா பரபரத்தாள்.

''பொறு. இரண்டு விஷயம் ஞாபகத்தில் வைத்துக்கொள். ஒன்று, உனக்கு இதில் தீவிரமான நம்பிக்கை இருக்கவேண்டும்...'' என்றேன்.

''நிச்சயமாய் இருக்கிறது, நிச்சயமாய் இருக்கிறது,'' என்றாள். ''இன்னொன்று என்ன?''

''நாளை மறுநாள் பௌர்ணமி வருகிறது. அன்று இந்த மந்திரத்தை அவள் செவியில் ஏற்றினால் பலன் கிடைக்கும். ஒவ்வொரு பௌர்ணமியாக அவளுக்கு

நோய் குறைந்து கொண்டே வரும். அப்படியே அவள் பௌர்ணமியன்று தூக்கத்தில் எழுந்து நடந்தால்கூட, அவளுக்கு அசாதாரணமான தெய்வ சக்தி வரும். அந்தச் சமயத்தில் அவள் உடம்பில் அமானுஷ்யமான பலம் வரும். தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்வாள். அவளுக்கு எந்தக் கெடுதலும் ஏற்படாது,'' என்றேன்.

''அப்படியே செய்கிறேன் சுவாமிஜி. மந்திரத்தைச் சொல்லுங்கள்,'' என்றாள்.

'த்யாயேத் ஸிம்ஹகதம் விநாயகம், அமும் திக்பாஹி மாத்யே யுகே' என்ற ஸ்ரீ கணேச கவசத்தை நான் சொல்லச் சொல்ல அவள் ஒரு காகிதத்தில் எழுதிக் கொண்டாள். எனக்கு நமஸ்காரம் செய்துவிட்டுப் புறப்பட்டாள்.

''நான் இன்னும் நாலு நாள் இங்கே தங்கியிருப்பேன். என்ன செய்தாயென்பதை வந்து சொல்லு,'' என்றேன்.

பௌர்ணமிக்கு மறுநாள் சாயந்தரம் சுலோசனா மறுபடி என்னிடம் வந்தாள். முன்பிருந்த சோகமும் குழப்பமும் கலவரமும் நீங்கி அவள் முகம் சந்தோஷத்தால் மலர்ந்திருந்தது. கண்களில் நிம்மதி பரவியிருந்தது.

''என்ன ஆயிற்று?'' என்றேன்.

''தாங்கள் சொன்னபடியே செய்தேன் சுவாமிஜி. வேறு யாரையோ பார்க்க அவள் வீட்டருகே வந்ததாயும், நேரமாகிவிட்டதால் சுபாவின் வீட்டில் இரவு தங்கிக் காலையில் போகப் போவதாயும் சொன்னேன். அவளுக்கும் அவள் அப்பா அம்மாவுக்கும் ஏகப்பட்ட சந்தோஷம். சாப்பிட்டு விட்டு மாடியிலிருந்த அறையில் போய்ப் படுத்துக் கொண்டோம். வெகு நேரம் ஊர்க் கதையெல்லாம் பேசிக்கொண்டிருந்தோம். அவள் தூங்க ஆரம்பித்தாள். நான் வெகுநேரம் காத்திருந்து, அவள் அயர்ந்து தூங்கின சமயம், அவள் காதோடு வாய் வைத்துச் சுலோகங்களைச் சொன்னேன். திரும்பத் திரும்பப் படித்துப் படித்து எனக்கு நெட்டுருவாகியிருந்ததால் கஷ்டமில்லாமல் சொல்லிவிட்டேன்,' என்றவள், ''சுவாமிஜி, இனி அவளுக்குத் துன்பம் இருக்காதல்லவா?'' என்றாள்.

''இருக்காது,'' என்று உறுதி சொன்னேன். ''இன்னும் சில பௌர்ணமிகளுக்கு அவள் எழுந்து நடக்கத்தான் நடப்பாள். ஆனால் வேறெங்கும் போக மாட்டாள். பக்கத்தில் எந்த விநாயகர் கோவிலோ, சிலையோ, படமோ இருந்தால் அங்கே வணங்கிவிட்டுத் திரும்பிவிடுவாள். நான் சொன்னதுபோல் அவளுக்கு அந்தச் சமயத்தில் ஓர் அசுர பலம் ஏற்படும். ஆபத்து விளையாது,'' என்றேன்.

சுலோசனா என்னை நன்றியுடன் திரும்பத் திரும்ப நமஸ்காரம் செய்துவிட்டுச் சென்றுவிட்டாள்.

இந்தோர் மஹந்த் சொல்லி முடித்துவிட்டுச் சுப்பிரமணியத்தைப் பார்த்தார். ''நீ கேட்க விரும்பியதைச் சொல்லிவிட்டேன். திருப்திதானே?''

சுப்பிரமணியத்தின் கண்கள் கலங்கின. ''சுவாமிஜி, என் மகளிடம் எப்போதுமே எனக்குப் பிரியம்தான்.

## துறவிக்குக் கறிகாய் எதற்கு?



ஒரு துறவியைப் பார்க்க நானும் என் நண்பனும் சென்றிருந்தோம். பலர் பழங்களும், கற்கண்டும் வாங்கிவந்து துறவியிடம் கொடுத்து ஆசி பெற்று சென்றனர். என் நண்பர் மட்டும் ஒரு தட்டில் பழத்துடன், பீன்ஸ், வெண்டைக்காய், சேப்பங் கிழங்கு போன்ற காய்கறிகளையும் வைத்து வணங்கினார்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. வெளியே வந்ததும், ''பழங்களுடன் கூடக் காய்கறி வகைகளைக் கொடுத்தீர்களே, காரணம் என்ன?'' என்று வினவினேன்.

அவர் கூறினார்: ''பழங்களை உடனடியாகச் செலவிட்டு விடவேண்டும் ஆகவே அவைகளைத் துறவி தனக்கென்று வைத்துக் கொள்ளாமல் வருகிறவர்களுக்குக் கொடுத்து விடுகிறார். காய்கறி அப்படியல்ல. நிச்சயம் அவர் சாப்பாட்டிற்கு உபயோகித்துத்தான் ஆகவேண்டும். ஆகவே எந்த துறவியைப் பார்க்கச் சென்றாலும் பழத்துடன் காய்கறிகள் வாங்கிப் போவது நல்லது.''

—இராசுவாமிநாதன்

# தேநீரும் விருந்தோமபலும் ஸாகர் ஸ்கிம் மில்க்கும்



உங்கள் இல்லத்திற்கு வருகை தரும் நண்பருக்கு முதலில் வழங்குவது எது? நல்வரவு என்று சொல்லும் புன்னகையும் நல்லதொரு கோப்பை தேநீரும் தானே! அது வழி வழியாய் வரும் உங்களுடைய கலாசாரத்தின் பிரதிபலிப்பு.

இம்மாதிரி சமயங்களில் பால்பாட்டில் காலியான பரிதவிக்கும் நிலையில் நீங்கள் இருந்தால்? உடன் புதிய பால் கிட்டாத நிலையானாலோ?

ஸாகர் ஸ்கிம் மில்க் பவுடர் உங்கள் பாரம்பரிய விருந்தோம்பலை நீங்கள் பேண உதவுகிறது, சிக்கனமாக, விரைவாக, எளிதாக. இனிப்புகளுக்கும் புட்டிங்கு களுக்கும் இது ஈடு இணையற்றது.

ASP/SMP/5/84




# ஸாகர்

## ஸ்கிம் மில்க் பவுடர்

கொழுப்பு இல்லாத பாலின் உன்னதமான குணங்கள் உண்டே இதில்.

விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன லிமிடெட், தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத்.

இப்படித் தன் சினேகிதிக்காக அவள் தவித்துப் போனாள் என்று அறிந்த பிறகு அந்தப் பிரியம் இன்னும் வளர்கிறது. விஷ ஜுரத்தில் இறப்பதற்கு முன் ஒரு நல்ல காரியத்தைச் செய்துவிட்டுத்தான் போயிருக்கிறாள். அவளுடைய ஆன்மா சாந்தியடைந்திருக்கும். சந்தேகமில்லை.''

''அந்தப் பெண் சுபா—அவள் எப்படி இருக்கிறாள்?''

''எனக்குத் தெரியாது, சுவாமிஜி. மதறாஸ் போனதும் விசாரிக்கிறேன்,'' என்றார் அவர்.

கண்ணை மூடிக்கொண்டு பேசாமல் இருந்தார் இந்தோர் மஹந்த். பிறகு திறந்து சுப்பிரமணியத்தைப் பார்த்துச் சொன்னார்: ''உடனே நீ மதறாசுக்குத் திரும்பு,'' என்றார்.

''உடனேயா? நான்...''

''உடனே என்றால் உடனே. அந்தப் பெண் சுபா ஓர் ஆபத்தில் சிக்கியிருக்கிறாள். எப்படி எனக்குத் தெரிகிறது என்று கேட்காதே. ஆனால் தெரிகிறது.''

தன் மகள் எந்தச் சினேகிதியைக் காப்பாற்ற வேண்டும் என்று அத்தனை பாடுபட்டாளோ, அதே சுபாவுக்கு மறுபடி ஆபத்தா? சுப்பிரமணியத்தின் புலன்கள் ஒரு கணம் வேலை செய்ய மறந்தன. சுலோசனா உயிரோடிருந்தால் எப்படிக் காப்பாற்றியிருப்பாளோ அதேபோல் இப்போது தானும் காப்பாற்ற முன்வர வேண்டும் என்ற ஓர் எண்ணம் மட்டும் அவர் உள்ளத்தில் மேலோங்கி நின்றது.

''சுவாமிஜி, சுபாவுக்கு என்ன ஆபத்து?'' என்று கேட்டார்.

''சொல்கிறேன்,'' என்றார் இந்தோர் மஹந்த்.

ஆனால் அதற்குள்—

''சுப்பிரமணியம்! சுப்பிரமணியம்!'' என்று இரண்டு மூன்று குரல்கள் பல திசைகளிலிருந்தும் வந்தன.

''சுப்பிரமணியம்! வேர் ஆர் யூ?'' என்று ஒருவர் கத்தினார்.

சுப்பிரமணியத்துக்குப் புரிந்துவிட்டது. ஓங்காரேஷ்வர் கோவில் வாசலில், நர்மதை நதிக் கரையில் காத்திருந்து காத்திருந்து அலுத்துப் போன சினேகிதர்கள் அவரைத் தேடிக்கொண்டே வந்துவிட்டார்கள்.

''இதோ இங்கே இருக்கிறேன்,'' என்று குரல் கொடுத்தார்.

மூன்று பேர் வந்தார்கள். அவர்களில் ஷாலினியும் ஒருத்தி. இந்தோர் மஹந்த்தையும் அவரெதிரில் அடக்க வொடுக்கமாய்க் கைகட்டி உட்கார்ந்திருக்கும் சுப்பிரமணியத்தையும் கண்டவுடன் அவள் முகம் பளீரென்று மலர்ந்தது.

''சுவாமிஜி! சுவாமிஜி! தங்களை எங்கெல்லாம் தேடிக்கொண்டிருந்தேன்!'' என்று விழுந்து விழுந்து வணங்கியெழுந்தவள், சுப்பிரமணியத்திடம் சற்று மனத்தாங்கலுடன், ''நாம் இரண்டு பேரும் சேர்ந்துதானே சுவாமிஜியைத் தேடிக் கொண்டிருக்கிறோம்? சுவாமிஜி இங்கே இருக்கிறார் என்று நீங்கள் வந்து சொல்லியிருக்க வேண்டாமா?'' என்றாள்.

''அந்தச் சிறுமியுடன் வந்தபோது தற்செயலாகச் சந்தித்தேன்,'' என்று சுப்பிரமணியம் சமாதானம் சொல்லிக்கொண்டிருக்கையில், ஷாலினியுடன் வந்த இருவருக்கும் பொறுமை இருக்கவில்லை. யாரோ ஒரு விபூதிச் சாமியாருக்காக இந்த இருவரும் ஏன் இப்படிப் பரபரக்கிறார்கள் என்பதைப் புரிந்துகொள்ள இயலாதவர்களாக, ''சுப்பிரமணியம், அங்கே படகுத் துறையில் எல்லாரும் காத்திருக்கிறார்கள். ஆற்றைக் கடந்து மஹேஷ்வர் போய் நாம் இந்தோருக்குப் புறப்பட வேண்டும். நீங்கள் பாட்டுக்கு இங்கே உட்கார்ந்திருக்கிறீர்களே?'' என்றார் ஒருவர்.

## வாளிக்குள் சம்மந்தி!

கேரள மாநிலத்தில் ஓர் ஓட்டலுக்கு டிபன் சாப்பிடச் சென்றபோது இலையில் தோசை இரண்டினைக் கொண்டு வந்து வைத்துவிட்டு, ''சம்மந்தி வேண்டுமா?'' என்றார்கள். சம்மந்தியைக் கூடவா இங்கு வியாபாரம் செய்கிறார்கள் என்று திகைத்த வேளையில் சர்வர் ஒரு சட்னி வாளியுடன் என் எதிரே வந்து நின்றார். பின்னர்தான் தெரிந்தது, சட்னிக்குத்தான் அங்கு சம்மந்தி என்ற பெயர் என்று.



—புதுக் குமரன்

''எனக்கு இவரைத் தரிசனம் செய்ததே போதும். இதோ கிளம்பி விடுகிறேன்,'' என்ற ஷாலினி இந்தோர் மஹந்த்தின் முன்னே பயபக்தியுடன் கையை நீட்டினாள். அவர் தந்த குங்குமத்தை நெற்றியிலும் உச்சந் தலையிலும் இட்டுக்கொண்டாள்.

''சுவாமிஜியைத் தரிசனம் செய்தாலே என் கஷ்டங்களெல்லாம் தீர்ந்துவிடும். எனக்கு நிச்சயமாய்த் தெரியும். நான் மேற்கொண்டு எதுவும் என் பிரசினைகளைச் சொல்லிக் கொண்டிருக்கப் போவதில்லை,'' என்று எழுந்துகொண்டாள்.

''எனக்கு இன்னும் கொஞ்சம் பேச வேண்டியிருக்கிறதே,'' என்றார் சுப்பிரமணியம் சங்கடத்துடன். சுபாவைப் பற்றிய மிச்சத் தகவல்களையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆதங்கம் அவர் உள்ளத்தில் நிறைந்திருந்தது. சுபாவுக்காக மகள் எடுத்துக்கொண்ட பணியைப் பூர்த்தி செய்வதுதான் அவளுடைய ஆன்மாவுக்குச் சாந்தி தரும் என்று அவர் உறுதியாக நம்பினார்.

ஷாலினி, ''இன்னும் ஐந்து நிமிடம் காத்திருக்கிறோம். சுவாமிஜியிடம் பேசிவிட்டு வாருங்கள்,'' என்று சொல்லி விட்டு, மற்ற இருவருடனும் சற்றுத் தள்ளிச் சென்று நின்றுகொண்டாள்.

சுப்பிரமணியம் இந்தோர் மஹந்த்தை நோக்கித் திரும்பினார். கடந்த பல நிமிடங்களாக அவர் ஏதுமே பேசாமலிருக்கிறார் என்பது இப்போது தான் அவருக்கு ஞாபகம் வந்தது. ஷாலினிக்குக் கூட மௌனமாகத்தான் குங்குமம் கொடுத்தாரே தவிர வாய் திறந்து எதுவும் சொல்லவில்லையே? ஏன்?

''சுவாமிஜி...'' என்று பேச ஆரம்பித்தவரைப் புன்னகையுடன் கையமர்த்தினார் இந்தோர் மஹந்த். சுப்பிர மணியத்தின் கையிலிருந்த கடியாரத்தைச் சுட்டிக் காட்டி, 'இப்போது மணி என்ன?' என்று சாடை செய்து கேட்டார்.

எதற்கு மணி கேட்கிறார்? சுப்பிரமணியம் திகைப்புடன் கடியாரத்தைப் பார்த்து, ''மணி ஆறடித்து ஐந்து நிமிடமாகிறது,'' என்றார்.

இந்தோர் மஹந்த் பக்கத்தில் கிடந்த ஒரு சின்னக் குச்சியை எடுத்துத் தரையில் ஆங்கிலத்தில் எழுதிக் காட்டினார்.

''ஆறு மணியாகிவிட்டால் நான் மௌன விரதம். பேசமாட்டேன். இனி நாளைக் காலைதான்.''

''சுவாமிஜி...'' என்று அவர் பதைத்த குரலில் கேட்டு, எட்டிச் சென்றிருந்த மூவரும் திரும்பி வந்தார்கள். இந்தோர் மஹந்த் தரையில் எழுதியிருந்த வாசகம் அவர்களின் கண்ணில் பட்டது.

''சரி, சுப்பிரமணியம். இனி இங்கே இருந்து என்ன புண்ணியம்? புறப்படுங்கள்,'' என்று ஷாலினி அழைத்தாள்.

''இல்லை நான் வரவில்லை,'' என்றார் அவர் தீர்மானமாக.

''என்னது! வராமல்?''

''எனக்கு இவரிடம் தெரிந்து கொள்ள வேண்டிய முக்கியமான விஷயம் இன்னும் இருக்கிறது. அது தெரிந்து கொள்ளாமல் வருவதற்கில்லை.''

''நாங்கள் உங்களுக்காகக் காலை வரையில் காத்திருக்க முடியாது. எல்லாப் புரொக்ராமும் கெட்டுவிடும்.''

''பரவாயில்லை. நான் சுற்றுலாவுக்கு இனிமேல் வரவில்லை. இத்துடன் நின்றுகொள்கிறேன்.''

''என்ன இப்படிப் பேசுகிறீர்கள்? உஜ்ஜயினி பார்க்க வேண்டாமா? காளிதாசனும் அசோகனும் விக்கிர மாதித்தனும் சஞ்சரித்த பூமி. அருமையான அழகோடு ஷிப்ரா ஓடுவதைப் பார்க்க வேண்டாமா? அங்கே புராதனமான மஹாகாலரின் கோவிலைக் காண வேண்டாமா?''

''வேண்டாம்.''

''தொழில் நகரமான தேவாஸுக்குப் போகப் போகிறோம். பிறகு சாஞ்சி போகப் போகிறோம். அசோகர் காலத்துச் சிற்பங்களும் கல்வெட்டுக்களும் கொண்ட ஸ்தூபிகளைப் பார்க்காமல் எந்த டூரிஸ்ட்டாவது ஊர் திரும்புவானா? ஸ்ரீலங்கா விஹாரத்தில் எத்தனை கலைப் பொருள்கள் இருக்கிறது தெரியுமா?''

''மன்னியுங்கள்,'' என்று பிடிவாதமாகச் சொல்லிவிட்டார் சுப்பிரமணியம்.

சுபாவுக்கு என்ன ஆனது என்பதைத் தெரிந்துகொள்ளாமல் ஓரடி கூட அவர் நகரத் தயாராயில்லை.

(தொடரும்)

இருந்த தமிழகம் இப்போது 13வது இடத்திற்குத் தள்ளப்பட்டு விட்டது.

இதை உடனடியாக மாற்றி, புதிதாகத் தொழில் தொடங்குவோர் ஒரே அலுவலகத்தை அணுகினால் போதும் (Single window Scheme); அவர்களுக்குப் பதினைந்தே நாட்களில் தொழிற்சாலைக்கான நிலம்—மின்சாரம் முதலிய அனைத்தும் கிடைத்திட வழி செய்வோம்.

மாநகராட்சிகள் — நகராட்சிகள் — பஞ்சாயத்துகள் — கூட்டுறவு அமைப்புகள் — ஆகியவற்றிற்கு ஆறே மாதங்களில் தேர்தல் நடத்துவோம்.

காலையில் எழுந்ததும் பிள்ளைகள் சிலேட்டையும் புத்தகத்தையும் தேடுவதற்குப் பதிலாகப் பிளேட்டையும் குவளையையும் தேடுகிற நிலையைமாற்றி — படிப்பில் துடிப்புடன் கவனம் செலுத்திடும் வண்ணம், சத்துணவுத் திட்டம் செம்மைப் படுத்தப்படும் என்று உறுதி கூறுகிறோம்.

அரசு ஊழியர்களுக்கு நான்காவது சம்பளக் கமிஷன் அறிக்கை தருவதற்குள் உடனடியாக உகந்த இடைக்கால நிவாரணம் அளிப்போம்.

அரசு ஊழியர்களுக்கு ஆண்டுதோறும் போனஸ் வழங்குவோம்.

விவசாயிகளின் பம்ப் செட்டுகளுக்கு இலவச மின்சாரம் வழங்கப்படும்.

55 வயதடைந்த விவசாயத் தொழிலாளர்களுக்கும், கைவினைஞர்களுக்கும் ஓய்வூதியம் வழங்கப்படும்.

கிராமங்களிலிருந்து நகரங்களுக்குக் கல்வி பயிலச் செல்லும் மாணவர்களுக்கு இலவச பஸ் பாஸ் வழங்கப்படும்.

குத்தகை சாகுபடியாளர்கள் மீது சுமந்துள்ள குத்தகை பாக்கிகள் ரத்து செய்யப்படும்.

இதுவரை சுமந்துள்ள பயிர்க்கடன் அனைத்தும் ரத்து செய்யப்படும்.

ஒவ்வொரு தாலுகாவிலும் கிராம வளர்ச்சி வங்கிகள் கிராமப்புற மக்களுக்குக் குறைந்த வட்டியில் கடன் வழங்க ஏற்பாடு செய்யப்படும்.

மதுபானக்கடைகளைத் திறந்து இதன் காரணமாகக் கோடிக்கணக்கான ரூபாய்களை லஞ்சமாகப் பெற்று வருவதை நாட்டு மக்கள் நன்கறிவர்.

நாங்கள் இந்த நாற்றமெடுத்துக் கிடக்கும் சாராய சாம்ராஜ்யத்திற்கு முடிவு கட்டியே தீருவோம் என்று உறுதி கூறுகிறோம்.

கழக ஆட்சியிலே கடுகளவு தவறுகள் சுட்டிக் காட்டப்பட்டாலும், அவற்றைத் திருத்திக் கொள்ள நாங்கள் தவறியதே இல்லை.

இன்றோ கடல் அளவு தவறுகள்! அதில் கவிழ்ந்த படகாகத் தமிழகம் தத்தளிக்கிறது! தடுமாறுகிறது! அதனைக் கரை சேர்க்கும் வல்லமை கழகத்திற்கு உண்டென நம்புவீர்!

பொழுதுக்கொரு பொய்—வேளைக்கொரு புளுகு. இப்படித்தான் இங்குள்ள ஆட்சியாளர்கள் மக்களை ஏமாற்றுகிறார்கள்!

இனியும் ஏமாறத் தயாராக இருக்கிறதா தமிழ் இனம்? இதுதான் எங்கள் கேள்வி!

இந்த இயக்கத்தின் இலட்சியப் பயணத்தின் வெற்றி இலங்கைத் தமிழர் உள்ளிட்ட உலகமெங்கும் வாழுகிற தமிழர்களின் உள்ளத்துக்கு ஓர் மகிழ்ச்சி!

மற்றவர்களைப் போல உங்களிடம் நாங்கள் வெறும் அனுதாபத்தைக் கேட்கவில்லை.

யாரிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்தால் நாடு வாழும்—நலிவு தீரும் என்கிற நல்ல தீர்ப்பை வழங்குமாறு கேட்கிறோம்! உங்களுக்கு ஊழியம் புரியத்தான் உங்களிடம் உத்தரவு கேட்கிறோம்!



# ஆதரிப்பீர் உதயசூரியன்

T.

வெளியீடு: தி. மு. கழகம், சென்னை.

# என்னைத் தவிர

20

டூரிஸ்ட் பஸ்ஸில் தான் அவர்களுடன் வரப் போவதில்லை என்று சுப்பிரமணியம் கூறியதும், ஷாலினியைத் தவிர மற்ற இருவருக்கும் கோபமே வந்து விட்டது. ''சரி, உங்கள் இஷ்டம். குட்பை!'' என்றார்கள்.

ஷாலினி மட்டும் அவரைப் புரிந்து கொண்டாள். ''நீங்கள் மெதுவே பின்னாலே வாருங்கள். நான் முன்னாலே போய் உங்கள் பையையும் பெட்டியையும் படகிலிருந்து எடுத்து வந்து தருகிறேன்,'' என்றவள் மீண்டும் ஒரு முறை இந்தோர் மஹந்த்தின் முன்னே நமஸ்காரம் செய்து விட்டுப் புறப்பட்டாள்.

சுப்பிரமணியம் சிறிது தூரம் மெல்ல நடந்து, ஷாலினி கொண்டுவந்த பையையும் பெட்டியையும் வாங்கிக் கொண்டார்.

ஷாலினியின் குரல் தழுதழுத்தது. ''சுப்பிரமணியம், இரண்டு மூன்று நாள் தான் உங்களுடன் பழகினேன். ஆனாலும் என் சகோதரரைப் போல உங்களை நினைக்க ஆரம்பித்து விட்டேன். நான் பெண்ணாய்ப் பிறந்து விட்டவள். உங்களைப் போலக் கண்ட இடத்தில், கண்ட நேரத்தில் தங்க முடியாது. இல்லாவிட்டால் உங்களை விட்டுப் போக மாட்டேன். என்னைத் தப்பாய் நினைக்காதீர்கள்,'' என்றாள்.

''இல்லையம்மா. நானும் உன்னை என் தங்கை மாதிரிதான் நினைக்கிறேன். இருட்டுகிறது. நீ போய் வா. உன்னை மறக்கவே மாட்டேன். உன்னால்தான் இந்தோர் மஹந்த்தைப் பார்க்க முடிந்தது. என் மனசில் அரித்துக்கொண்டிருந்த பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள முடிந்தது,'' என்று நெஞ்சார்ந்த வருத்தத்துடன் கூறி அவளுக்கு விடை கொடுத்தார் அவர்.

திரும்பி வந்தபோது இந்தோர் மஹந்த் ஒரு கல்லைத் தலைக்கு உயரமாக வைத்துக்கொண்டு, மல்லாந்து படுத்தபடி, மார்பின்மீது கைகளை மடித்துக்கொண்டு சயனத்தில் இருந்தார். நினைத்த மாத்திரத்தில் தூங்கி நினைத்த மாத்திரத்தில் எழுந்துகொள்ளக் கூடிய சக்தி பெற்ற மகான் என்பது மறுபடியும் சுப்பிரமணியத்துக்கு ஊர்ஜிதமாயிற்று.

அது வெறும் கட்டாந்தரை. செடிகளும் கற்களும் கிடந்த இடத்தைத் தட்டிச் சமன்படுத்தி, ஒரு துண்டைப் பிரித்துப் போட்டுக்கொண்டு படுத்தார் அவர். இங்கொன்று அங்கொன்றாக முளைக்கத் தொடங்கிய நட்சத்திரங்கள் விறுவிறுவென்று எண்ணிக்கையில் பெருகின. நடுநிசி ஏற ஏறக் காற்றில் குளிர்ச்சி ஏறியது. பெட்டியைத் தலைக்கு வைத்துக்கொண்டு, பையிலிருந்த ஒரு சால்வையைப் போர்த்திக்கொண்டார். வனாந்தரமான சூழ்நிலையில் என்னென்னவோ பிராணிகள் வகை வகையான சப்தங்களை எழுப்பின.

அவர் சரியாகவே தூங்கவில்லை.

பொழுது விடிகிற நேரத்துக்குத் தான் அவர் சிறிது தூங்கினார். விழித்தபோது தன் அருகிலேயே இந்தோர் மஹந்த் புன்சிரிப்புடன் உட்கார்ந்திருப்பதைக் கண்டார். நேற்று அந்தி

கிருஷ்ணகுமார்

வெளியில் பார்த்தபோது இருந்ததை விட அதிகமான தேஜஸ் அவரிடமிருந்து வீசுவது போல் தோன்றியது.

''சுவாமிஜி மன்னிக்கணும். அதிக நேரம் தூங்கிவிட்டேன்,'' என்று எழுந்து உட்கார்ந்தார்.

''பரவாயில்லை.''

பளீரென்று வெளிச்சம் வரத் தொடங்கிய நேரம், ஒரு தொழிலாளி டீ கொண்டு வந்தான். ''உனக்குத்தான் அது. சாப்பிடு,'' என்றார்.

முந்தின இரவின் களைப்புக்கும் மன உளைச்சலுக்கும் அந்தத் தேநீர் தேவாமிர்தமாக இனித்தது.

அந்த ஆள் டம்ளருடன் திரும்பிச் சென்றதும் இந்தோர் மஹந்த் சுப்பிரமணியத்தைக் கனிவுடன் பார்த்தார். ''அந்தப் பெண் சுபா ஆபத்தில் சிக்கியிருப்பதாக நேற்று நான் சொன்னது உண்மை. என்ன ஆபத்து என்று இப்போது சொல்கிறேன்,'' என்றார்.

''காத்திருக்கிறேன், சுவாமிஜி.''

''அதோ அந்த வழியே போ. காட்டுச் செடிகளில் பூக்கள் நிறையப் பூத்திருக்கும். ஏதாவது ஒரு சிவப்புப் பூ பறித்து வா.''

சுப்பிரமணியம் இந்தோர் மஹந்த் சுட்டிக் காட்டிய பாதையில் சென்றார். வண்ண வண்ணப் பூக்கள் கொள்ளையாய்ப் பூத்திருந்தன. ஆனால் சிவப்பு நிறப் பூ லேசில் கிடைக்கவில்லை. கடைசியில் ஒரு செம்பருத்திச் செடி கண்ணில் பட்டது. அதில் மலர்ந்திருந்த ஒரு பெரிய பூவை எடுத்துக்கொண்டார். இந்தோர் மஹந்த்திடம் பணிவோடு நீட்டினார்.

விரலால் தரையில் சின்னப் பள்ளம் தோண்டி அந்தப் பூவைச் செருகி நிறுத்தினார். செம்பருத்திப் பூவின் இதழ்கள் அகல விரிந்து அண்ணாந்து வானை நோக்கியவாறிருந்தன.

பத்மாசனம் போட்டு அமர்ந்த இந்தோர் மஹந்த் அந்தப் பூவையே உன்னிப்பாக வெகு நேரம் பார்த்துக் கொண்டிருந்தார். அந்தப் பூவினுள்ளே ஏதோ ஒரு காட்சியை அவர் கண்டு கொண்டிருப்பதுபோல அவருடைய முகத்தில் சலனங்கள் தென்பட்டன.

சுமார் பதினைந்து நிமிடத்துக்குப் பின் சுப்பிரமணியத்தை நோக்கி நிமிர்ந்தார் இந்தோர் மஹந்த். அவருடைய உதடுகள் இறுகியிருந்தன.

''இரண்டு சகோதரர்களின் போட்டியினால் சுபாவுக்கு ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. தம்பியின் பெயர் 'ப' என்ற எழுத்தில் ஆரம்பமாகிறது. அண்ணனின் பெயர் 'ச' என்ற எழுத்தில் ஆரம்பமாகிறது. இப்போது அவள் அண்ணனிடம்தான் சிறைப்பட்டிருக்கிறாள். நீ உடனே மதராஸ் போ. அந்தப் பெண்ணின் பெற்றோரிடம் செய்தியைத் தெரிவி,'' என்றார்.

சுப்பிரமணியத்துக்கும் அதற்கு மேல் அங்கே இருக்க மனம் வரவில்லை. சுபாவைக் காப்பாற்றுவது தன் பெண் சுலோசனாவையே காப்பாற்றுவதுபோல அவருக்குத் தோன்றியது. இந்தோர் மஹந்த்தும் இதற்கு மேல் எதுவும் சொல்லப் போவதில்லை என்று தெரிந்து விட்டதால், நான்கு முறை விழுந்து வணங்கிவிட்டுக் கிளம்பினார்.

ஓங்காரேஷ்வர் படகுத் துறைக்கு வந்து, நர்மதையை ஓடத்தில் கடந்து, மஹேஷ்வரை அடைந்து, அங்கிருந்து போபாலுக்கு ஒரு பஸ்ஸைப் பிடித்து, ஜி.டி. எக்ஸ்பிரஸுக்கு டிக்கெட் வாங்கினார். இரண்டாம் வகுப்புக்கு ரிசர்வேஷன் கிடைக்கவில்லை. ஆனால் முதல் வகுப்புக்குக் கிடைத்தது. பணச் செலவைப் பார்க்காமல் வண்டியேறினார்.




—கிருஷ்ண சங்கர்



# பொங்கல் பூவிரிந்து, மங்கல மணம் வீசட்டும்!

## ஹேண்ட்லூம் ஹவுஸ் வழங்கும் புத்தாண்டு-பொங்கல் சிறப்புத் தள்ளுபடி!

அனைத்து ரகங்களுக்கும் விழாக்காலத் தள்ளுபடி **20%**

பிரிண்டட் சில்க், ஆர்கென்ஸா புடவைகள் மற்றும் சில ரகங்களுக்கு மேலும் **20%** சிறப்புத் தள்ளுபடி.

17.12.84 முதல் 16.1.85 வரை ஞாயிறு உட்பட எல்லா நாட்களிலும் விற்பனை உண்டு.

24.12.84 அன்று மட்டும் விடுமுறை.

வாருங்கள்:

**ஹேண்ட்லூம் ஹவுஸ்**

(மத்திய அரசு ஆதரவு பெற்றது)

7 ரத்தன் பஜார், சென்னை-3.

கோயம்புத்தூர்:

512, திவான் பகதூர் ரோடு,

இசையா ஆஸ்பத்திரி எதிரில்,

R.S. புரம், கோயம்புத்தூர்-2.

ADWAVE/HH/2795

# தேநீரும் விருந்தோம்பலும் ஸாகர் ஸ்கிம் மில்க்கும்



உங்கள் இல்லத்திற்கு வருகை தரும் நண்பருக்கு முதலில் வழங்குவது எது? நல்வரவு என்று சொல்லும் புன்னகையும் நல்லதொரு கோப்பை தேநீரும் தானே! அது வழி வழியாய் வரும் உங்களுடைய கலாசாரத்தின் பிரதிபலிப்பு.

இம்மாதிரி சமயங்களில் பால்பாட்டில் காலியான பரிதவிக்கும் நிலையில் நீங்கள் இருந்தால்? உடன் புதிய பால் கிட்டாத நிலையானாலோ?

ஸாகர் ஸ்கிம் மில்க் பவுடர் உங்கள் பாரம்பரிய விருந்தோம்பலை நீங்கள் பேண உதவுகிறது, சிக்கனமாக, விரைவாக, எளிதாக. இனிப்புகளுக்கும் புட்டிங்குகளுக்கும் இது ஈடு இணையற்றது.




## ஸாகர்

### ஸ்கிம் மில்க் பவுடர்

கொழுப்பு இல்லாத பாலின் உன்னதமான குணங்கள் உண்டே இதில்.

விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத்.

பெட்டியில் அவருக்கு ஓர் அனுபவம் காத்திருந்தது.

எதிர் பெர்த்தில் அறுபத்தைந்து எழுபது வயது மதிக்கத்தக்க ஒரு பெரியவர் காலோடு தலை போர்த்திக் கொண்டு படுத்திருந்தார். முகத்தைப் பார்த்தாலே நோயாளி என்று தோன்றியது. ஆனால் அந்த மீசையும் அடர்த்தியான புருவமும் ஆசாமி முரட்டுத்தனமும் பெரியமனுஷத் தனமும் கலந்தவர் என்று காட்டின. ஏறி யிறங்கும் மார்பையும் அவஸ்தைப்படும் வாயையும் கண்டு, அவருக்கு மூச்சு இரைக்கிறது என்று ஊகித்துக் கொண்டார் சுப்பிரமணியம்..

அவரது கால் மாட்டில் கவலையே உருவாக அவர் மனைவி உட்கார்ந்து கொண்டு, கணவனின் முகத்தையே பார்த்தவாறிருந்தாள். ஐந்து வயது முதல் பூசி வந்திருக்கும் மஞ்சள் இந்த ஐம்பது வயதிலும் டாலடித்தது. தழையத் தழையத் தாலியும் பவுன் சங்கிலிகளும் அணிந்திருந்தாள்.

சுப்பிரமணியம் உட்கார்ந்ததுமே, ''நீங்க மதறாஸ் போறீங்களா?'' என்று பதைப்புடன் விசாரித்தாள் அந்த அம்மாள்.

''ஆமாம்,'' என்றார் சுப்பிரமணியம். படுத்திருந்தவரைக் காட்டி, ''அவருக்கு.... உடம்பு சரியில்லையா?'' என்றார்.

''ஆமாங்க. என் வீட்டுக்காரர் தான். ஆஸ்துமா தொந்தரவால் ரொம்பக் கஷ்டப்படுகிறார். நம்ம ஊர்க்காரங்க யாராச்சும் வந்தால் மெட்றாஸ் போகிற வரையில் எனக்குத் துணையாயிருக்குமேன்னு நினைச்சேன். கடவுளாய்ப் பார்த்து உங்களை அனுப்பியிருக்கிறார்....'' என்று கண்ணைத் துடைத்துக் கொண்டாள் அந்த அம்மாள். அந்தப் பெரியவர் சற்றே நிமிர்ந்து சுப்பிரமணியத்தைப் பார்த்து ஏதோ சொல்ல முயன்றார். பேச முடியவில்லை.

வண்டி கிளம்பியது.

''எங்கே போய்விட்டு வருகிறீர்கள்?'' என்று சுப்பிரமணியம் விசாரித்தார்.

''அதையேன் கேட்கிறீங்க? ரிஷிகேசம், பத்ரிநாத், டெல்லி எல்லாம் போகணும்னு கிளம்பினோம். ரிஷிகேசமும் பத்ரிநாத்தும் மட்டும்தான் போக முடிந்தது. டெல்லியிலேயே இவருக்கு உடம்புக்கு வந்திட்டுது. ஊருக்குத் திரும்பறோம்.''




இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் 6 வித்தியாசங்கள் உள்ளன. விடை: அடுத்த பக்கம்

ஆஸ்துமா" என்று சொன்னீங்கள்?''

''ஆமாங்க. மருந்து ஊசி எல்லாம் கொண்டு வந்திருந்தும் புண்ணியமில்லே. ஆஸ்துமா என்னங்க சொல்லிக்கிட்டா வருது? திடுதிப்புனு படுத்துக்கிறதே இவரோட வழக்கமாய்ப் போயிட்டுதுங்க.''

சுப்பிரமணியம் தன் மனைவியை நினைத்துக் கொண்டார். அவளும் ஓர் ஆஸ்துமா நோயாளி. எங்கே போனாலும் அவளுக்காக இரண்டு பிரத்தியேக மாத்திரை வாங்கிப் பர்ஸிலேயே.....''

சட்டென்று அவருக்குத் தன் பர்ஸைக் குடையத் தோன்றியது. வெகு காலமாக அதனுள் அடைபட்டுக் கிடந்த ரசீதுகள், காகிதங்கள், விசிட்டிங் கார்டுகள் முதலியனவற்றைக் கொட்டிக் கவிழ்த்தபோது—

நாலு மாத்திரைகள் இருந்தன.

''இதைச் சாப்பிட்டுப் பார்க்கச் சொல்லுங்க. மெட்ராசில் ஒரு ஸ்பெஷலிஸ்ட் டாக்டர் என் சம்சாரத்துக்காகக் கொடுத்தது,'' என்று கூறி அவற்றை அந்த அம்மாளிடம் நீட்டினார்.

அவள் கணவர், தனக்கிருந்த அவஸ்தையில், எதைக் கொடுத்தாலும் விழுங்கக்கூடிய மனநிலையில் இருந்தார். சிரமத்துடன் எழுந்து உட்கார்ந்து, மாத்திரைகளை வாயில் போட்டுக் கொண்டு தண்ணீர் குடித்துவிட்டுத் திரும்பப் படுத்தார்.

சிறிது சிறிதாக மூச்சுத் திணறல் குறைந்து, தூங்கவும் ஆரம்பித்தார்.

''நீங்க நல்லாயிருக்கணுங்க. கடவுள் மாதிரி வந்தீங்க,'' என்று அந்த அம்மாள் வாழ்த்தினாள்.

சென்னையை நெருங்கியபோது அந்தப் பெரியவர் ஆஸ்துமா நோயாளி மாதிரியே இல்லே. சிறிது தெம்புடன் எழுந்து உட்கார்ந்து கொண்டார்.

''அந்த மாத்திரைக்கு என்ன சார் பெயர்? ரொம்ப எஃபெக்டிவா இருந்த,

சுப்பிரமணியம் கீழே குனிந்து தேடி மாத்திரையின் காகித உறைகளைக் கண்டெடுத்துக் கொடுத்து, ''எல்லாக் கடைகளிலும் இது கிடைப்பதில்லே. ஒன்றுக்கு நாலாய் விசாரிச்சு வாங்கிக்குங்க,'' என்றார்.

சென்டிரல் ஸ்டேஷனில் வண்டி நின்றது.

''கொஞ்சம் டாக்ஸி பிடிச்சு எங்களை ஏத்திட்டுப் போங்க,'' என்று கேட்டுக் கொண்டாள் அந்த அம்மாள்.

சுபாவின் வீட்டுக்குப் போக வேண்டிய அவசரமும் பதைப்பும் ஆட்டி வைத்த போதிலும், சுப்பிரமணியம் அவர்களுக்கு உதவி செய்யத் தயங்கவில்லே. இதே போல் ஒரு நிலைமையில், போபால் ஸ்டேஷனில் சாவித்திரி என்ற பெண்ணுக்கு உதவப் போய்த்தானே இந்தோர் மஹந்த்தைக் காணவும் சுலோசனாவையும் சுபாவையும் பற்றிப் பல விஷயங்களை அறியவும் முடிந்தது என்று எண்ணிக் கொண்டார். கடவுள் வேண்டுமென்றேதான் அவருக்காக இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களைச் சிருஷ்டிக்கிறார் போலிருக்கிறது.

போர்ட்டர் வைத்து, அவர்களுடைய சாமான்களை டாக்ஸியில் சேர்ப்பித்தார். அவர்களையும் ஏற்றிவிட்டார்.

''நீங்க நல்லாயிருக்கணுங்க. தெய்வம் மாதிரி வந்தீங்க,'' என்று ஒரே வாக்கியத்தைத் திரும்பத் திரும்பச் சொன்னாள் அந்த அம்மாள்.

''எங்கேங்க போகணும்?'' என்று டாக்ஸியோட்டி கேட்டார்.

''எழும்பூர் மியூசியத்துக்குப் பக்கம்,'' என்று அந்த அம்மாள் சொல்ல, அவள் கணவர் சுள்ளென்று சிடுசிடுத்தார். ''என்னது! உன் மருமகப் பிள்ளை சரவணமுத்து வீட்டுக்கா? அந்த அயோக்கியன் வீட்டுக்கு நான் வரத் தயாராயில்லே. ராயபுரத்திலே நம்ம வீடு அரண்மனை மாதிரி பூட்டிக் கிடக்கிறப்ப இவன் வீட்டுக்கு ஏன் போகணும்? நீ விடப்பா டிரைவர், ராயபுரம் ஜோசப்தாஸ் தெரு,'' என்றார்.

சுப்பிரமணியம் அவர் பேசுவதைக் கேட்டுக் கொண்டு நின்றிருந்தார். ஆனால் சரவணமுத்து என்ற பெயரில் ஒரு விசேஷம் உண்டு என்பதை அறியவில்லே.

(தொடரும்)

ஆறு வித்தியாசங்கள் விடை:

1. ஏணிப்படி
2. ஓட்டுப்பெட்டி துவாரம்
3. கடியாரம்
4. மேஜை மீதுள்ள முத்திரை
5. பட்டியல்
6. கதவு

# என்னைத் தவிர

## 21

இங்கே வந்து எத்தனை நாளாயிற்று?

சுபாவுக்குத் தெரியவில்லை. அந்த அறையும் அதையடுத்தாற் போலிருந்த குளியலறையும் பெரும்பாலும் இருட்டில் மூழ்கியிருந்தன. அவைகளுக்கு ஜன்னல் இருந்தபோதிலும் வெளிப்பக்கம் தாளிடப் பட்டிருந்ததால் திறக்க முடியவில்லை. பச்சைப் பூக்கள் போட்ட கெட்டியான கண்ணாடி போடப்பட்டிருந்தது. அவைகளின் வழியாக வெளியே என்ன நடக்கிறதென்று அவளால் காண முடியவில்லை.

தினம் இரண்டு முறை ஒரு வேலைக்காரக் கிழவி அவளுக்கு சாப்பாடு கொண்டு வருவாள். வாயைத் திறந்து பேசவே மாட்டாள். எவர்சில்வர் தூக்கில் சாப்பாடு கொண்டு வந்து வைப்பாள். போய் விடுவாள். பிறகு அடுத்த வேளை இன்னொரு தூக்கில் சாப்பாடு கொண்டு வந்து வைத்துவிட்டு, முந்தின தடவை வைத்திருந்த தூக்கை எடுத்துச் சென்று விடுவாள். பசி ரொம்ப ரொம்ப வாட்டினால் அதிலிருந்து இரண்டு கவளம் சாப்பிடுவாள் சுபா. மற்றப்படி தூக்கில் சாப்பாடு அப்படியே இருக்கும்.

ஏன் சாப்பிடவில்லை என்று அந்தக் கிழவி எதுவும் கேட்பதில்லை.

யார் இவள்? இவளுடைய எஜமானர் யார்? எதற்காக என்னை இங்கே கொண்டு வந்து அடைத்திருக்கிறார்கள்? எதுவும் அவளுக்குத் தெரியவில்லை.

ஆனால் தான் இங்கே கொண்டு வரப்பட்டதுமட்டும் தெள்ளத் தெளிவாய் நினைவிருக்கிறது.

அப்பாவின் நிறுவனத்தில் விழாவுக்காகப் போனது... திடீரென்று விளக்குகள் அணைந்து அமளி துமளி ஏற்பட்டது...

கூட்டம் அலைமோதி, நெக்கி நெக்கி அவளை வாசல்புறத்துக்குக் கொண்டு தள்ளியது. தெருப் பக்கம் சில விளக்குகள் எரிந்துகொண்டிருந்ததால் அதன் வெளிச்சம் சிறிது அங்கே பரவியிருந்தது. அப்போது யாரோ ஒருவன் அவளை நெருங்கி, "சுபா! நீங்க இங்கேயா இருக்கிறீங்க? உங்க அப்பாவுக்குத் தலையில் அடிபட்டு ஆஸ்பத்திரிக்கு எடுத்திட்டுப் போறாங்களே?" என்று பரபரப்புடன் சொன்னான்.

"அப்பாவுக்கா? எப்போது?" என்று பதைத்துக்கொண்டு அந்த ஆளைப் பின் தொடர்ந்து ஓடினாள். தெருவில் ஒரு கார் நின்றிருந்தது. "அதோ! ஆஸ்பத்திரிக்கு எடுத்துப் போறாங்க!" என்றான் அந்த ஆள்.

"அப்பா!" என்று கூவிய வண்ணம் காருக்குள் எட்டிப் பார்த்தது தான் ஞாபகம் இருக்கிறது. அந்த ஆள் அவள் முதுகில் கைவைத்து அழுத்தி அவளைக் காருக்குள் தள்ளினான். விநோதமான இனிமையான மணம்கொண்ட ஒரு துணி அவள் மூக்கையும் வாயையும் பொத்தியது. 'ஐயோ!' என்று கூச்சலிட்டோமா, கூச்சலிட நினைத்தோமா என்று கூட அவளுக்குத் தெரியவில்லை.

மயக்கம் தெளிந்தபோது, தான் ஒரு சிறிய அறைக்குள் அடைபட்டிருப்பதை உணர்ந்தாள். அங்கேயும் ஒரு கிழவி வாய் பேசாமல் அவளுக்குச் சாப்பாடு கொண்டுவந்து தந்தாள். தான் என்ன கத்தினாலும் அது வெளியே யாருக்கும் கேட்கவில்லை என்பது சுபாவுக்குத் தெரிந்தது.

ஒரு நாள் முழுதும் அங்கே சிறைப்பட்டிருந்தபோது, இன்னொரு ஆள் மறுபடியும் ஒரு முறை அவளுக்கு மயக்கம் ஏற்படுத்தினான். இந்த முறை ஊசி மருந்தினால்.

களைப்பு மிகுதியினால் அவள் சற்றுக் கண்ணயர்ந்த சமயம், சுரீலென்று ஓர் ஊசி தன் கையில் குத்துவதை அறிந்

கிருஷ்ணகுமார்

தாள். திடுக்கிட்டு அலறி எழுந்திருக்கும் போதே அவள் நினைவுகள் மங்கின. தான் தூக்கிச் சொல்லப்பட்டு, ஒரு காரில் கிடத்தப்பட்டு, வெகு தூரம் கொண்டு செல்லப்படுவதை அரை குறையாக உணர்ந்தபடியே மூர்ச்சையுற்றாள்.

அதன் பிறகு இங்கேதான் கண் விழிந்தாள்.

என்ன நோக்கத்துடன் இதெல்லாம் நடத்தப்படுகின்றன? முதலில் தன்னைக் கடத்தியவன் யார்? பிறகு அங்கிருந்து மறுபடி கடத்தியவன் யார்?

பெண்ணுகையால், அதுவும் இளம் வயதுப் பெண்ணுகையால், அவளுக்கு முதன் முதல் ஏற்பட்ட பயங்கரமான அச்சம். தன்னைக் கெடுக்கப் போகிறார்கள் என்பதுதான்.

ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லையே? மயக்கத்தின்போது யாரேனும் பலாத்காரம் செய்திருப்பார்களோ? இல்லையென்று அவளுடைய உடம்பும் உடைகளும் நிச்சயமாய்க் கூறின.

பின்னே ஏன் இப்படிச் செய்கிறார்கள்? எதற்காக?

இரு கைகளிலும் முகத்தைத் தாங்கிக்கொண்டு தலை கவிழ்ந்து உட்கார்ந்திருந்த சுபா நிமிர்ந்துகொண்டாள். கண்களைத் தேய்த்துவிட்டுக் கொண்டாள். 'என்ன இப்படி ஒரு கோழையாக இங்கேயே அடைந்து கிடக்கிறேன் நான்!' என்று தன்னைத் தானே அதட்டிக் கொண்டாள். எழுந்து குளியலறைக்குச் சென்று முகத்தைக் கழுவிக்கொண்டாள். சில்லென்ற தண்ணீர் அவளுக்குப் புதிய தெம்பு கிடைத்தது.

இங்கிருந்து தப்பிச் செல்ல வழியா இருக்காது? தேடினால் கிடைக்காமலா போகும்? அந்தச் சிறிய அறையைக் கூர்ந்து கவனித்தபோது, மறுபக்கத்தில் ஒரு சிறிய கதவு இருப்பது தெரிந்தது. பழங்காலத்து வீடாகையால் தேடி வந்து கூட்டிவிட்டுச் செல்வதற்காக வைக்கப்பட்டிருந்த வாசல் என்று தோன்றியது.

தள்ளிப் பார்த்தாள். திறக்கவில்லை.

வெறுப்புடன் நாற்காலியில் உட்கார்ந்தாள்.

''என்னம்மா, ரொம்ப ஏமாற்றமாயிட்டுதா? பாவம்,'' என்ற ஆண் குரல்—

திரும்பிப் பார்த்தபோது, வாட்டசாட்டமான ஒரு ஆள் நின்றிருந்தார். ஒரு பக்கம் பெரிய மனிதர் மாதிரித் தோன்றியது. இன்னொரு பக்கம் முரட்டு ரௌடியின் களை தெரிந்தது.

போக்கிரித்தனமான சிரிப்புடன் அவர், ''இது ரொம்பப் பழங்காலத்து வீடு, சுபா. எல்லாம் ரொம்பக் கெட்டியான கதவுகள் என்றார்.

அவரைப் பார்க்கப் பிடிக்காமல் மறுபுறம் திரும்பிக் கொண்டாள் சுபா.

''என்னம்மா ரொம்பக் கோபமாக இருக்கிறே? சாப்பாடு போட்டுக் கொண்டு சாப்பிடு. இல்லே, வேலைக்காரியைக் கூப்பிட்டு உனக்கு இலை போட்டுப் பரிமாறச் சொல்லட்டுமா?''

அவள் சரேலென்று திரும்பினாள். இவன்மீது பாய்ந்து, நகத்தினால் பிறாண்டி, கழுத்தை நெரித்து...

இவன் பயங்கரமான ரௌடி. ஒரு சாதாரணப் பெண்ணான நம்மால் எதுவும் செய்ய முடியாது.

''யார் நீங்க? எதற்காக என்னை இங்கே கொண்டுவந்து அடைத்திருக்கீங்க?'' என்று நிதானத்துடன் கேட்டாள்.

அவருடைய முகம் மலர்ந்தது. ''ஆ, இதுதான் சமத்துப் பிள்ளையின் லட்சணம்!'' என்றார் புன்னகையுடன். பிறகு அறையின் மறு கோடியிலிருந்த நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தார். ''என் பெயர் சரவண




''எங்கப்பாவோட கடைசி ஆசையாலே எங்க சொத்தே அழிஞ்சிடும் போலிருக்கு.''

''ஏன் சார்?''

''அவர் செத்ததிலேர்ந்து வாரா வாரம் 'இரண்டாவது வாரம்; மூணாவது வாரம்'னு நூறு வயசு ஆகிறவரைக்கும் போஸ்டர் ஒட்டணுமாம். உயிலிலே எழுதி வெச்சிருக்கார்!''

—எம். பூங்கோதை.







இன்றே வாங்குவீர்
ஒரு பாக்கெட்
புரோடின் நிறைந்த
தி.

Marketed by :

JEGI

**JEGI MARKETING**
SRIDEV APARTMENTS,
31, CIT NAGAR,
I MAIN ROAD, NANDANAM,
MADRAS 600 035
PHONE : 442678

Manufactured by :
CONSOLIDATED FOODS
PRIVATE LIMITED,
MADRAS.

ஜேஜி என்றால் நல்ல மதிப்பு

Cen

# 30 லட்சத்திற்கும் மேற்பட்ட பாக்கெட்டுகள்




## "ஆறு பாக்கெட்டுகள் ஏழாகின்றன. நான்கு பாக்கெட்டுகள் ஒன்பதாகின்றன"

### இதுவரை இல்லாத மிகப்பெரிய பிஸ்கட் கொடை!

ஆம், குவாலிடி பிஸ்கட்டுகளின் உன்னத சுவையோடு, கவர்ச்சிகரமான திட்டமும் இணைந்து வருகிறது. பிஸ்கட்டுகளின் மேலுறையில் உள்ள மெழுகு பேப்பரை அகற்றிப் பார்த்தீர்களேயானால், குவாலிடி செ∴ப் சின்னத்தின் சில உறுப்புகள் அச்சாகி இருப்பதைக் காணலாம். சில மேலுறைகளில் தொப்பி, சிலவற்றில் முகத்தினுடைய வரை கோடு, இன்னும் சிலவற்றில் முகத்தின் அங்கங்களான கண்கள், மூக்கு, வாய் இப்படி இருக்கும். மேலும் சிலவற்றில் கழுத்து பாகம் இருக்கும். கீழே தரப்பட்டுள்ளது போல் எண்களோடு இருக்கும்.

இந்த நான்கு பாகங்கள் சேர்ந்து குவாலிடி செ∴ப் சின்னம் உருவாகிறது.




மேற்கூறிய நான்கு மேலுறைகளை சேகரியுங்கள். ஐந்து பாக்கெட்டுகள் இலவசம். 1, 2, 3, அல்லது 2, 3, 4 மேலுறைகளை சேகரியுங்கள். ஒரு பாக்கெட் இலவசம். அல்லது எந்த ஆறு மேலுறைகளை சேகரித்தாலும் ஒரு பாக்கெட் இலவசம். உங்கள் அருகாமையில் உள்ள கடையில் மேற்கண்டவாறு மேலுறைகளைக் கொடுத்து இலவச பிஸ்கட்டுகள் பெறுங்கள்.

இத்திட்டம் கர்நாடகா, தமிழ்நாடு, பாண்டிச்சேரி, கேரளா, கோவா மாநிலங்களிலும் மற்றும் மகாராஷ்டிராவின் சில பாகங்களில் மட்டும்தான் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.








குவாலிடி
பிஸ்கட்ஸ் பி. லிட்.
பெங்களூர்-560 039.

CLARION/K.B./84259

முத்து. இந்த வட்டாரத்தில் நான் ஒரு பெரிய புள்ளி. நீ இப்ப இருப்பது ராயபுரம் பகுதியில் என் மாமனார் வீட்டில்,'' என்று நிதானமாகத் தெரிவித்தார்.

சுபாவுக்குச் சிறிது தைரியம் வந்தது. ''என்னை எதுக்காகக் கடத்திக் கொண்டு வந்தீங்க?''

''அடாடா! நீ நினைக்கிறது தப்பும்மா. உன்னைக் கடத்திட்டு வந்தது நானில்லை. என் தம்பி பழனிமுத்து. அவனிடமிருந்து நான் உன்னைக் காப்பாத்தி இங்கே கொண்டு வந்து வைத்திருக்கிறேன்!'' அவள் முகத்தில் தென்பட்ட திகைப்பைக் கண்டு அவருக்குச் சிரிப்பு வந்தது. ''புரியலியா உனக்கு? உன் வீட்டிலே மனோஜ் என்று ஒரு பிள்ளை இருக்கானில்லையா, உன்னோட காதலன்? அவனுக்கும் என் தம்பி பழனிமுத்துவுக்கும் பாங்க் விவகாரமாய் ஒரு தகராறு. மனோஜைத் தண்டிக்கணும் என்பதற்காக உன்னைக் கடத்திக்கொண்டுபோய் ஒரு வீட்டில் வைத்திருந்தான் என் தம்பி. அங்கிருந்து அவனுக்குத் தெரியாமல் உன்னை நான் இங்கே அழைச்சிட்டு வந்தேன்.''

சுபாவின் முகத்தில் குழப்பத்துக்கு மேல் குழப்பமாய்ப் பொங்கிக் கொண்டிருந்தது.

சரவணமுத்து மறுபடியும் சிரித்தார். ''அதுதான் ஏன்னு நீ கேட்கிறே? இல்லியா? என் தம்பி பழனிமுத்துவுக்கும் எனக்கும் ரொம்ப நாளாய்ப் பலப் பரீட்சை நடந்திட்டிருக்குது. இப்ப வசமாய் அவன் என்னிடம் மாட்டிக்கிட்டிருக்கான். எப்படிங்கிறியா? மனோஜைப் பணிய வைச்சதும் உன்னை விடுவிச்சு அவனிடம் ஒப்படைக்கலாம் என்பது பழனிமுத்துவோட திட்டம். உன்னைக் கடத்திப் போனதே யாருக்கும் தெரியாமல் காதும் காதும் வைச்ச மாதிரி காரியத்தை முடிச்சிடலாம்னு நினைச்சிருந்தான் மடையன்! அவன் திட்டத்திலே மண்ணைப் போட்டு, சரியானபடி சிக்க வைச்சிருக்கேன்! எப்படி நம்ம வேலை?''

திமிருடன் சிரித்துக் கொண்டிருக்கும் அவரை அதிர்ச்சியுடன் பார்த்த வண்ணம் மௌனமாகவே இருந்தாள் சுபா.

சரவணமுத்து தொடர்ந்தார்.

இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் 6 வித்தியாசங்கள் உள்ளன. விடை: 91'ம் பக்கம்




போலீஸ் அதிகாரி: ''வந்தவன் திருடனாக இருக்கும் என்று சொல்வதற்கு இல்லை. தம்புராவை உடைச்சிட்டு இவர் வாய்க்குப் பிளாஸ்திரி போட்டுவிட்டு ஓடியிருக்கிறதைப் பார்த்தால் சங்கீத ரசிகரா யிருக்கும் என்று தோன்றுகிறது.''

# உங்கள் கவனத்திற்கு ஒரு சவால்!

[அட்டையை மறுபடி பார்க்காமல் பதில் சொல்ல வேண்டும்.]

1. அட்டைப் படப் பெண் மடித்து வைத்துள்ள விரல்கள்:
அ) மூன்று ஆ) இரண்டு இ) ஒன்று

2. தலையிலுள்ள பூ:
அ) ரோஜாவும் மல்லிகையும் ஆ) கனகாம்பரமும் மல்லிகையும் இ) கனகாம்பரம் மட்டும்

3. படம் எடுக்கப்பட்ட இடம்:
அ) ஊட்டி ஆ) கொடைக்கானல் இ) கிண்டி

4. தாவணியின் நிறம்:
அ) சிவப்பு ஆ) பச்சை இ) பழுப்பு

5. அணிகளில் இரண்டு எழுத்துக்கள் இடம் பெற்றிருக்கின்றன. அவை:
அ) ஸ்ரீம் ஆ) ஓம் இ) ஜெயா

6. பெண்ணின் பெயர்:
அ) மாலதி ஆ) கிறிஸ்டின் இ) ப்ரீதா

7. வண்ணப் புகைப்படம் எடுத்தவர் பெயர்:
அ) ஆர்.ஏ. தாஸ் ஆ) யோகா இ) ஹரலிங்கம்

அட்டைப்படம்

விடை: 1. ஆ; 2. ஆ; 3. அ; 4. இ; 5. ஆ; 6. இ; 7. அ

''போலீஸ்லே இப்பவே அவனைப் போட்டுக் குடைஞ்சு எடுத்திட்டிருக்காங்க. பத்திரமா உன்னைத் திரும்ப ஒப்படைச்சிடலாமேன்னு தவிக்கிறான். ஆனால் நீ இருக்கிற இடம் தெரியலே! எப்படி? அவன் பண்ணின கடத்தலை அவன் வாயாலேயே ஒப்புக்க வைச்சு அதை டேப் பண்ணி வைத்திருக்கிறேன். பழனிமுத்து இப்பப் பொறியிலே மாட்டிக்கிட்ட எலி! ஹாஹ்ஹா!''

சுபாவுக்குக் காலோடு தலை நடுக்கம் ஏற்பட்டது. ஒரு வழியாகப் பேச்சும் வந்தது. கையெடுத்துக் கும்பிட்டவள், ''ஐயா, உங்க அண்ணன் தம்பி தகராறுகளைத் தீர்த்துக்கொள்ள வேறே எத்தனையோ வழி இல்லையா? பகடைக்காயாய் நான்தானா அகப்பட்டேனா? என் அம்மாவுக்கும் அப்பாவுக்கும் நான் ஒரே பெண். எனக்கு ஏதாவது ஒன்று நேர்ந்தால் அவர்கள் உயிரோடேயே இருக்க மாட்டார்கள்...'' என்று சொல்லும்போது துக்கம் தாளாமல் அவளுக்குத் தொண்டை அடைத்தது.

''அடடடடே! என்னம்மா நீ, சுத்தப் பைத்தியக்காரப் பெண்ணா இருக்கிறே!'' என்று எழுந்து அருகில் வந்தார் சரவணமுத்து. ''என்ன நேரும் உனக்கு? ஒண்ணும் நேராது. ராஜா வீட்டுப் பொண்ணுபோல உன்னைக் கண்ணாய் வைச்சிட்டிருக்கிறேன் இல்லே? இன்னும் இரண்டு மூணு நாள்தான். அந்தப் பழனிமுத்துவை நல்லா அழ வைச்ச பிறகு உன்னைக் கொண்டு போய் விட்டிடறேன். நல்லா சாப்பிட்டுவிட்டுச் சந்தோஷமாய் இரு. இருட்டிப் போச்சு, பார். மணி ஒன்பது ஆகப் போகிறது. கேரியரைப் பிரிச்சு இலையைப் போட்டுச் சாப்பிட்டு விட்டுப் படுத்துக்க. உனக்கு ஒரு கெடுதலும் நேராது...''

வெளியே யாரோ அழைப்பு மணியை அழுத்தினார்கள்.

சரவணமுத்து மேற்கொண்டு பேசிக்கொண்டிராமல் கதவை வெளிப்புறம் பூட்டிக்கொண்டு வாசற்கதவைத் திறந்தார்.

எதிர் வீட்டுக்காரரும் அவருடைய நெருங்கிய சினேகிதருமான மோகனராஜ்தான் கூப்பிட்டவர்.

''என்ன அண்ணே, உள்ளே

பேச்சுக் குரல்? உங்க மாமியார் மாமனுர் ஊரிலிருந்து வந்துட்டாங்களா?'' என்றுர்.

''இல்லேயில்லே. சும்மா ரேடியோ கேட்டிட்டிருந்தேன்,'' என்று சமாளித்தார் சரவணமுத்து. ''என்னங்க இந்த நேரத்தில்?''

''சும்மா வருவேனு? உங்களுக்குப் பிடிச்ச சமாசாரம்... முன்னே ஒருவாட்டி நான் பார்த்தேன்னு சொன்னப்ப, அடுத்த வாட்டி என்னைக் கூப்பிட மறந்துடாதேன்னு சொன்னீங்களே, அதுதான்.'' மோகனராஜ் ஒரு தினுசான சிரிப்புடன் கண்ணடித்தார்.

சரவணமுத்துவுக்கு லேசாய்ப் புரிந்தது. ''என்னது... ப்ளூ ஃபிலிமா?''

''ஆமாம். அதேதான். ஹாங்காங்கிலிருந்து வந்திருக்குது. நம்ம வீட்டிலேதான் யாருமில்லியே? அஞ்சாறு பேர் கம்பெனி சேர்ந்திருக்குது. வீடியோ போடலாம்னு... வாங்க, கதவைப் பூட்டிக்கிட்டு...'' என்று அழைத்தார் மோகனராஜ்.

நாடி நரம்புகளில் கிளுகிளுப்பு ஏறச் சரவணமுத்து அவரைத் தொடர்ந்தார்.

ஊர் சந்தடியெல்லாம் அடங்கின பிறகு, ரொம்ப ரகசியமாய், மோகனராஜின் வீட்டில் படம் ஓட ஆரம்பித்தது.

அதைப் போல ஒரு பச்சையான படத்தைச் சரவணமுத்து அதுவரை பார்த்தது கிடையாது.

நட்ட நடுநிசி வாக்கில் படம் முடிந்தபோது அவர் மூளை கிறுகிறுத்திருந்தது. புத்தி என்னென்னவோ கெட்ட வழிகளைச் சொல்லிக் கொடுத்தது.

தன் வீட்டுக் கதவைத் திறந்தார்.

வீட்டுக்குள்ளே அழகும் இளமையும் கொழிக்கும் ஒரு பெண், எவ்விதத் துணையும் இல்லாமல் தனித்து அடைபட்டிருக்கிறுள் என்ற எண்ணம் அவருக்குத் தேனுய்த் தித்தித்தது.

வெறியினுல் அறிவு மழுங்கியவராக, அசுரப் பசியுடன் உள்ளே நுழைந்தார்.

*(தொடரும்)*

**6 வித்தியாசங்கள் விடை:**

1. தம்புரா
2. ரேடியோ
3. கட்டு
4. மிதி
5. பெயர்ப் பலகை
6. புடவை டிஸைன்



''நேற்று ஒரு மர்மக் கதையைப் படித்து முடித்ததும் ஒரு ஆவி வந்தது. படுத்து உறங்கிவிட்டு எழுந்திருக்கும்போது ஒரு ஆவி வந்தது.''

''ஐயையோ! மேற்கொண்டு சொல்லாதே, எனக்கு ரொம்பப் பயமா இருக்கு.''

''போடி பைத்தியம்! வந்த ஆவி எல்லாம் வெறும் கொட்டாவிதான்.''

—எம்.பி. சின்னத்துரை.

அப்பா: நீ பத்தாம் வகுப்பு பாஸ் செய்தால் உனக்கு ஒரு சைக்கிள் வாங்கி தருகிறேன்.

மகன்: ஃபெயில் ஆகிவிட்டால்...

அப்பா: சைக்கிள் ரிக்ஷா வாங்கி தருகிறேன்.

—பழனிசாமி.



புதிய பிஎஸ்ஏ டீலக்ஸ், இந்தியாவில் முதன்முதலாக இரவில் கூடுதல் பாதுகாப்பிற்கு ரி:ப்ளக்டர் பெடல்களுடன் வருகிறது. சைக்கிளுக்குப்பின்னே வந்து கொண்டிருக்கும் வாகனங்களுக்கு எச்சரிக்கையளிக்கும் வண்ணம் பெடல்கள் பிரதிபலிக்கும். இதர சைக்கிள்களைவிட புதிய பிஎஸ்ஏ டீலக்ஸ் வருடக் கணக்கில் முன்னோடி யாகத் திகழ்கிறது. இதற்குக் காரணம் இதன் ரி:ப்ளக்டர் பெடல்கள் மட்டுமல்ல இன்னும் எத்தனையோ புதிய அம்சங்கள்.

**புதிய பிஎஸ்ஏ டீலக்ஸ்: இதர சைக்கிள்களைவிட குறைந்தபட்சம் 30 ஆண்டுகள் முன்னோடியாக விளங்குகிறது.**

புதிய பிஎஸ்ஏ டீலக்ஸ் அறிமுகம் செய்கிறது: இரட்டிப்புப் பாதுகாப்பிற்கு :போர்க்லாக்; இதுவரை வெளிநாட்டுக் கார்களிலும், ஸ்போர்ட்ஸ் சைக்கிள்களிலும் மட்டுமே காணப்பட்ட ஒயிட்-வால்டு டயர்கள். நீண்டு நிலைநிற்கும் பளபளப்பான நல்ல தோற்றத்திற்கு அக்ரிலிக் பெயின்ட்—இதுவரை வெளிநாட்டுக் கார்களில் மட்டுமே காணப்பட்ட தனிச்சிறப்பு இது. இந்த அம்சங்கள் அனைத்தையும் இந்தியாவிலேயே முதன்முதலாக அறிமுகம் செய்கிறோம்.

இவை, இதர சைக்கிள்களைவிட புதிய பிஎஸ்ஏ டீலக்ஸை குறைந்தபட்சம் 30 ஆண்டுகள் முன்னோடியாக்குகின்றன.

இது ஓர் ஆரம்பமே.

**BSA Deluxe**



## புதிய பிஎஸ்ஏ டீலக்ஸ்

## மேன்மையானது, மேன்மேலும் சிறந்து விளங்கிடும்.

Rediffusion/TI/2783 є TM

## 22

அந்த ஆஸ்துமாக்காரப் பெரியவரையும் அவர் மனைவியையும் டாக்ஸி ஏற்றியனுப்பிய சுப்பிரமணியம், நேரே சுபாவின் வீட்டுக்குப் புறப்பட்டார். எப்போதோ ஒரு முறை சுலோசனாவுடன் அங்கே சென்றிருந்த விலாசம் ஞாபகம் இருந்தது.

அவர் போன சமயம் சுபாவின் வீடு, இழவு நேர்ந்த இடம் போலக் காட்சியளித்தது.

சடகோபனுக்கு முதலில் அவரை அடையாளம் தெரியவில்லை. ''நான் உங்கள் சுபாவின் சினேகிதி சுலோசனாவின் அப்பா,'' என்று சுப்பிரமணியம் அறிமுகப்படுத்திக் கொண்டதும், அவர் கண்ணில் கடகடவென்று கண்ணீர் பெருகியது.

''உங்க பெண் போயிட்டாள்னு தெரியும். என் பெண்ணுக்கும் கிட்டத்தட்ட அதே கதிதான். இருக்காளா போயிட்டாளான்னு தெரியலே,'' என்று மேல் துண்டினால் வாயைப் பொத்திக் கொண்டு கூறினார்.

''கவலைப்படாதீங்க. சுபாவுக்கு எந்த ஆபத்தும் நேராது. ஒரு பெரிய மகான் சொல்லியிருக்கிறார்,'' என்று சுப்பிரமணியம் தெரிவித்தபோது, பேச்சுக் குரல் கேட்டுச் சமையலறையிலிருந்து சுபாவின் அம்மாவும் மாடியிலிருந்து மனோஜும் வந்தார்கள்.

சுப்பிரமணியம் சுருக்கமாக, ஆனால் ஒரு விவரமும் விட்டுவிடாமல் எல்லாவற்றையும் சொன்னார். ''ஒரு அண்ணன் தம்பிகளின் சண்டையில் உங்கள் பெண் சிக்கியிருக்கிறாள் என்று இந்தோர் மஹந்த் சொன்னார். ஒருவன் பெயர் 'ப'வில் ஆரம்பிக்குமாம். இன்னொருவன் பெயர் 'ச'வில் ஆரம்பிக்குமாம்,'' என்று தெரிவித்தாரோ இல்லையோ—

மாடிப் படியில் நின்றிருந்த மனோஜ் ஓடிவந்து அவர் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். ''கரெக்ட், கரெக்ட்! ஒருவன் பெயர் பழனிமுத்து. அண்ணன் பெயர் சரவணமுத்து. அவன் தான் சுபாவை எங்கேயோ மடக்கி வைத்திருக்கிறான்...... நானும் தேடித் தேடி அலைகிறேன்.....''

சரவணமுத்து!

சற்று முன் சென்டிரல் ஸ்டேஷனில் கேட்ட பெயர் சுப்பிரமணியத்துக்கு ஞாபகம் வந்தது. கடவுள் தனக்கு உதவியாகச் சந்தர்ப்பங்களைச் சிருஷ்டித்துத் தருகிறார் என்ற நம்பிக்கையும் வளர்ந்து வலுத்தது.

''சரவணமுத்து என்பவரின் வீடு எழும்பூரில் மியூசியத்துக்குப் பக்கத்தில் இருக்கிறதா?'' என்றார்.

''ஆமாம்.''

''கிளம்புங்கள் உடனே,'' என்று எழுந்து கொண்டார் சுப்பிரமணியம்.

**என்னைத் தவிர**

**கிருஷ்ணகுமார்**

''அந்தச் சரவணமுத்துவின் மாமனாருக்கு ராயபுரத்தில் ஜோசப்தாஸ் தெருவில் ஒரு வீடு இருக்கிறது. அதைப் பூட்டி, சாவியைச் சரவணமுத்துவிடம் தந்திருக்கிறார்கள். அங்கேதான் சுபாவை வைத்திருக்க வேண்டும். என் உள்மனசு நிச்சயமாய்ச் சொல்லுகிறது,'' என்றார்.

''அதைக் காட்டிலும் பழனிமுத்துவின் வீட்டுக்கே போகலாம்,'' என்று அவரை இழுத்துக்கொண்டு கிளம்பினான் மனோஜ். ''அண்ணனோட மாமனார் வீடு எதுன்னு அந்த ஆள் கரெக்ட்டாய்க் காட்டுவார். அண்ணனை மடக்க அவர் துடிச்சிட்டிருக்கார்!''

விஷயத்தைக் கேட்டதும் மகிழ்ச்சியில் ஒரு துள்ளுத் துள்ளினார் பழனிமுத்து.

''என்னது! அவனோட மாமனார்

வீட்டிலா! ஆமாம். ராயபுரம் ஜோசப் தாஸ் தெருதானே? எனக்குத் தெரியும். வாங்க,'' என்று தன் காருக்குள் அவர்களையும் உள்ளே தள்ளிவிட்டுத் தானும் தாவினார். ''எங்கேய்யா தூங்கிட்டிருக்கான் அந்த டிரைவர்! எழுப்பு!'' என்று சத்தம் போட்டுப் பார்த்து, எந்தப் பலனும் கிடைக்காததால் தானே ஓட்ட ஆரம்பித்தார்.

''சரவணமுத்து! சரியானபடி மாட்டிக்கிட்டே இப்ப!'' என்றவர், வழியில் போலீஸ் ஸ்டேஷனில் காரை நிறுத்தினார். ''இப்ப வேண்டாங்க,'' என்று தடுத்துப் பார்த்தான் மனோஜ்.

''நீ சும்மா இருப்பா. இப்ப இல்லாட்டி எப்ப?'' என்று அவனை அடக்கிவிட்டு, ஸ்டேஷனுக்குள் நுழைந்தார் பழனிமுத்து. அரைத் தூக்கத்திலிருந்த இன்ஸ்பெக்டரை எழுப்பி, விஷயத்தைச் சொல்லி, ஜீப்பில் அவரும் இரண்டு கான்ஸ்டபிள்களும் தன்னைப் பின் தொடரும்படி ஏற்பாடு செய்துவிட்டுக் காரைக் கிளப்பினார்.

பளீரென்று விளக்கு எரிந்தது.

தரையில் படுத்திருந்த சுபா வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள்.

அந்த மாதிரி ஓர் அலங்கோலமான, பயங்கரமான நிலையில் சரவணமுத்து கதவைத் திறந்து கொண்டு வருவார் என்று அவள் கொஞ்சமும் நினைத்திருக்கவில்லை. உடல் நடுங்க எழுந்தவள் சுவரின் மூலைக்குப் போய் ஒண்டிக் கொண்டாள்.

''சுபா....'' என்று குழறிக் கொண்டு அவர் அவளை நெருங்கினார். சற்று முன் ப்ளூ ஃபிலிம் பார்த்த வெறி அவர் கண்களில் மின்ன, தோழரின் வீட்டில் ருசித்திருந்த மது அவருடைய மூச்சிலே வெளிப்பட்டது.

''என்ன.... என்ன.....'' என்று சுபா பதறிக் கொண்டிருக்கையில் அவளை அவர் மிகவும் நெருங்கிவிட்டார்.

அவள் சுவரோடு சுவராக ஒண்டிக்கொண்டாள்.

''என்னன்னு கேக்கிறே!'' விகாரமாகச் சிரித்தார் சரவணமுத்து. ''ராத்திரி வேளையிலே, ஒருத்தரும் இல்லாத சமயத்திலே, உன்னைப் போல அழகான பெண் கிட்டே என்னைப் போல ஆம்பிளை எதுக்காக வருவானம்மா?''

''ஐயையோ! வெளியே போங்க! கொஞ்சம் முன்னே என்ன சொன்னீங்க!''

''என்ன கண்ணு சொன்னேன்?''

''என்னிடம் தப்பாய் நடந்துக்க மாட்டேன்னு சொல்லலை?''

''அது அப்ப சொன்னது!'' என்று நகைத்தார் சரவணமுத்து. ''நீ இத்தனை அழகாயிருப்பது அப்ப என் கண்ணுக்குத் தெரியலை. இப்பத் தெரியுது!''

அவருடைய இரண்டு கைகளும் அவள் இடுப்பைச் சுற்றி வளைத்தது. அவளைச் சுவரில் ஒட்டிய மாதிரி சிறைப் படுத்தியது.

''என்ன நீ இப்படிப் பயப்படறே?'' என்று இன்னும் அவளை நெருங்கினார். அவருடைய முகம் அவள் முகத்தை உரசியது.

''ஐயோ! யாராவது வாருங்களேன்! என்னைக் காப்பாத்துங்களேன்!'' என்று கூச்சலிட்டாள் சுபா. ஆனால் பயத்தினால் அவள் குரல் அவளுக்கே கேட்கவில்லை.

ஜன்னல் திறந்திருந்தது. வெளியே வானம் தெரிந்தது. வானத்தில் பௌர்ணமி நிலா பளபளவென்று மிதந்து கொண்டிருப்பது தெரிந்தது.

அந்த வினாடி அவள் உடம்புக்குள் ஏதோ ஒன்று அசைந்து புரண்டு எழுந்திருப்பது போல் தோன்றியது. யாரோ தன் கைக்கும் காலுக்கும் பலம் கொடுப்பதாக உணர்ந்தாள்.

அதே சமயம், ''என்ன கண்ணு யோசனை?'' அவள் கையை வளைத்து மறுபுறத்துக்கு இழுத்தார் சரவணமுத்து.



''இந்தத் தியேட்டர் முழுவதும் ... என்றீர்களே, குளிர்ச்சி இல்லையே?''

''A.C.ன்னு அழுக்குச் சேர்னு அர்த்தம்!''

—ஏ.வி. தேவன்.




## “ஆறு பாக்கெட்டுகள் ஏழாகின்றன. நான்கு பாக்கெட்டுகள் ஒன்பதாகின்றன”

**இதுவரை இல்லாத மிகப்பெரிய பிஸ்கட் கொடை!**

ஆம், குவாலிடி பிஸ்கட்டுகளின் உன்னத சுவையோடு, கவர்ச்சிகரமான திட்டமும் இணைந்து வருகிறது. பிஸ்கட்டுகளின் மேலுறையில் உள்ள மெழுகு பேப்பரை அகற்றிப் பார்த்தீர்களேயானால், குவாலிடி செஃப் சின்னத்தின் சில உறுப்புகள் அச்சாகி இருப்பதைக் காணலாம். சில மேலுறைகளில் தொப்பி, சிலவற்றில் முகத்தினுடைய வரை கோடு, இன்னும் சிலவற்றில் முகத்தின் அங்கங்களான கண்கள், மூக்கு, வாய் இப்படி இருக்கும். மேலும் சிலவற்றில் கழுத்து பாகம் இருக்கும். கீழே தரப்பட்டுள்ளது போல் எண்களோடு இருக்கும்.

இந்த நான்கு பாகங்கள் சேர்ந்து குவாலிடி செஃப் சின்னம் உருவாகிறது.




மேற்கூறிய நான்கு மேலுறைகளை சேகரியுங்கள். ஐந்து பாக்கெட்டுகள் இலவசம். 1, 2, 3, அல்லது 2, 3, 4 மேலுறைகளை சேகரியுங்கள். ஒரு பாக்கெட் இலவசம். அல்லது எந்த ஆறு மேலுறைகளை சேகரித்தாலும் ஒரு பாக்கெட் இலவசம். உங்கள் அருகாமையில் உள்ள கடையில் மேற்கண்டவாறு மேலுறைகளைக் கொடுத்து இலவச பிஸ்கட்டுகள் பெறுங்கள்.

இத்திட்டம் கர்நாடகா, தமிழ்நாடு, பாண்டிச்சேரி, கேரளா, கோவா மாநிலங்களிலும் மற்றும் மகாராஷ்டிராவின் சில பாகங்களில் மட்டும்தான் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.






குவாலிடி
பிஸ்கட்ஸ் பி. லிட்.
பெங்களூர்-560 039.

CLARION/K.B./84259



## மாடு கன்று போடும் நேரமும் மகள் பிரசவிக்கும் நேரமும் ஒன்றாக இருந்த போது...

ஓர் வீட்டில் ஒரு கணவனும் மனைவியும் இருந்தார்கள். அவர்கள் வீட்டில் பசு ஒன்றும் இருந்தது; அதற்குப் பிரசவ நேரம். அதேபோல் அவர்களது பெண்ணும் மகப் பேற்றுக்காகத் தாய்வீடு வந்திருந்தாள். அவளுக்கும், அதுதான் நேரம்.

பிரசவ நேரம் வந்தபோது பசுவைக் கணவரிடம் ஒப்படைத்துவிட்டு, மகளை அழைத்துக்கொண்டு மருத்துவமனை சென்றார். கணவனும் மனைவியும் அவ்வப்போது பிரசவ நிலைமைப்பற்றி ஒருவருக்கொருவர் தொலைபேசியில் விசாரித்துக் கொண்டார்கள். (அவர்களுக்குப் பசு பெண் கன்றையும், மகள் ஆண் மகவையும் பெறவேண்டுமென்பது ஆசை.)

இந்த நிலையில் மகள் ஒரு பெண் மகவைப் பெற்றவுடன் மனைவி கொஞ்சம் கவலையோடு பசுவைப் பற்றி விசாரித்தார். கணவர் பசு ஆண்கன்றை ஈன்ற செய்தியைத் தெரிவித்தபோது ''அய்யோ! கறக்க முடியாதே......'' என்று மனைவி பரிதவித்தார்.

மனைவி மூலம் தன் மகள் பெண் மகவைப் பெற்ற செய்தி அறிந்த கணவர் ''அய்யோ! கறந்து விடுவானே...'' என்று பரிதவித்தார்.

—வ. தேனப்பன்.

---

அவர் சுழன்று திரும்பிய வேகத்தில், அவருடைய சில்க் ஜிப்பாவின் பித்தான் கழன்றது. உள்ளேயிருந்த மைனர் சங்கிலி வெளியே வந்து ஆடிற்று. சங்கிலியின் முனையில் கோத்திருந்த வினாயகர் பதக்கம் சுபாவின் கண்முன்னே ஆடியது.

ஏற்கெனவே அவளுக்குள் எழுந்திருந்த வினோதமான சக்தி, இப்போது அதிகரித்தது. அவளுடைய பார்வையைக் கண்டு சரவணமுத்துவே சற்று நிலைகுலைந்தார். இருந்தாலும் ஆசை வெறி மறுபடியும் உந்த, அவளைத் தன்னோடு சேர்க்க அணைத்தார்.

சுபா இப்போது சுபாவாக இருக்கவில்லை. வேறொருத்தியாக ஆகியிருந்தாள். 'த்யாயேத் ஸிம்ஹகதம் விநாயகம், அமும் திக்பாஹு மாத்யேயுகே' என்ற ஸ்ரீ கணேச கவசத்தின் முதல் அடிகளைச் சொன்னவள், தன்னைப் பிடிக்க முயலும் சரவணமுத்துவின் கைமீது ஓர் அடி கொடுத்தாள். அந்த ஒரே அடியில் சரவண முத்துவுக்குப் பொறி கலங்கிற்று. ஆயிரம் இடிகள் தலைமீது விழுந்த மாதிரி [illegible]கிறுத்து, அறையின் மறு கோடிக்குப் போய்ச் சுவரில் சாய்ந்தார். இன்னொரு முறை அவளை நெருங்குவதைப் பற்றி நினைக்கக்கூட அவருக்கு நடுக்கமாயிருந்தது.

சுபா அவரைப் பொருட்படுத்தவில்லை. ஸ்ரீ கணேச கவசத்தின் மற்ற அடிகளையும் சொன்னவாறு தன் நினைவில்லாமலே கதவைத் திறந்தாள். நடந்தாள்.

சாவி கொடுத்த பொம்மை போல இரண்டு கைகளையும் நீட்டிக் கொண்டு அவள் வெளியே வரவும், ''சுபா!'' என்று மனோஜ் சரேலெனத் தாங்கிக் கொள்ளவும் சரியாயிருந்தது.

அவர்கள் வந்திறங்கிய காரில் அவளை ஏற்றி உட்கார்த்தி வைத்தான். இன்னும் தூக்கத்தில் ஆழ்ந்திருப்பவள் போலவே அவள் இருந்தாள்.

வீட்டுக்குள்ளிருந்து அவளைத் தொடர்ந்து, வேட்டியும் சட்டையும் அலையக் குலைய ஓடிவந்த சரவணமுத்து, தன் தம்பி பழனிமுத்துவையும் அவருடன் வந்திருந்த போலீஸ் இன்ஸ்பெக்டரையும் கண்டு அதிர்ச்சியடைந்து நின்றார்.

''டேய் சரவணா! என்னையா மாட்ட வைக்கப் பார்த்தே? இப்ப என்னாச்சு கவனிச்சியா?'' என்று பெருமையுடன் மார் தட்டிக் கொண்ட பழனி முத்து, ''என்ன இன்ஸ்பெக்டர், சும்மா நிற்கிறீங்க? அந்தப் பெண்ணை இவன்தான் அடைச்சு வைச்சிருந்தான்னு கையும் களவுமாய் நிரூபிச்சாச்சு இல்லே?'' என்றார்.

சரவணமுத்து அதற்குள் நிதானம் பெற்றுவிட்டார். தோரணையான குரலில், ''இன்ஸ்பெக்டர், என் தம்பி எப்பவும் இப்படித்தான் அடாவடி பேசுவான். அந்தப் பெண்ணை இவன்தான் கடத்திட்டு வந்து அடைச்சு வச்சிருந்தான். அதை இவன் வாயாலே ஒப்புக்கிட்ட டேப் என்னிடம் இருக்கு. அந்தப் பெண்ணை இவன் வைச்சிருந்த இடத்தைக் கண்டு பிடிச்சு நான் அழைச்சிட்டு வந்து காப்பாத்தினேன். உங்க கையிலே தகவல் தெரிவிக்கிறதுக்குள்ளே நீங்க வந்துட்டீங்க!'' என்றார்.

''பொய்! பொய்! அந்தப் பொண்ணு என்ன மாதிரியான நிலைமையில் வெளியே வந்தது, பார்த்தீங்க இல்லே!'' என்று பழனிமுத்து கத்தினர்.

மனோஜ் குறுக்கிட்டு, ''இன்ஸ்பெக்டர், முதலில் நான் சுபாவை அழைத்துக் கொண்டு போகிறேன். அவளை டாக்டரிடம் காட்டியாகணும்,'' என்றான் அவசரமாக.

''யெஸ், நீங்க போங்க,'' என்று அனுமதித்தவர், ''சார், உங்க இரண்டு பேர் சண்டையையும் போலீஸ் ஸ்டேஷனில் தீர்த்துக்கலாம். தயவு பண்ணி முரண்டு பண்ணாமல் வாங்க,'' என்றார் பழனிமுத்துவையும் சரவணமுத்துவையும் பார்த்து.

அண்ணனும் தம்பியும் ஒருவரையொருவர் வெறியுடன் முறைத்துக் கொண்டார்கள். குறுக்கே ஒரு போலீஸ் அதிகாரி மட்டும் நின்றிராவிட்டால் இவருடைய விரல்கள் அவருடைய கழுத்தையும் அவருடைய விரல்கள் இவருடைய கழுத்தையும் நெரித்திருக்கும்.

அடுத்த பௌர்ணமியன்று மனோஜும் சுபாவும் முதலிரவுக் கட்டிலில் இருந்தார்கள்.

அன்று காலை அவர்களுக்குத் திருமணம் முடிந்திருந்தது. பகல் பூரா உட்காருவதும் எழுந்திருப்பதும் நமஸ்கரிப்பதும் வாழ்த்துக் கூறுபவர்களுக்கு நன்றி சொல்வதுமாக உடம்பை வருத்திக் கொண்டதன் அடையாளமாகச் சுபாவின் முகத்தில் களைப்பு சிறிது தென்பட்ட போதிலும், அதையும் மீறி ஆனந்தத்தின் பிரகாசம் பரவியிருந்தது. ஆனால் மனோஜ் அப்படி இருக்கவில்லை. ஜன்னலுக்கு வெளியே தெரியும் முழு நிலவைப் பார்ப்பதும் அவள் கண்களைச் சந்திப்பதுமாக இருந்தான். உள்ளுக்குள் ஒரு கவலை அவனை அரித்துக் கொண்டிருந்தது.

''ஏன் என்னவோ போலம.....'' என்று ஆரம்பித்தவள் நாணத்துடன் தலை கவிழ்ந்தாள்.

''என்ன பாதியில் நிறுத்தி விட்டாய்?'' என்று அவள் மோவாயை நிமிர்த்தினன் அவன்.

பட்டுப் புடவையின் நுனியைத் திருகிக் கொண்டு பள்ளிக்கூடச் சிறுமியைப் போல அவள் வெட்கத்தின் வசப்பட்டாள்.

''சொல்லு.''

''ஒண்ணுமில்லை. முன்போல உங்கள் பெயரைச் சொல்ல.... நீ என்று பேச... வாயில் வந்துவிட்டது,'' என்று அவன் தோள்களை அணைத்துக் கொண்டு சிரித்தாள் அவள்.

''சுபா, தனியா இருக்கிறப்பவெல்லாம் நீ என்னைப் பெயர் சொல்லியே கூப்பிடணும். நீன்னே பேசணும்.''

''சீ!'' என்று பொய்க் கோபம் காட்டியவள், அவன் பார்வை மறுபடியும் ஜன்னலுக்கு வெளியே செல்வதைக் கண்டு, ''வந்து.... ஏன் என்னவோ போலிருக்கீங்க? அதுதான் கேட்டேன்,'' என்றாள்.



திருடன்: மரியாதையா, வீட்டுல இருக்கிற பணம், நகை எல்லாத்தையும் எடு...

அவர்: எங்க வீட்டிலே ஒண்ணுமே இல்லேப்பா... பக்கத்து வீட்டுக்காரங்க சாவியைக் கொடுத்துட்டு ஊருக்கு போயிருக்காங்க... வேணும்னு அவங்க சாவியைத் தர்றேன்.

—விழி. சாரகு.

# பொடுகுத் தொல்லையா?
(DANDRUFF?)

நண்பர்களையும், தலைமுடியையும்
இழந்து விடாதீர்கள்!

# ஸெல்டான்

ஸெலினியம் ஸல்ஃபைட் லோஷன்

பயன்படுத்தி, பொடுகை அகற்றுங்கள்.



மேலும் லாபம்!
இரு மடங்கு பெரிய
பாட்டில் (120 ml)
ஸெல்டான்
ரூ. 17.30
மட்டுமே!




பொடுகு, மிகுந்த தொல்லை
தரக்கூடியது. தலையில் அரிப்பு,
மற்றவர்முன் சங்கடமான நிலைமை,
முகப்பரு, கண் நோய், சிறு தொற்று
நோய்கள் ஆகியவை வரக்கூடும்.
தலைமுடி கொட்டிவிடும் அபாயமும்
உண்டு. பொடுகைக் கட்டுப்படுத்த
சோப்புகளும், ஷாம்புகளும் போதாது.
பொடுகை அறவே அகற்றிடக்
கூடியது, ஸெல்டான். இதில் உள்ள
விசேஷ மூலப்பொருள்—ஸெலினியம்
ஸல்ஃபைட் யு.எஸ். ஃபார்மகோபியா—
உலகம் முழுவதும் பெரும்பாலான
டாக்டர் சிபாரிசு செய்யும் ஃபார்முலா.

SLS அடங்கிய ஸெல்டான்
கொண்டு பொடுகை
அகற்றுங்கள்.

**அநேக டாக்டர்கள்
சிபாரிசு செய்யும்
ஒரே ஃபார்முலா**

மவுண்ட் மேட்டூர்
ஃபார்மசூட்டிகல்ஸ் லிமிடெட்
திருவான்மியூர், சென்னை-600 041.

ADWAVE/MMPL/2811/Tamil

''இல்லே, சுபா.... அந்தப் பௌர்ணமி நிலவைப் பார்த்தால் பயமா யிருக்கு,'' என்றான் அவன்.

''ஹூம்! உங்களுக்குக் கவிதை உணர்ச்சியே கிடையாது. முதலிரவும் பௌர்ணமியும் சேர்ந்தால் ஒவ்வொருத்தர் என்னமாய் அசடு வழிவாங்க!''

அவன் அவள் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். இவ்வளவும் நடந்தான பிறகு இவளிடம் எல்லாவற்றையும் சொல்லி விடுவதுதான் நல்லது. இவள் தன்னை உணர்ந்துவிட்டால், இனி என்றென்றும் அந்தக் கோளாறு இருக்காது....

''இப்படிப் படுத்துக் கொள். சொல்கிறேன்,'' என்று கூறி, கட்டிலின் ஓரத்துக்கு நகர்ந்து கொண்டான். அவள் அவன் மடியில் தலைவைத்து, அண்ணாந்து அவனைப் பார்த்தாள். தன்னை விழுங்கி விடுவது போல அந்த அழகிய கரு விழிகள் மெல்லச் சுழல்வதை ரசித்தபடி, அவளுடைய பட்டுக் கூந்தலை மெல்ல வருடிக் கொடுத்தபடி, அவன் சிறிது சிறிதாக எல்லாவற்றையும் சொல்லி முடித்தான்.

அவள் கொஞ்ச நேரம் மௌனமாக இருந்தாள். ''சுலோசனா எனக்காக எத்தனை பாடுபட்டிருக்கிறாள், பாவம். பயப்படாதீர்கள். இனிமேலும் அவளே துணையிருப்பாள். என்னைக் காப்பாற்றுவாள். எனக்கு ஒரு கெடுதலும் இனிமேல் வராது. என் வியாதி என்னை விட்டுப் போய்விட்டதென்று எனக்கு நிச்சயமாய்த் தெரிகிறது.....'' என்றாள்.

அவள் குரலில் தொனித்த தன்னம்பிக்கை அவனுக்கு உற்சாக மூட்டி

அழுந்த [illegible]

''ஆனால்.... இ[illegible] திருக்கிறது.... என்னைத் தவிர எல்லாருக்கும் என்னைப் பற்றித் தெரிந்திருக்கிறது. வேடிக்கையாயில்லே?'' என்றாள்.

''நானும் அதையே தான் நினைக்கிறேன். என்னைப் பற்றி எல்லோருக்கும் ஒன்று தெரிந்திருக்கிறது. எனக்கு அது தெரியவில்லே, பார்!'' என்றான் மனோஜ்.

''உங்களுக்கா.... உங்களுக்கென்ன?''

''நான் ஒரு மடையன் என்பது தான். அது என்னைத் தவிர எல்லாருக்கும் தெரியும். ஸ்ரீரங்கத்திலிருந்து என்னிக்கு வந்தேனோ அன்னிக்கே உன்னைக் கல்யாணம் செய்து கொண்டிருக்கணும். அட, அதுதான் இல்லே. இப்பக் கூட இந்தப் பொன்னான நேரத்தில் இப்படிப் பேசிட்டிருக்கிறேன், பாரேன்!''

அவன் விளக்கை அணைத்தான். அவள் அவனை அணைத்தாள்.

[முற்றும்]



அவன்: ''என்னடா, இந்தக் கொடியில் திருவோடு அச்சிட்டிருக்கு?

இவன்: ''பிச்சைக்காரர்கள் சங்கத்தின் கொடி இது!''

—உ. ராஜாஜி

"இல்லை, சுபா.... அந்தப பௌர்ணமி நிலவைப் பார்த்தால் பயமா யிருக்கு," என்றான் அவன்.

"ஹூம்! உங்களுக்குக் கவிதை யுணர்ச்சியே கிடையாது. முதலிரவும் பௌர்ணமியும் சேர்ந்தால் ஒவ்வொருத்தர் என்னமாய் அசடு வழிவாங்க!"

அவன் அவள் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். இவ்வளவும் நடந்தான பிறகு இவளிடம் எல்லாவற்றையும் சொல்லி விடுவதுதான் நல்லது. இவள் தன்னை உணர்ந்துவிட்டால், இனி என்றென்றும் அந்தக் கோளாறு இருக்காது....

"இப்படிப் படுத்துக் கொள். சொல்கிறேன்," என்று கூறி, கட்டிலின் ஓரத்துக்கு நகர்ந்து கொண்டான். அவள் அவன் மடியில் தலைவைத்து, அண்ணாந்து அவனைப் பார்த்தாள். தன்னை விழுங்கி விடுவது போல அந்த அழகிய கரு விழிகள் மெல்லச் சுழல்வதை ரசித்தபடி, அவளு டைய பட்டுக் கூந்தலை மெல்ல வருடிக் கொடுத்தபடி, அவன் சிறிது சிறிதாக எல்லாவற்றையும் சொல்லி முடித்தான்.

அவள் கொஞ்ச நேரம் மௌனமாக இருந்தாள். "சுலோசனா எனக்காக எத்தனை பாடுபட்டிருக்கிறாள், பாவம். பயப்படாதீர்கள். இனிமேலும் அவளே துணையிருப்பாள். என்னைக் காப்பாற்று வாள். எனக்கு ஒரு கெடுதலும் இனிமேல் வராது. என் வியாதி என்னை விட்டுப் போய்விட்டதென்று எனக்கு நிச்சய மாய்த் தெரிகிறது....." என்றாள்.

அவள் குரலில் தொனித்த தன்னம்பிக்கை அவனுக்கு உற்சாக மூட்டி அழுந்த ...

"ஆனால்.... ...திருக்கிறது.... என்னைத் தவிர ...ருக்கும் என்னைப் பற்றித் தெரிந்திருக்கிறது. வேடிக்கையாயில்லை?" என்றாள்.

"நானும் அதையே தான் நினைக்கிறேன். என்னைப் பற்றி எல்லோ ருக்கும் ஒன்று தெரிந்திருக்கிறது. எனக்கு அது தெரியவில்லை, பார்!" என்றான் மனோஜ்.

"உங்களுக்கா.... உங்களுக் கென்ன?"

"நான் ஒரு மடையன் என்பது தான். அது என்னைத் தவிர எல்லாருக்கும் தெரியும். ஸ்ரீரங்கத்திலிருந்து என்னிக்கு வந்தேனோ அன்னிக்கே உன்னைக் கல் யாணம் செய்து கொண்டிருக்கணும். அட, அதுதான் இல்லை. இப்பக் கூட இந்தப் பொன்னான நேரத்தில் இப்படிப் பேசிட்டி ருக்கிறேன், பாரேன்!"

அவன் விளக்கை அணைத்தான். அவள் அவனை அணைத்தாள்.

[முற்றும்]



அவன்: "என்னடா, இந்தக் கொடியில் திருவோடு அச்சிட்டிருக்கு?

இவன்: "பிச்சைக்காரர்கள் சங் கத்தின் கொடி இது!"

—உ. ராஜாஜி